# தொல்காப்பியம் உரைவளம்

## பொருளதிகாரம்

## செய்யுளியல் பகுதி - 4




தொகுப்பும் குறிப்பும்

ஆ. சிவலிங்கனார்

# தொல்காப்பியம் உரைவளம்
## பொருளதிகாரம்
## செய்யுளியல் பகுதி - 4

தொகுப்பும் குறிப்பும்
ஆ. சிவலிங்கனார்




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES
டி.டி.டி.ஐ. (அஞ்சல்), தரமணி, சென்னை 600 113

தொல்காப்பியம் - உரைவளம்
வெளியீட்டுத் திட்டம்

வெளியீடு

# BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title | : | Tolkappiyam Uraivalam Ceiyuliyal Part IV |
| Subject | : | Compilation of the Commentaries of Tolkappiyam Ceiyuliyal |
| Editor | : | A. Sivalinganar |
| Publisher | : | International Institute of Tamil Studies, C.I.T. Campus, Tharamani, Chennai - 600 113 |
| Publication No | : | 282 |
| Language | : | Tamil |
| Date of Publication | : | 1998 |
| Edition | : | First |
| Paper used | : | TNPL 16 kg Super Printing |
| Size of the book | : | 21 x 14cms |
| No. of pages | : | xi + 178 |
| Price | : | Rs.42/- |
| No. of Copies | : | 1000 |
| Printers | : | Annam Offset Printers, 25 C.N.K. Salai, Chepauk, Chennai - 600 005. ☎ 858 8466 |

டாக்டர் ச. சு. இராமர் இளங்கோ
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
தரமணி, சென்னை-600 113

# அணிந்துரை

**"திங்களொடும் செழும்பரிதி தன்னோடும் விண்ணோடும்
உடுக்க ளோடும்
மங்குல்கடல் இவற்றோடும் பிறந்ததமி ழுடன்பிறந்தோம்
நாங்கள்!"**

என்று பாவேந்தர் பாரதிதாசன் தமிழினத்தின் பெருமையைப் பாடுவார்.

தமிழினத் தொன்மைக்குக் கட்டியங்கூறும் தொல்காப்பியம், எழுத்துக்கும் சொல்லுக்கும் மட்டுமன்றிப் பொருளுக்கும் இலக்கணம் வகுத்த பெருமை உடையது. இதற்கு வெளிவந்த உரைகளே இதன் ஆழத்தையும், அகலத்தையும் வெளிக் கொணரும். எனவே, தொல் காப்பியத்தின் பெருமையை எடுத்தியம்பும் வகையில் உரைவளம் எழுதும் திட்டப்பணிக்காகப் பேராசிரியர் ஆ. சிவலிங்கனார் அவர்கள் இந் நிறுவனத்தில் 1980ஆம் ஆண்டு நியமிக்கப்பட்டார். அவருடைய முதல் திட்டப்பணி நூலான 'தொல்காப்பியச் சிறப்புப் பாயிர உரைவளம்' 27-9-80-ல் அப்போதைய மதுரைக் காமராசர் பல்கலைக் கழகத் துணைவேந்தர் முனைவர் வ. சுப. மாணிக்கம் அவர்களால் வெளியிடப் பெற்றது.

தொடர்ந்து எழுத்ததிகாரத்திற்கும், சொல்லதிகாரத்திற்கும் அவர் தொகுத்த உரைவளம் வெளிவந்தது. பொருளதிகாரத்தில் மரபியல் 1981-லும், அகத்திணையியல் 1991-லும், கற்பியல் 1993-லும், பொருளியல், களவியல் 1994-லும், புறத்திணையியல் பகுதி-1, பகுதி-2 1996-லும், செய்யுளியல் பகுதி-1 1997-லும் வெளிவந்தன.

தொல்காப்பிய உரைவளத் திட்டத்தின் 30ஆவது வெளியீடாகச் செய்யுளியல் நான்காம் பகுதி எனும் இந் நூல் அமைகிறது.

பேராசிரியர் ஆ. சிவலிங்கனார் அவர்கள் நுண்மாண் நுழைபுலம் பெற்ற பெரும் புலவர்; பழம்பெரும் தொல்காப்பிய உரையாசிரியர்களான இளம்பூரணர், நச்சினார்க்கினியர், பேராசிரியர் ஆகியோரது உரைகளைத் தொகுத்து அவற்றுடன் தம்முடைய உரையினையும் இணைத்து இந் நூலினை அமைத்துள்ளார். தொல்காப்பியத்தில் ஆய்வினை

மேற்கொண்டு முனைவர் பட்டம் பெற்ற முனைவர் சி. இலக்குவனார் அவர்களின் ஆங்கில மொழிபெயர்ப்பையும் மேற்கோள் காட்டியுள்ளார்.

இவரது தொல்காப்பியப் புலமையைப் பாராட்டும்முகத்தான் 4, 5, 6-8-97களில் நடைபெற்ற 'தொல்காப்பிய இலக்கியக் கோட்பாடுகள்' தேசியக் கருத்தரங்கின்போது நிறுவனம் அவருக்குத் **'தொல்காப்பியச் செம்மல்'** என்ற விருது வழங்கிப் பாராட்டிச் சிறப்பித்தது.

இந் நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருகின்ற நிறுவனத் தலைவர் மற்றும் தமிழ் ஆட்சிமொழி - பண்பாடு மற்றும் இந்துசமய அறநிலையத் துறை அமைச்சர் மாண்புமிகு முனைவர் மு. தமிழ்க்குடிமகன் அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சி - பண்பாட்டுத் துறைச் செயலாளர் திருமிகு த. இரா. சீனிவாசன், இ.ஆ.ப. அவர்களுக்கும் நிறுவனத்தின் சார்பில் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந் நூலின் படிகளை மெய்ப்புத் திருத்திய பெரும்புலவர் அ. நக்கீரர் அவர்களுக்கும் நூலின் முதலில் அமைந்துள்ள சூத்திர நுவல்பொருள், இறுதியில் அமைந்துள்ள சூத்திர முதற்குறிப்பு அகராதி, சொல்லகராதி ஆகியவற்றைச் செய்து தந்த திருமிகு கோ. உத்திராடம் அவர்களுக்கும், இந் நூலினைக் கவினுற அச்சடித்துத் தந்த அன்னம் மறுதோன்றி அச்சகத்திற்கும் எங்கள் நன்றி.

**இயக்குநர்**

# SYSTEM OF TRANSLITERATION

## உயிரெழுத்துகள் Vowels

| | | | |
|---|---|---|---|
| அ - | a | எ - | e |
| ஆ - | ā | ஏ - | ē |
| இ - | i | ஐ - | ai |
| ஈ - | ī | ஒ - | o |
| உ - | u | ஓ - | ō |
| ஊ - | ū | ஔ - | au |

## மெய்யெழுத்துகள் - Consonants

| | | | | | |
|---|---|---|---|---|---|
| க் - | k | ங் - | ṅ | ய் - | y |
| ச் - | s | ஞ் - | ñ | ர் - | r |
| ட் - | t | ண் - | ṇ | ல் - | l |
| த் - | th | ந் - | n | வ் - | v |
| ப் - | p | ம் - | m | ழ் - | ḻ |
| ற் - | ṟ | ன் - | ṉ | ள் - | ḷ |

# சுருக்க விளக்கம்

அகம் - அகநானூறு
ஆய்ச்சி - ஆய்ச்சியர் குரவை
இ.வி - இலக்கண விளக்கம்
இ-ள் - இதன் பொருள்
இடை - இடையியல்
இளம் - இளம்பூரணர்
இறையனார் - இறையனார் அகப்பொருள்
உ-ம் - உதாரணம்
எ-டு - எடுத்துக்காட்டு
எச் - எச்சவியல்
எழுத்து - எழுத்ததிகாரம்
எ-று - என்றவாறு
என்-னின் - என்னுதற்றோ வெனின்
ஐங்குறு - ஐங்குறுநூறு
கலி - கலித்தொகை
குறள் - திருக்குறள்
குறுந் - குறுந்தொகை
சிலப் - சிலப்பதிகாரம்
சூ - சூத்திரம்
சூளா - சூளாமணி
செய் - செய்யுளியல்
சொல் - சொல்லதிகாரம்
திருச்சிற். - திருச்சிற்றம்பலக் கோவை
தொல் - தொல்காப்பியம்
தொன் - தொன்னூல் விளக்கம்
நச் - நச்சினார்க்கினியர்
நற் - நற்றிணை
நாலடி - நாலடியார்
நெடுநல் - நெடுநல்வாடை
பட்டினப் - பட்டினப்பாலை
பதிற் - பதிற்றுப்பத்து
பி.இ.நூ - பிற்கால இலக்கண நூல்கள்
புறம் - புறநானூறு
பேரா - பேராசிரியர்
மலைபடு - மலைபடுகடாம்
மு.வீ. - முத்துவீரியம்
முத்தொள் - முத்தொள்ளாயிரம்
முருகு - திருமுருகாற்றுப்படை
யா.கா யாப்பருங்கலக் காரிகை
யா.வி - யாப்பருங்கல விருத்தி
வீர - வீரசோழியம்

# சூத்திர நுவல்பொருள்

463. புறநிலை வாழ்த்தும், வாயுறை வாழ்த்தும், செவியறிவுறூஉவும் மருட்பாவினால் வரப்பெறும் எனக் கூறுகிறது.
464. பரிபாடற் செய்யுள் நானூறடி உயர்பாகவும், இருபத்தைந்தடி இழிபாகவும் வரும் என்று கூறுகிறது.
465. பாக்களின் அடியளவின் கூறுபாடு மேலே கூறிவந்த அத்துணைப் பகுதிப்படும் எனக் கூறுகிறது.
466. எழுநிலமாவன பாட்டு, உரை, நூல், வாய்மொழி, பிசி, அங்கதம், முதுசொல் என்பன. அவற்றுள் பாட்டொழிந்த ஆறும் அடி வரையிலவாம்.
467. மேற்சொல்லப்பட்ட அறுவகையும் விளக்குகிறது.
468. நூலினது இலக்கணம் கூறுகிறது.
469. மேற்கூறப்பட்ட நூல் நான்கு வகைப்படும் எனக் கூறுகிறது.
470. அந் நான்கற்கும் பெயரும், இயல்பும்பற்றிக் கூறுகிறது.
471. சூத்திரமானது, கண்ணாடியின் நிழலைப்போல் விளங்கத் தோன்றி, ஆராயாமற் பொருள் நன்றாக விளங்குமாறு பாட்டின்கண்ணே தோன்றப் பாடியமைப்பதாம் எனக் கூறுகிறது.
472. ஒரேவகையான மணியை வரிசையாக வைத்தாற் போல ஒரே வகையான பொருளை ஓரிடத்தே அமைத்து வைத்தலை உயர்ந்த மொழிகளையுடைய புலவர் ஓத்து எனக் கூறுவர் எனக் கூறுகிறது.
473. ஓரினமாகிய நெறியல்லாமல், பல வகையான பொருள்களும் கலந்து பொதுமொழியால் தொடர்வுபடின் அது படலம் எனப்படும் என்று கூறுகிறது.
474. மூன்று உறுப்பினையும் அடக்கிய தன்மையுடையதாயின் அதனைப் புலவர் பிண்டம் என்று கூறுவர் எனக் கூறுகிறது.
475. உரைவகை நான்கு வகைப்படும் எனக் கூறுகிறது.
476. அந் நால்வகையும் இருவகைப்படும் என்று கூறுகிறது.
477. மகளிர்க்கு உரைக்கும் உரை செவிலிக்குரியது என்றும், மைந்தர்க்கு உரைக்கும் உரை எல்லார்க்கும் உரியது என்றும் கூறுகிறது.
478. ஒப்புமைக் குணத்தோடு பொருந்தி வரும் உவமப் பொருளானும் ஒன்று சொல்ல ஒன்று தோன்றுந் துணிவிற்காகச் சொல்லும் சொல்லானும் இருவகைப்படும் என்று கூறுகிறது.
479. நுண்மை, சுருக்கம், ஒளி, மென்மை இத்தகையன விளங்குமாறு தோன்றிக் கருதின பொருளை முடித்தற்கு வரும் ஏதுவைக் குறிக்கும் முதுமொழி என்று கூறுகிறது.
480. நிறைந்த மொழியினையுடைய மாந்தர் தமது ஆணையால் சொல்லப்பட்ட மறைந்த மொழிதான் மந்திரம் எனக் கூறுகிறது.
481. எழுத்தோடுஞ் சொல்லோடுஞ் சேராதாகிச் சொல்லினால் உணரப் படும் பொருளின் புறத்ததுவே குறிப்புமொழியாகும் எனக் கூறு கிறது.

482. பண்ணைத் தோற்றுவிக்கும் செய்யுள்கள் பாட்டினிடத்துக் கலந்த பொருளை உடையனவாகிப் பாட்டுகளின் இயல்பை உடையது பண்ணத்தி எனக் கூறுகிறது.
483. மேற்கூறப்பட்ட பண்ணத்தி பிசியோடொத்த அளவினை உடையது எனக் கூறுகிறது.
484. பண்ணத்தியின் அடிவரையறை கூறுகிறது.
485. சொன்னவகையினால் சொல்லப்பட்டவற்றை ஆராயுமிடத்து, அளவியல்வகை அத்துணை வகையாகப் பாகுபடுவதாகும் எனக் கூறுகிறது.
486. திணையாவது கைக்கிளை, முல்லை, குறிஞ்சி, பாலை, மருதம், நெய்தல், பெருந்திணை என்பன. அவை முறைமையினால் முன்பே கூறப்பட்டன எனக் கூறுகிறது.
487. நால்வகைப் புணர்ச்சியினானும் அவற்றைச் சார்ந்த நிமித்தங்களானும் நிகழ்வது களவு எனக் கூறுகின்றது.
488. களவொழுக்கம் வெளிப்படுதலும், களவொழுக்கமின்றி உறவினரால் பெறுதலும் இயற்கை நெறியில் தப்பாது மகிழ்தலும், புலத்தலும், ஊடலும், ஊடல் தீர்தலும், பிரிதலும் என்று சொல்லப்பட்ட இவற்றோடுங் கூடிவருவது கற்பு எனக் கூறுகிறது.
489. கைகோள் வகையாவன பொருள்பெற வந்த மேற்கூறப்பட்ட களவு, கற்பு என்றும் இருவகையாம் என்று கூறுகிறது.
490. களவிற் கூற்று நிகழ்த்தற்கு உரியோரைப்பற்றிக் கூறுகிறது.
491. கற்பிற் கூற்று நிகழ்த்தற்கு உரியோர் பன்னிருவர் எனக் கூறுகிறது.
492. பிறர் கூற்று நிகழ்த்தற்கு உரியோரைப்பற்றிக் கூறுகிறது.
493. நற்றாய் கூற்றின் இயல்புகளைக் கூறுகிறது.
494. ஒண்டொடி மாதராவார், நற்றாயும் தோழியும் செவிலியும் இவரொடுந் தலைவனொடும் தலைவியொடுங் கண்டோர் கூற்று நிகழும் என்று கூறுகிறது.
495. உடன்போக்கில் தலைவன் கூற்று நிகழுமிடம்பற்றிக் கூறுகிறது.
496. தலைமக்களல்லார் கூற்று நிகழுமிடம்பற்றிக் கூறுகிறது.
497. தலைவனின் மொழியையும், தலைவியின் மொழியையும் நினைக்கும் போது கேட்பவர்கள் அவரேயாவர் எனக் கூறுகிறது.
498. பார்ப்பார், அறிவர் என்று சொல்லப்பட்ட இருவர் கூற்றையும் இயைபொடு பொருத்தி எல்லாருமே கேட்கப்பெறுவர் எனக் கூறுகிறது.
499. பரத்தை என்று சொல்லப்பெறும் வேறுபாட்டினும் வாயில் என்று சொல்லப்பெறும் வேறுபாட்டினும் தலைமகளைச் சுட்டாத கூற்றுப் பயனில்லை எனக் கூறுகிறது.
500. வாயில் உசாவுமிடத்துக் கிழத்தியைச் சுட்டாது தம்முன் உசாவுதல் உரிமையாகும் என்று கூறுகிறது.
501. ஞாயிறு முதல் நெஞ்சு ஈறாகச் சொல்லப்பட்ட பதினொன்றும் அத்தன்மையன பிறவும் தாம் கருதிய நெறியினால் சொல்லுவன போலவும் கேட்குந போலவும் சொல்லி அமையப்பெறும் என்று கூறுகிறது.

502. ஒருவழிப்பட்டு ஓரியல்பாக முடியும் கரும நிகழ்ச்சி இடம் என்று கூறுகிறது.
503. மூன்று காலத்தினும் நிகழ்கின்ற நிகழ்ச்சி அச் செய்யுட்டோன்றச் செய்யிற் காலமென்னும் உறுப்பாம் எனக் கூறுகிறது.
504. இது மிகவும் பயக்கும் இதனானெனத் தொகுத்துக் கூறப்படும் பொருளும் பயனென்னும் உறுப்பாம் என்று கூறுகிறது.
505. பொருண்மையை விசாரித்து உணர்தலில்லாமல் அவ்விடத்தில் வரும் பொருட்டன்மையானே மெய்ப்பாடு தோன்ற முடிப்பது மெய்ப்பாடு எனும் உறுப்பாம் என்று கூறுகிறது.
506. நகை முதலாகிய எட்டு மெய்ப்பாட்டு நெறியையும் பிழையாதாகி மேற்சொல்லப்பட்ட இலக்கணத்தை உடையன எனக் கூறுகிறது.
507. சொல்லோடும் குறிப்போடும் முடிவைக் கொள்ளுகிற இயற்கை பொருந்திய செய்யுள் எச்சம் எனக் கூறுகிறது.
508. இவ்விடத்தில் இம்மொழியை இவர்க்குச் சொல்லத்தகும் எனக் குறித்து அவ்விடத்து அம்மொழியை அவர்க்கு உரைப்பது முன்னம் எனக் கூறுகிறது.
509. இன்பமும், துன்பமும், புணர்வும், பிரிவும், ஒழுக்கமும் என்று சொல்லப்பட்டவை வழுவுநெறியில்லாமல், இத்திணைக்குரிய பொருள் இப்பொருள் என்னாது எல்லாப் பொருட்கும் பொதுவாகி நிற்கும் பொருளைப் பொருள்வகையாம் எனக் கூறுகிறது.
510. மக்களும், மாவும், புள்ளும் ஓதிவந்தவா றல்லாமல் வேறுவகையாகச் செய்யினும் அவ்வத் திணைக்கேற்ற இலக்கணமும் வரலாற்று முறைமையும் மாறுபடாமற் செய்யின் அது துறை எனக் கூறுகிறது.
511. அகன்று பொருள் கிடப்பச் செய்யினும் அணுகிக் கிடப்பச் செய்யினும் இருவகையானும் சென்று பொருள் முடியுமாற்றால் கொணர்ந்துரைப்பச் செய்தலை மாட்டு என்று கூறுகிறது.
512. மேற்கூறிய எச்சமும் மாட்டும் நிலைபெறுத்தல் இன்றியும் அச் செய்யுளுள் கிடந்தவாறே பொருள் அமையுமாறுஞ் செய்யுள் செய்யப்பெறும் என்று கூறுகிறது.
513. வண்ணமாவன இருபது எனக் கூறுகிறது.
514. இருபது வண்ணங்களின் பெயர்களைக் கூறுகிறது.
515. பாஅ வண்ணமாவது சொற்சீரடியாகி நூலின்கண் பயின்று வரும் என்று கூறுகிறது.
516. தாஅ வண்ணமாவது இடையிட்ட எதுகையான் வரும் எனக் கூறுகிறது.
517. வல்லெழுத்து மிகுந்து வருவது வல்லிசை வண்ணம் என்று கூறுகிறது.
518. மெல்லிசை வண்ணம் மெல்லெழுத்து மிகுந்து வரும் எனக் கூறுகிறது.
519. இடையெழுத்து மிகுந்து வருவது இயைபுவண்ணம் என்று கூறுகிறது.
520. அளபெடை பொருந்தி வருவது அளபெடை வண்ணம் எனக் கூறுகிறது.
521. நெட்டெழுத்து மிகுந்து வருவது நெடுஞ்சீர் வண்ணம் எனக் கூறுகிறது.

522. குற்றெழுத்துப் பயின்று வருவது குறுஞ்சீர் வண்ணம் என்று கூறுகிறது.
523. நெட்டெழுத்தும் குற்றெழுத்தும் சார்ந்துவருவது சித்திர வண்ணமாம் எனக் கூறுகிறது.
524. ஆய்தம் பயின்றுவருவது நலிபுவண்ணம் என்று கூறுகிறது.
525. அகப்பாட்டு வண்ணமாவது முடியாத் தன்மையான் முடிந்ததன் மேலது எனக் கூறுகிறது.
526. புறப்பாட்டு வண்ணமாவது முடிந்ததுபோன்று முடியாதாகி வருவதாம் என்று கூறுகின்றது.
527. ஓசையாற் ஒழுகிக்கிடப்பது ஒழுகுவண்ணம் என்று கூறுகிறது.
528. ஒரூஉ வண்ணமாவது நீங்கின தொடையாகித் தொடுப்பது எனக் கூறுகிறது.
529. எண்ணுப் பயின்று வருவது எண்ணுவண்ணம் என்று கூறுகிறது.
530. அறுத்தறுத்தியலுவது அகைப்பு வண்ணம் என்று கூறுகிறது.
531. வஞ்சியுரிச்சீர் பயின்று வருவது தூங்கல் வண்ணம் எனக் கூறுகிறது.
532. ஏந்தல் வண்ணமாவது சொல்லிய சொல்லினானே சொல்லப்பட்டது சிறக்க வருவதாம் எனக் கூறுகிறது.
533. உருட்டு வண்ணமாவது அராகந் தொடுத்துவரும் என்று கூறுகிறது.
534. முடுகு வண்ணமாவது நாற்சீரடியின் மிகுந்து சென்று அராகத்தோடு ஒக்கும் தன்மையுடையது எனக் கூறுகிறது.
535. மேற்கூறப்பட்டவைதாம் வண்ணங்களாவன என்று கூறுகிறது.
536. சிலவாய மெல்லியவாகிய மொழியினானே தொடுக்கப்பட்ட அடி நிமிர்வில்லாத செய்யுள் அம்மை எனக் கூறுகிறது.
537. செய்யுட்குரிய சொல்லினால் சீரைச் சேர்த்துத் தொடுப்பின் அவ்வகைப்பட்ட செய்யுள் அழகு என்று கூறுகிறது.
538. தொன்மையாவது உரையோடு பொருந்திப் போந்த பழைமைத்தாகிய பொருள்மேல் வருவன என்று கூறுகிறது.
539. இழும் என்னும் மொழியினால் விழுமிய பொருளைக் கூறினும், பரந்த மொழியினால் அடிநிமிர்ந்து ஒழுகினும் தோல் என்னுஞ் செய்யுளாம் எனக் கூறுகிறது.
540. விருந்தாவது முன்புள்ளார் சொன்ன நெறிபோய்ப் புதிதாகச் சொன்ன யாப்பின் தோன்றுவது எனக் கூறுகிறது.
541. ஞணநமன யரலவழள என்னும் பதினொரு புள்ளியும் ஈறாக வருஞ் செய்யுள் இயைபு என்று கூறுகிறது.
542. வழக்கச் சொல்லினாலே தொடுக்கப்பட்டு ஆராய வேண்டாமல் பொருள்தோன்றி விளங்குவது புலன் என்று கூறுகிறது.
543. ஒற்றோடு புணர்ந்த வல்லெழுத்து அடங்காது ஆசிரியப்பாவிற்கு ஓதப்பட்ட நாலெழுத்தாதியாக இருபதெழுத்தின் வரையும் உயர்ந்த பதினேழு நிலத்தும் ஐந்தடியும் முறையானே வரத் தொடுப்பது இழைபு எனக் கூறுகிறது.
544. இவ் வோத்திற்கெல்லாம் புறனடை கூறுகிறது.

# பொருளடக்கம்

# தொல்காப்பியம் உரைவளம்

## பொருளதிகாரம்

### செய்யுளியல் பகுதி - 4

#### மருட்பாவும் பொருளும்

**463.* புறநிலை வாயுறை செவியறி வுறூஉவெனத்**
**திறநிலை மூன்றுந் திண்ணிதில் தெரியின்**
**வெண்பா இயலினும் ஆசிரிய இயலினும்**
**பண்புற முடியும் பாவின என்ப. (154)***

**இலக்குவனார்**

473. *Puṟanilai, vayuṟai* and *seviyaṟivuṟuu* these three, if examined well, are the groups of verses which have the form of *venbā* and *āsiriyam.*

**பி.இ.நூ.**

**யா.கா.36**

பண்பார் புறநிறை பாங்குடைக் கைக்கிளை வாயுறைவாழ்த்து
ஒண்பாச் செவியறி என்றிப் பொருள்மிசை ஊனமில்லா
வெண்பா முதல்வந்து அகவல்பின் னாக விளையுமென்றால்
வண்பால் மொழிமடவாய் மருட்பா என்னும் வையகமே.

**வீர. 119**

வெள்ளை முந்தி இறுதி அகவல தாகி முடியுமென்றால்
இந்து நுதல்மட வாய்மருட் பாஎன் றியம்புவரே.

**தொன். 238**

மருட்பா வெண்டளை வந்தபின் அகவல்
ஈற்றின் மருளும் இயல்பிற் றென்ப.

**மு.வீ.யா.செ.61**

புறநிலை கைக்கிளை என்றிப் பொருள்மிசை
வெண்பா முதல்வந்து அகவல்பின் வருவது
மருட்பா எனப்பெயர் வைக்கப் படுமே.

---

* சூத்திரத்தின் முன்னர் உள்ள எண் தொல்காப்பியப் பொருளதிகாரத் தொடர் எண். பின்னர் உள்ள எண் செய்யுளியல் தொடர் எண்

இ.வி. 749

.........................புறநிலை வாழ்த்தும்............................கைக்கிளையும்
..........................வாயுறை வாழ்த்தும்.........................செவியறிவுறூஉவும்
ஆகிய பொருண்மையில் அமைந்தநால் வகைமேல்
வெண்பா முதலாக ஆசிரியம் இறுதி
கொள்ளத் தொடுப்பது மருட்பா வாகும்.

## இளம்பூரணர்

**463. புறநிலை வாயுறை.................................என்ப.**

*என்-னின், மேலனவற்றுட் சில பொருட்குரிய வேறுபாடுணர்த்துதல் நுதலிற்று.*

**(இ-ள்)** புறநிலை வாழ்த்தும் வாயுறைவாழ்த்துஞ் செவியறிவுறூஉவும் மருட்பாவினால் வரப்பெறும் என்றவாறு.

எனவே, மருட்பா நான்கு பொருளினல்லது வரப்பெறாதாயிற்று.

உதாரணம் வந்தவழிக் காண்க. (154)

## பேராசிரியர்

**473. புறநிலை வாயுறை.............................வென்ப.**

*இது, கைக்கிளை மருட்பாவல்லாத மருட்பாவும் அதுவே போல வெண்பா முதலாக ஆசிரியம் பின்வந்து முடியுமென்று ஈண்டு அவற்றுக்கு இடம்பட்டது கண்டு கூறியவாறு; என்னை?*

"மருட்பா வேனை யிருசா ரல்லது
தானிது வென்னுந் தனிநிலை யின்றே" (397)

என்றவழி, ஆசிரியம் முன்னர் நிறீஇப் பின்னர் வெண்பாவினைக் கூறி,

"வெண்பா வியலினு மாசிரிய வியலினும்
பண்புற முடியும் பாவின" (473)

என்றமையின். இங்ஙனம் எண்ணப்பட்ட மூன்று பொருட்கும் இலக்கணம் முன்னர்ப் பாவிரியோத்தினுட் கூறினவற்றுக்கு இன்னவாறு செய்யுள் செய்கவென்றற்கு இது கூறினானென்பது.

**(இ-ள்)** இம் மூன்றும் வெண்பா முன்னும் ஆசிரியம் பின்னுமாய் வரும் என்றவாறு.

'திறநிலை மூன்று' என்றான், முற்கூறியனவெல்லாம் அகத்திணை யாகலின், இவை புறத்திணையுளல்லது வாராவென்றற்கென்பது. 'திண்ணி திற் றெரியின்' என்பது, இவை மூன்றுங் கைக்கிளை மருட்பாப்போல ஆண்பாற் கைக்கிளையும், பெண்பாற் கைக்கிளையுமாகி அகனும்

புறனும்பற்றி வாராது ஒருதலையாகவே புறத்திணையென்று தெரியப் படுவன வென்றவாறு.

இதன் பயம்: கைக்கிளை மருட்பா புறத்திணையானும் வருமென்பது. 'இயல்' என இருகாற் சொல்லியவதனான், இயற்சீர் வெள்ளடியான் வெண்பா வருதல் சிறந்ததெனவும் அதற்கேற்றவகையான் ஆசிரியம் இயற்சீரான் வருதல் சிறந்ததெனவுங் கொள்க. 'பண்புற முடிதல்' என்பது, மேற் சிறுமைக் கெல்லை கூறாமையின் வெண்பாவிற் கிழிபாகிய எழுசீரன்றி எண்சீரான் வரினும், ஆசிரியத்திற்கிழிபாகிய மூன்றடிவரினும் எருத்தடி குட்டமாகி வரினும் அங்ஙனம் மூன்றடி வந்தவழி வெண்பா நான்கு முதற் பன்னிரண்டளவும் உயர்தலும் என இவையே பண்பெனப் படுவன வெனவும், அல்லன சிறப்பில வெனவுஞ் சொல்லினவாறு. இக் கருத்தினான் வெண்பாவடி வரையில வாயினும், ஆசிரியவடி மூன்றிகவா வென்பது கைக்கிளைப் படலத்துள்ளுஞ் சொல்லப்பட்டது; என்னை?

"முச்சீ ரெருத்திற் றாகிமுட் டின்றி
யெச்சீ ரானு மேகாரத் திறுமே" (கடியநன்னியார்-யா.வி.ப.204)

என்றாராகலின். 'பாவின' என்றதனான், இவ்விரு பகுதியுந் தத்தம் பாக்கள் வேறுவேறு பெற நிகழுமென்பது. எனவே இயற்சீர் வெள்ளடி யாசிரியந் தொடுக்குங்கால்,

"எறும்பி யளையிற் குறும்பல் சுனைய
வுலைக்கல் லன்ன பாறை யேறி" (குறுந்.12)

எனப் பாவினை ஒன்றாகத் தொடுத்தாற்போலத் தொடுத்தல் ஈண்டு அமையாதென்றானாம். இவை மூன்றற்கும் உதாரணங் காட்டுங்கால் மேற்காட்டாது நின்ற பாடாண்டிணைக் கைக்கிளை மருட்பாவிற்கு உதாரணங் காட்டியே காட்டப்படும். (161)

## நச்சினார்க்கினியர்

**161. புறநிலை வாயுறை ...................... என்ப.**

*இது, கைக்கிளை மருட்பாவல்லாத மருட்பாவும் அதுவே போல வருமென்றற்கு உடம்பட்டமை கண்டு ஈண்டுக் கூறுகின்றது.*

(இ-ள்) இம் மூன்றும் முன்பு வெண்பாவும் பின்பு ஆசிரியமுமாய் வரும் எ-று.

"மருட்பா வேனை யிருசீ ரல்லது" (செய்.85)

என்றவழி இன்னவாறு வருமென்னாமையின் இது கைக்கிளை மருட்பாப் போல வருமென்றற்கு முன்பு வெண்பா வியலினும் பின்பு ஆசிரிய வியலினும் முடியுமென்று அவை வருமுறை கூறினார். முன்னர் இம்

மூன்று பொருட்கும் இலக்கணங் கூறிப் போந்தவற்றிற்கு இன்ன வாறுஞ் செய்யுட் செய்தல் உரித்தென்று ஈண்டு ஓர் செய்யுள் வேறுபாடு கூறினார்.

இது, புறத்திணையுள்ளல்லது வாராவென்றற்குத் 'திண்ணிதி' னென்றார். எனவே இவை கைக்கிளை மருட்பாப் போல ஆண்பாற் கைக்கிளையும், பெண்பாற் கைக்கிளையுமாய் அகனும் புறனும்பற்றி வாராவென்பது பெற்றாம்.

இயலென்று இருகாற் கூறியவதனான் இரண்டு பாவும் இயற்சீரான் வருதல் சிறப்புடைத்தென்க.

'பண்புற' என்றதனான் வெண்பாவி னிழிபாகிய எழுசீரானன்றி யெண்சீரான் வருதலும், ஆசிரியத்தி னிழிபாகிய மூன்றடி வரினும் எருத்தடி குட்டம்பட்டு வருதலும் வெண்பா நாலடி முதற் பன்னீரடி யளவு முயர்தல் சிறப்புடைத்தெனவும் வெண்பாப் பலவடி வரினு மாசிரிய மூன்றி னிகவா வென்றும் கொள்க. 'பாவின' வென்றதனான் இவ் விருபகுதியுந் தத்தம் பாக்கள் வேறு வேறு நிகழுமென்று கொள்க. "எறும்பி யளையிற் குறும்பல் சுனைய" (குறுந்.12). என்னும் பாட்டுப் போல வோசை கலந்து வாரா.

(எ-டு)" தென்ற லிடைபோழ்ந்த தேனார் நறுமுல்லை
முன்றின் முகைவிரியு முத்தநீர்த் தண்கோளூர்க்
குன்றமர்ந்த கொல்லேற்றா னிற்காப்ப வென்றுந்
தீரா நண்பிற் றேவர்
சீர்சால் செல்வமோடு பொலிமதி சிறந்தே."

இது புறநிலை. இஃது அடியிகந்தது வந்துழிக் காண்க.

"பலமுறையு மோம்பப் படுவன கேண்மின்
சொலன்முறைக்கட் டோன்றிச் சுடர்மணித்தே ரூர்ந்து
நிலமுறையி னாண்ட நிகரில்லார் மாட்டுஞ்
சிலமுறை யல்லது செல்வங்க ணில்லா
விலங்கு மெறிபடையு மாற்றலு மன்புங்
கலந்ததங் கல்வியுந் தோற்றமு மேனைப்
பொலஞ்செய் புனைகலனோ டிவ்வாறி னாலும்
விலங்கிவருங் கூற்ற நீக்கலு மாகா
தனைத்தாத னீயிருங் காண்டிர் நினைத்தக்க
கூறிய வெம்மொழி பிழையாது
தேறிநீ ரொழுகிற் சென்றுபயன் றருமே."

இது வாயுறை.

"பல்யானை மன்னர் முருங்க வமருழந்து
கொல்யானைத் தேரொடுங் கோட்டந்து நல்ல
தலையாலங் கானம் பொலியத் தொலையாப்
படுகளம் பாடுபுக் காற்றிப் பகைஞு

ரடுகளம் வேட்டோன் மருக வடுதிற
லாழி நிமிர்தோட் பெருவழுதி யெஞ்ஞான்று
மீர முடையையா யென்வாய்ச்சொற் கேட்டி
யுடைய வுழவரை நெஞ்சனுங்கக் கொண்டு
வருங்கா லுழவர்க்கு வேளாண்மை செய்யன்
மழவ ரிமைக்கும் வரைகா ணிதியீட்டங்
காட்டு மமைச்சரை யாற்றத் தெளிய
லடைத்த வரும்பொரு ளாறன்றி வெளவலி
னத்தை பெரும்பொரு ளாசையாற் சென்று
பெருங்குழிசி, மன்ற மறுக வகழாதி யென்று
மறப்புற மாசி மதுரையா ரோம்பு
மறப்புற மாசைப் பாடேற்க வறத்தா
லவையார் கொடுநாத் திருத்தி நவையாக
நட்டார் குழிசி சிதையாதி யொட்டார்
செவிபுதைக்குந் தீய கடுஞ்சொற் கவிபடைத்தாய்
கற்றார்க் கினனாகிக் கல்லார்க் கடிந்தொழுகிச்
செற்றார்ச் செகுத்துநிற் சேர்ந்தாரை யாக்குதி
யற்ற மறிந்த வறிவினாய் மற்று
மிவையிவை நீவா தொழுகி னிலையாப்
பொருகட லாடை நிலமகங்
ளொருகுடை நீழற் றுஞ்சுவண் மன்னே."

இது செவியுறை. (161)

## சிவலிங்கனார்

**புறநிலை வாயுறை ...................... என்ப.**

(இ-ள்) புறநிலை வாழ்த்து, வாயுறை வாழ்த்து, செவியறிவுறூஉ எனும் மூன்றையும் நன்கு தெரியின், வெண்பாவும் ஆசிரியமும் கூடி முடியும் மருட்பாவில் வருவன என்பர், எ-று.

கைக்கிளையில் மருட்பா வருதலோடு இவற்றிலும் வரும் என்பது.

எனவே, மருட்பா மேற்சொன்ன நான்கு பொருளில்தான் வரும் என்பது.

பரிபாடல் அடிவரையறை

**464. பரிபா டல்லே[1]**
**நாலீ ரைம்ப துயர்படி யாக**
**ஐயைந் தாகும் இழிபடிக் கெல்லை. (155)**

## இலக்குவனார்

474. The limit of *paripādal* is to have the maximum of two hundred lines and minimum of twenty five lines.

1. பரிபாட் டெல்லை - பேரா. பாடம்.

## இளம்பூரணர்

**464. பரிபா டல்லே .............................. கெல்லை.**

*என்-னின், பரிபாடற்கு அடிவரையறை உணர்த்துதல் நுதலிற்று.*

**(இ-ள்)** பரிபாடற் செய்யுள் நானூறடி யுயர்பாக இருபத்தைந்தடி இழிபாக வரும் என்றவாறு.

எனவே, இடை யெல்லா அடியானும் வரப்பெறும் என்றவாறு.

கலிப்பாவினுள் ஒத்தாழிசைக்கு அளவு மேற்கூறப்பட்டது.

கலிவெண்பாட்டுக்கு வரையறையில்லை யெனப்பட்டது.

கொச்சகக்கலிக்கு வரையறை கூறாமையாற் பொருண்முடியுங் காறும் வரப்பெறும் என்று கொள்க. அவ்வழிப் பலவுறுப்பாகி வருதலின் அதற்குறுப்பாகிய செய்யு ளளவிற்றாதல் வேண்டும்.

உறழ்கலியுங் கொச்சகக் கலிப்பாற்படும். (155)

## பேராசிரியர்

**474. பரிபாட் டெல்லை ........................ கெல்லை.**

*இது, பரிபாட்டின்கண் வெண்பாவிற்கு அளவு கூறுகின்றது.*

(இ-ள்) பரிபாடற்கு உறுப்பாகிய வெண்பாவுக்கு நானூறடி பெருக்கத்திற் கெல்லையாகவும் இருபத்தைந்தடி சுருக்கத்திற் கெல்லை யாகவும் பெறும் என்றவாறு.

அவை பரிபாடலுட் கண்டுகொள்க. (162)

## நச்சினார்க்கினியர்

162. பரிபா டல்லே........................கெல்லை.

*இது, முறையே பரிபாடற்கு எல்லை கூறுகின்றது.*

(இ-ள்) பரிபாடற் குறுப்பாகிய வெண்பாவும் பொதுப்பாவும் நானூறடி பெருக்கத்திற்கெல்லையாகவும் இருபத்தைந்தடி சுருக்கத்திற்கு கெல்லையாகவும் பெறும் எ-று.

**அவை** தொகையுட்[1] காண்க. (162)

## சிவலிங்கனார்

**பரிபா டல்லே...........................கெல்லை.**

---

1. தொகைநூலாகிய பரிபாடலிற் காண்க.

(இ-ள்) பரிபாடற் செய்யுள் நானூறடி உயர்பாகவும் இருபத்தைந்தடி இழிபாகவும் வரும், எ-று.

### அடிவரையறை முடிபு

## 465. அளவியல் வகையே அனைவகைப் படுமே. (156)

## இலக்குவனார்

475. These are said to be those which have limit (of lines).

## இளம்பூரணர்

**465. அளவியல் வகையே ............................ படுமே.**

*என்-னின், மேற்சொல்லப்பட்டவை தொகுத்துணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) இவ் வதிகாரத்துள் ஈண்டு அதிகரிக்கப்பட்ட அளவியல் ஈண்டுச் சொன்ன வகைபெறும் என்றவாறு. (156)

## பேராசிரியர்

**475. அளவியல் .................................. படுமே.**

*இது, மேற்கூறிய அளவினை வரையறுக்கின்றது.*

(இ-ள்) இத்துணையும் அளவியலான் ஒரு கூறே சொல்லப்பட்டது என்றவாறு.

எழுநிலத்தெழுந்த செய்யுள்களுள்(476) அடிவரையறையுடையன வற்றுக்குக் கூறினான் ஆண்டில்லாதன அடிவரையின்றிவரும் இலக்கணத்த வென்பதூஉம் இனிக் கூறுமென்பதூஉம் இதனது பயம்.[1] (163)

## நச்சினார்க்கினியர்

**163. அளவியல் வகையே ............................ படுமே.**

*இது, பிறன்கோட் கூறல்.*

(இ-ள்) யான் கூறிய அளவியலின் கூறுபாடு அத்துணைப் பகுதிப் படும் எ-று.

என்றது யான் சிறப்புடைத்தெனக் கூறிய பெருமைக்கெல்லை அத்துணைப் படுமெனவே பிறர் பெருமைக்கெல்லை கொள்ளாதது சிறப்பின்று என்றவாறாயிற்று. (163)

---

1. இச் சூத்திரத்தின் பயன்.

## சிவலிங்கனார்

**அளவியல் ................ படுமே.**

(இ-ள்) பாக்களின் அடியளவின் கூறுபாடு மேலே கூறிவந்த அத்துணைப் பகுதிப்படும், எ-று.

அடிவரையறை யில்லாதன

**466. எழுநிலத் தெழுந்த செய்யுள் தெரியின்**
**அடிவரை யில்லன ஆறென மொழிப. (157)**

## இலக்குவனார்

476. While discussing the compositions originated from seven themes - there are six which are said to be limitless.

## இளம்பூரணர்

**466. எழுநிலத் தெழுந்த ............................. மொழிப.**

*என்-னின், அடிவரையறை யில்லாதன வரையறுத்துணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) எழுநிலமாவன[1] பாட்டு, உரை, நூல், வாய்மொழி, பிசி, அங்கதம், முதுசொல் என்பன. அவற்றுட் பாட்டொழிந்த ஆறும் அடிவரையிலவென்றவாறு. (157)

## பேராசிரியர்

**476. எழுநிலத் ........................ மொழிப.**

*மேலைச் சூத்திரத்தான் அளவியல் வகையை வரையறைப் படுத்தான்; அடிவரையறையின்மையும் அளவியலென்பதுங் குறிப்புக் கருதா விலக்கணமாகிய செய்யுள் கூறினான் இச் சூத்திரத்தானென்பது.*

(இ-ள்) அகமும் புறமுமாகிய எழுநிலத்துந் தோன்றிய செய்யுளை ஆராயின் அடிவரையின்றிவரும் இலக்கணத்தளவு ஆறாம்[2] என்றவாறு.

இதனானே ஆறென்பதூஉம் ஓரளவியலாயிற்று. (164)

## நச்சினார்க்கினியர்

**164. எழுநிலத் தெழுந்த ............................. மொழிப.**

---

1. எழுநிலம் - அகத்திணை ஏழும் புறத்திணை ஏழும் என்பர் பேராசிரியரும் நச்சினார்க்கினியரும்.

2. ஆறு - அடுத்த சூத்திரத்து வருவன. உரை முதலியன.

*இது, நான்கு பாவிற்கு மளவு முற்கூறிய அளவிற்படாதன கூறுகின்றது.*

(இ-ள்) அகமும் புறமுமாகிய எழுநிலத்திலுந் தோன்றிய செய்யுளை ஆராயின் அடிவரையின்றி வரும் இலக்கணத்தன ஆறென்று கூறுவர் புலவர் எ-று.

எழுநில மென்றற்குப் பாட்டு உரைநூல் முதலியனவுமாம்.[1] (164)

**சிவலிங்கனார்**

**எழுநிலத் ............................ மொழிப.**

(இ-ள்) பாட்டு, உரை முதலிய எழுநிலத்தெழுந்த செய்யுள்களைத் தெரியுங்கால் அடிவரையறையில்லன பாட்டு ஒழிந்த ஆறுமாம், எ-று.

எழுநிலமாவன பின்வரும் சூத்திரத்துக் காண்க.

**467. அவைதாம்,**
**நூலி னான உரையி னான**
**நொடியொடு புணர்ந்த பிசியி னான**
**ஏது நுதலிய முதுமொழி யான**
**மறைமொழி கிளந்த மந்திரத் தான**
**கூற்றிடை வைத்த குறிப்பி னான. (158)**

**இலக்குவனார்**

**477. Those are *nūl, urai, pisi* which is in the nature of riddle, *muthumoḻi* which gives reason, *manthiram* which is in the form of formula and those which suggest other meanings.**

**இளம்பூரணர்**

**467. அவைதாம் ........................... குறிப்பி னான.**

***என்-னின், மேற்சொல்லப்பட்ட அறுவகையுமாமாறு உணர்த்துதல் நுதலிற்று.***

**(இ-ள்) வாய்மொழி**யெனினும் மந்திர**மெனினும் ஒ**க்கும். அங்கத மாவது **'செம்பொருள் கரந்த தெனவிரு வகைத்தே' (செய்யுளியல்-120) என்றதனாற் கரந்தவங்கத மெனினுஞ் சொற்குறிப்பெனினு மொக்கும். அவையாமாறு வருகின்ற சூத்திரத்தாற் காட்டுதும். (159)**

---

1. இளம்பூரணர் கருத்து.

## பேராசிரியர்

**477. அவைதாம் ........................... குறிப்பி னான.**

*இது, மேற்கூறிய (476) நிறுத்த ஆறற்கும் பெயரும் முறையு முணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) அவைதாமென்பது, அடிவரையில்லன ஆறெனப்பட்டவை தாம் என்றவாறு. நூலின்கண்ணவும், உரையின்கண்ணவும், நொடிதன் மாத்திரையாகிய பிசியின்கண்ணவும், ஒருமொழிக் கேதுவாகி வரும் முதுமொழிக்கண்ணவும், மறைத்துச் சொல்லுஞ் சொல்லாற் கிளந்த மந்திரத்தின்கண்ணவும், சொல்லுகின்ற பொருளை இடைகரந்து சொல்லுங் குறிப்பின்கண்ணவுமென அறுவகைப்படும் என்றவாறு.

அவற்றுக்கிலக்கணம் போக்கிச் சொல்லுதும். நூலின்கண்ணவு மென்றது சூத்திரச் செய்யுளை நோக்கிக் கூறியவாறு. அதனுள்ளும் அடி வரையுடைய ஆசிரியம்போல் அளவை பெற்று மேலே அடங்குமென்பது. இனி, அச் சூத்திரப் பொருளும் உரையின்கண்ணதாகி வருவதூஉம் ஒரு செய்யுளாம். அதனது விகற்பம் முன்னர்க் கூறுதும்.

நொடியொடு புணர்ந்த பிசியும், ஏது நுதலிய முதுமொழியும், மறைமொழி கிளந்த மந்திரமும், கூற்றிடை வைத்த குறிப்புமென நான்கும் வழக்குமொழியாகியுஞ் செய்யுளாகியும் வருதலின் அவற்றுட் செய்யுளை யே கோடற்கு அவற்றுக்கு 'அளவில' என்றானென்பது. இவை இத் துணையெனவே, இதுவும் மேலைச் சூத்திரமும் அளவியலே கூறியவா றாயிற்று. இனி, அவைபடும் பகுதி யாவையுங் கூறுகின்றான். 'நொடியொடு புணர்ந்த' என்ற மிகையானே இதுவன்றி இதுபோல்வது பண்ணத்தி யென்பதும் ஒன்று உண்டென்பது கொள்க. அது முன்னர்ச் (492) சொல்லுதும். (165)

## நச்சினார்க்கினியர்

**165. அவைதாம் ........................... குறிப்பி னான.**

*இது, முற்கூறிய ஆறற்கும் பெயரும் முறையும் உணர்த்திற்று.*

(இ-ள்) முற்கூறிய அடிவரை யில்லாதனதாம் நூலின்கண் ணாவன வும், உரையின்கண் ணாவனவும், நொடியின் மாத்திரையவாகிய பிசியின் கண் ணாவனவும், ஒருமொழிக் கேதுவாகி வரும் முதுமொழிக்கண் ணா வனவும், மறைத்துக்கூறுஞ் சொல்லாற் கூறிய மந்திரத்தின்கண் ணாவனவு மென ஆறுவகைப்படும். எ-று.

'நூலி னான' என்றது சூத்திரச் செய்யுள்களுள் ஆசிரியமாய் வந்து அளவை பெறாதனவற்றை நோக்கிற்று. அச் சூத்திரத்தை நோக்கி வருமுறையும் ஒரு செய்யுளாம். ஒழிந்தன வழக்கின்கண்ணுஞ் செய்யுட் கண்ணும் வரினும் ஈண்டுச் செய்யுளை நோக்குதற்கு அவற்றுக் கண்ண வென்றார். இவையும் அளவிகந்து வருவனவே. அளவு முற் கூறிற்றாம். (165)

**சிவலிங்கனார்**

**அவைதாம் .......................... குறிப்பி னான.**

(இ-ள்) நூல், உரை, பிசி, முதுமொழி, மந்திரம், குறிப்பு என்பன அவ் வறுவகையாம் எ-று.

நூலாமாறு

**468. அவற்றுள்,**
**நூலெனப் படுவது நுவலுங்[1] காலை**
**முதலும் முடிவும் மாறுகோ ளின்றித்**
**தொகையினும் வகையினும் பொருண்மை காட்டி**
**உண்ணின் றகன்ற உரையொடு புணர்ந்து[2]**
**நுண்ணிதின் விளக்கல் அதுவதன் பண்பே. (159)**

**இலக்குவனார்**

478. Of them,

*Nūl* is said to be one which has the beginning and the end without being in contradiction, the content being discussed collectively and separately in elaborate manner by means of subtle expressions.

**இளம்பூரணர்**

**468.** அவற்றுள்,
நூலெனப் படுவது .......................... பண்பே.

*என்-னின், நூலாமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ன்) நூலென்று சொல்லப்பட்டது எடுத்துக்கொண்ட பொருளொடு முடிக்கும் பொருண்மை மாறுபடாமற் கருதிய பொருளைத் தொகையானும் வகையானுங் காட்டி யதனகத்து நின்றும் விரிந்த வுரையோடு பொருத்தமுடைத்தாகி நுண்ணியதாகி விளக்குவது நூற்கியல்பு என்றவாறு.

அகன்றவுரையோடு பொருந்துதலாவது சொல்லாத பொருண்மை யெல்லாம் விரிக்கவேண்டியவழி அதற்கெல்லாம் இடனுண்டாதல். (159)

---

1. நுவலுங்காலை என்பது நச். பாடத்தில் இல்லை.

2. பொருந்தி - பேரா-நச்-பாடம்

## பேராசிரியர்

**478. அவற்றுள்,**
**நூலெனப் படுவது ........................ பண்பே.**

*இது, நூலினது பொதுவிலக்கண முணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) நூலென்று சொல்லப்படுவது முன்னும் பின்னும் மாறு படாது தொகுத்தும் வகுத்தும் பொருள்காட்டி அடங்கிநின்ற பொருள் விரித்துச் சொல்லப்பட்டுப் பருப்பொருட்டாகாது நுண்பொருட்டாகப் பொருள் விளக்கல். அதற்கிலக்கணம் அது என்றவாறு.

இதன் அகலம் உரையிற்கொள்க. (166)

## நச்சினார்க்கினியர்

**166. அவற்றுள்,**
**நூலெனப் படுவது ...................... பண்பே.**

*இஃது, அந் நூல்களது இலக்கணங் கூறுகின்றது.*

(இ-ள்) நூலெனப்படுவது - நூலென்று சிறப்பித்துச் சொல்லப்படுவது, முதலும் முடிவும் மாறுகோள் இன்றி - முன்னும் பின்னும் மாறுபடாது, தொகையினும் வகையினும் பொருண்மை காட்டி - தொகுத்தும் வகுத்தும் பொருள் காட்டி, உள்நின்று அகன்ற உரையொடு பொருந்தி - தன்னுள்ளே அடங்கிநின்று விரிந்த உரையோடு பொருந்தப்பட்டு, நுண்ணிதின் விளக்கல் அதுவதன் பண்பு - பருப் பொருட்டாகாது நுண்பொருட்டாகப் பொருள் விளக்கலாகிய அவ் விலக்கணம் அதன் இலக்கணம் எ-று.

அது எழுத்து முப்பத்து மூன்றெனத் தொகுத்ததனைப் பின்னர்க் குறிலும் நெடிலும் மூவினமுஞ் சார்பிற் றோற்றமுமென வகுத்தாற் போல்வனவும் பிறவுமென் றுணர்க. சாதிபற்றிப் படுவதென ஒருமையாற் கூறினார். (166)

## சிவலிங்கனார்

**அவற்றுள்**
**நூல் .............................. பண்பே.**

(இ-ள்) நூல் என்று சொல்லப்படுவது, புலவன் தான் சொல்லக் கருதிய பொருள் முன்னும் பின்னும் மாறுபடாமல் அப் பொருளைத் தொகுத்தும் வகுத்தும் காட்டி, நூலினுள்ளே அடங்கியிருந்து விரிவாகச் சொல்லப்படும் உரையோடு பொருந்தி, நுண்ணிதாகப் பொருள் விளக்குமாறு அமையும் இலக்கணத்ததாகிய அவ் விலக்கணமுடையதாம், எ-று.

எனவே நூல் என்பது, கூறப்படும் பொருள் முன்னுக்குப் பின் மாறுபடாதது, தொகுத்தும் வகுத்தும் கூறப்படுவது, விரிவுரை நிகழ்த்துமாறு சொற்றொடர் நுண்ணியவாக அமைவது என்பதாம்.

நூலின்வகை

**469. அதுவே தானும் ஒருநால்[1] வகைத்தே. (160)**

## இலக்குவனார்

479. It is of four kinds.

## இளம்பூரணர்

**479. அதுவே தானும் ......................... வகைத்தே.**

*என்-னின், நூல் பாகுபடுமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) மேற்சொல்லப்பட்ட நூல் நான்கு வகையை யுடைத் தென்றவாறு.

அவையாமாறு முன்னர்க் கூறப்படும்.

## பேராசிரியர்

**479. அதுவே தானு ......................... வகைத்தே.**

*அதன் வகை உணர்த்துகின்றது.*

(இ-ள்) அந் நூற்பகுதி நான்குவகையாம் என்றவாறு. (160)

அவை முன்னர்ச் சொல்லுதும். இதனது பயம்: மேல் 'தொகையினும் வகையினும்' (478) என்றதனானே, தொகுத்தல் விரித்தல் தொகைவிரி மொழிபெயர்ப்பு (652) என்னும் நால்வகை யாப்பிற்கும், தொகையினும் வகையினும் பொருண்மை காட்டுதல் ஒக்குமென அவை யிரண்டும் நான்காதலு[2] முடையவென்பது. அவை எழுத்து முப்பத்து மூன்றெனத் தொகுத்தவழிக் குறிலும் நெடிலும் இனமுஞ் சார்ந்துவரும் மூன்றுமென வகுத்தலும்,

"இரண்டுதலை யிட்ட முதலா கிருபஃ
தறுநான் கீறு" (தொல்.எழுத்து, 103)

என வகுத்தலு மென்றாற்போல்வன. உயர்திணை அஃறிணையெனத் தொகுத்து, ஐம்பாலென வகுத்தலும், அதுஒழிந்த மூவகை நூலிற்கும்[2] இவ்வாறே ஒருவழித் தொகுத்தலும் வகுத்தலும் கொள்க. (167)

---

1. ஈரிரு வகைத்தே - பேரா - நச். - பாடம்.
2. தொகையுள் தொகை, தொகையுள் வகை, வகையுள் தொகை, வகையுள் வகை

**நச்சினார்க்கினியர்**

**167. அதுவே தானும்........................வகைத்தே.**

*இஃது, அந் நூற்பகுதி நான்கா மென்கின்றது.*

(இ-ள்) அந் நூற்பகுதி நான்காம் எ-று. (167)

**சிவலிங்கனார்**

**அதுவே தானும்........................வகைத்தே.**

(இ-ள்) அந் நூலானது நான்கு வகைத்து, எ-று.

**அவையாமாறு**

**470. ஒருபொருள் நுதலிய சூத்திரத் தானும்**
**இனமொழி கிளந்த ஓத்தி னானும்**
**பொதுமொழி கிளந்த படலத் தானும்**
**மூன்றுறுப் படக்கிய பிண்டத் தானுமென்று**
**ஆங்கனை மரபின் இயலும் என்ப.** (161)

**இலக்குவனார்**

480. It is in the nature of having *sūththiram* which deals with on subject *ōththu* which deals with the allied subjects, *padalam* which deals with the common subject and *piṇdam* which has three parts (of above mentioned).

**இளம்பூரணர்**

**470. ஒருபொருள் ................................. என்ப.**

*என்-னின், மேல் தொகை கொடுக்கப்பட்ட நான்குமாமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) ஒருபொருள் நுதலிய சூத்திரத்தானும் என்பது - ஆசிரியன் யாதானு மொருபொருளைக் குறித்துக் கூறுஞ் சூத்திரத்தானும் என்றவாறு.

இனமொழி கிளந்த ஓத்தினானும் என்பது - இனமாகிய பொருள்கள் சொல்லப்படும் ஓத்தினானும் என்றவாறு.

பொதுமொழி கிளந்த படலத்தானும் என்பது - மேற்சொல்லப்பட்ட இனங்கள் பலவற்றையும் கூறப்படும் படலத்தானும் என்றவாறு.

1. மூவகை நூல - வகைநூல், விரிநூல், தொகைவிரிநூல்

மூன்றுறுப் படக்கிய பிண்டத்தானும் என்பது - இம் மூன்றனையும் உறுப்பாக அடக்கிய பிண்டத்தானும் என்றவாறு.

ஆங்கனை மரபின் இயலுமென்ப என்பது - அம் மரபினான் இயலும் நூலென்ப என்றவாறு.[1]

அவற்றிற்கு இலக்கண முன்னர்க் கூறப்படும். (161)

## பேராசிரியர்

**480.** ஒருபொரு ளுதலிய.............................மென்ப.

*இஃது, அந் நான்கினையும் பெயரும் முறையு முணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) நூலுள் ஒரு பொருளையே நுதலிவருவது சூத்திரமெனவும், இனமாகிய பொருளினையே தொகுப்பது ஒத்தெனவும், பல பொருட்கும் பொதுவாகிய இலக்கணங் கூறுவது படலமெனவும், மூன்றுறுப்பினை யுடையது பிண்டமெனவுங் கூறிய மரபினான் இயலும் நூல் என்றவாறு. (168)

## நச்சினார்க்கினியர்

**168.** ஒருபொரு ளுதலிய.............................மென்ப.

*இது, அந் நான்கற்கும் பெயரும் முறையும் உணர்த்திற்று.*

(இ-ள்) ஒருபொருள் நுதலிய சூத்திரத்தானும் - அந் நூல் ஒரு பொருளே கருதிவரும் சூத்திரத்தானும், இனமொழி கிளந்த ஒத்தினானும் - இனமாய பொருளைக் கூறிய ஒத்தினானும், பொதுமொழி கிளந்த படலத்தானும் - பல பொருட்குப் பொதுவாகிய இலக்கணங்களைக் கூறிய படலத்தானும், மூன்று உறுப்பு அடக்கிய பிண்டத்தானும் - மூன்று உறுப்பை அடக்கிவரும் பிண்டத்தானும், என்று ஆங்கு அனை மரபின் இயலும் என்ப - என்று கூறிய அத்தன்மைத்தாகிய மரபினான் நடக்கும் என்று கூறுவர் புலவர் எ-று.

ஆங்கென்ற மிகையால் பிண்டமேயன்றிப் பிண்டியென்பதும் ஒன்றுளது என்று கொள்க. (168)

## சிவலிங்கனார்

ஒருபொருள் ..................... என்ப.

(இ-ள்) ஒருபொருளைக் கருதி வந்த சூத்திரங்களால் வருவதும், அப் பொருளின் இனங்களைக் கருதிக் கூறும் இயல்களினால் வருவதும்,

---

1. எனவே, நூல் என்பது சூத்திரம், ஒத்து, படலம், பிண்டம் எனும் நான்கும் கொண்டது என்பதாம்.

மேலும் பல இனப் பொதுப்பொருள்களைக் கூறும் படலங்களினால் வருவதும், இயல், இசை, நாடகம் எனும் மூன்று உறுப்புகளையும் அடக்கி வரும் பிண்டத்தினால் வருவதும் என அம் மரபினான் நூல் இயலும் என்பர், எ-று.

ஒருபொருள் கருதிய சூத்திரங்கள் மட்டும் வந்த நூல் இன்று இல்லை.

சூத்திரமும் இயலும் உடையது இறையனாரகப்பொருள், களவியல் கற்பியல் என இரண்டியலுடையது.

சூத்திரம், இயல் ஆகியவற்றுடன் படலமும் (அதிகாரம்) உடையது தொல்காப்பியமும் நன்னூலும் பிறவும் ஆம்.

இயலிசை நாடகவுறுப்படங்கியது அகத்தியம், இன்று இல்லை. நூல் என்பது பெரும்பாலும் இலக்கண நூலினையே.

**சூத்திரம்**

**471. அவற்றுள்,**
**சூத்திரம் தானே**
**ஆடி நிழலின் அறியத் தோன்றி**
**நாடுதல் இன்றிப் பொருள்நனி விளங்க**
**யாப்பினுள் தோன்ற யாத்தமைப் பதுவே. (162)**

## இலக்குவனார்

481. Of them,

*Sūththiram* is one which has the exposition of the subject as clear as crystal without any difficulty in understanding the same.

## இளம்பூரணர்

**471. அவற்றுள்,**
**சூத்திரம் தானே ........................ பதுவே.**

*என்-னின், சூத்திரத்திற்கு இலக்கணமுணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) சூத்திரமாவது கண்ணாடியி னிழற்போல விளங்கத் தோன்றி ஆராயாமற் பொருள் நனிவிளங்குமாறு யாப்பின்கண்ணே தோன்ற யாப்ப தென்றவாறு.

ஆடிநிழலி னறியத் தோன்றுவதாவது - சூத்திரம் படித்தவளவிலே அதனாற் சொல்லப்படுகின்ற பொருள் ஒருங்கு தோற்றல்.

நாடுதலின்றிப் பொருணனி விளங்க யாத்தலாவது - அதன்கண் யாக்கப்பட்ட சொற்குப் பொருள் ஆராயாமற் புலப்படத் தோன்றுமாறு யாத்தல்.

(உ-ம்)"வேற்றுமை தாமே ஏழென மொழிப
விளிகொள் வதன்கண் விளியோ டெட்டே."

(தொல்.வேற்றுமையியல், 1)

என்ற வழி யாப்பின் கண்ணே பொருடோன்ற யாத்தவாறுங், கண்ணாடி நிழற்போலக் கருதிய பொருளுந் தோற்றியவாறுங் கண்டுகொள்க. (162)

## பேராசிரியர்

481. அவற்றுள்,
சூத்திரம் தானே ............................ பதுவே.

*இது, முறையானே சூத்திர விலக்கண முணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) மேல் (480) ஓதியவற்றுள் ஒருபொருணுதலிய வெனப்பட்ட சூத்திரப்பொருள் நுதலுங்கால் ஆடி சிறியதாயினும் அகன்றுபட்ட பொருளை அறிவித்தாற்போலத் தேர்தல் வேண்டாமை அவ் வகன்ற பொருள் அடங்குமாற்றான் அச் செய்யுளுள் தோன்றச் செய்து முடிக்கப் படுவது என்றவாறு. (169)

## நச்சினார்க்கினியர்

169. அவற்றுள்,
சூத்திரந்............................பதுவே.

*இது, முறையே சூத்திரவிலக்கணங் கூறுகின்றது.*

(இ-ள்) அவற்றுள் சூத்திரந்தானே ஆடி நிழலின் அறியத்தோன்றி - அந் நான்கனுள் ஒருபொருள் நுதலும் சூத்திரமாவது: ஒருபொருள் நுதலுங்காற் கண்ணாடி சிறிதாயினும் அகன்றுபட்ட பொருளை யறிவித்தாங்கு அறியத் தோன்றி, நாடுதலின்றிப் பொருள் நனி விளங்க - தெரிதல் வேண்டாதபடி அவ் வகன்ற பொருளை மிகவும் விளங்கு மாற்றால், யாப்பினுள் தோன்ற யாத்து அமைப்பதுவே - செய்யுளுள் தோன்றச் செய்து முடிக்கப்படுவது எ-று. (169)

## சிவலிங்கனார்

அவற்றுள்,
சூத்திரந் ........................ பதுவே.

(இ-ள்) அவற்றுள், சூத்திரமாவது, கண்ணாடியில் நிழல் வெளிப் படையில் தோன்றுமாறு தன்னிடம் புலவன் கருதிய பொருள் எளிதில் புலப்படுமாறு அமைந்து, நுண்ணிதின் ஆராய்ந்தே யறிய வேண்டும்

என்பதின்றி நன்றாக விளங்குமாறு செய்யுளுள் தெளிவாக அமைவது வேயாம், எ-று.

படித்த அளவில் பொருள் விளங்கவும் அறிவான் ஆராயாமல் புலப்படும்படியும் அமைவது சூத்திரம்.

(உ-ம்)"வேற்றுமை தாமே ஏழென மொழிப."

"விளிகொள் வதன்கண் விளியோ டெட்டே."

**(தொல்.வேற்றுமையியல் 1, 2)**

இதில் பொருள் எளிதில் ஆராய வேண்டாமல் புலப்படுதல் காண்க.

ஓத்து

**472. நேரின மணியை நிரல்பட வைத்தாங்கு**
**ஓரினப் பொருளை ஒருவழி வைப்பது**
**ஓத்தென மொழிப உயர்மொழிப் புலவர். (163)**

## இலக்குவனார்

482. The *ōththu* is said to be one which has the allied subjects being discussed as the diamonds of one sort is put in one group according to the view of learned scholars.

## இளம்பூரணர்

**472. நேரின மணியை ...................... புலவர்.**

*என்-ன்னின், ஓத்திற்கு இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) ஒத்தவினத்ததாகிய மணியை ஒருங்கே கோவைப்பட வைத்தாற் போல ஓரோரினமாக வரும் பொருளை ஓரிடத்தே சேர வைத்தல் ஓத்தென்று பெயராம் என்றவாறு.

எனவே, அவ் வினமாகிச் சேர்ந்த நிலைக்கு ஓத்தென்று பெயரா யிற்று. அது 'வேற்றுமையோத்து' என்பதனானறிக. (163)

## பேராசிரியர்

**482. நேரின மணியை ........................... புலவர்.**

*இஃது ஓத்திலக்கண முணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) மேல் 'இனமொழி கிளந்த வோத்து' (480) என்றான், அங்ஙனம் இனமொழி கிளக்குங்காற் சிதர்ந்துகிடப்பப் பலவோத்தாகச் செய்யாது நேரினமணியை நிரலே வைத்தாற்போல ஓரினப் பொருளை யெல்லாம் ஒருவழியே தொகுப்பது ஒத்தாவது என்றவாறு.

'நேரின மணி' எனவே, ஒரு சாதியாயினும், தம்மின் ஒத்தனவே கூறல் வேண்டுமென்பதாம். வேற்றுமையோத்தும் வேற்றுமை மயங்கியலும் விளிமரபும் என மூன்றன் பொருளும் வேற்றுமையென ஓரினமென்று ஓரோத்தாக வையாது வேறுவேறு வைக்கப்படுமென்பது, உயர்மொழிப் புலவரென்பது, அங்ஙனம் நூல் செய்தல் உயர்ந்தோர் கடனென்றவாறு. (170)

## நச்சினார்க்கினியர்

**170. நேரின மணியை ......................... புலவர்.**

*இஃது, ஒத்திலக்கணங் கூறுகின்றது.*

(இ-ள்) இனமொழி கிளக்குங்காற் சிதர்ந்து கிடப்பப் பலவோத்தாகச் செய்யாது, மணியை நிரல்பட வைத்தாற்போல ஓரினப் பொருளை யெல்லாம் ஒருவழியே தொகுப்பது ஒத்தென்று கூறுவர் சிறந்த சொற் புலவர் எ-று.

நேரினமணி யெனவே யொருசாதியினுந் தம்மி னொத்தனவே கூறல் வேண்டும் எ-று.

'வேற்றுமை யோத்தும்', 'வேற்றுமை மயங்கியலும்', 'விளிமரபும்' என மூன்றன் பொருளையும் ஒன்றாக வேற்றுமையோத்தென்னாது வேறு வேறு வைத்தவாறு காண்க. (170)

## சிவலிங்கனார்

**நேரின மணியை ........................... புலவர்.**

(இ-ள்) ஓரினமான மணிகளை மாலையில் வரிசைப்பட வைத்தல் போல ஓரினமான பொருள்களை ஓரிடத்து வரிசைப்படச் சேர வைப்பது ஒத்து (இயல்) எனக் கூறுவர் புலவர், எ-று.

பெயரியல், வினையியல், வேற்றுமையியல் எனக் காண்க.

படலம்

**473. ஒருநெறி இன்றி விரவிய பொருளால்**
**பொதுமொழி தொடரின்அது படல மாகும். (164)**

## இலக்குவனார்

*483. Padalam* is one which deals with many subjects and their general feature.

## இளம்பூரணர்

**473. ஒருநெறி .................... ஆகும்.**

*என்-னின், படலத்திற்கு இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.*

**(இ-ள்)** ஓரினமாகிய நெறியின்றிப் பல நெறியான் வருவன பொருளானே பொதுமொழியாற் றொடர்வுபடின் அது படலமெனப் பெயராம் என்றவாறு.

அது, கிளவியாக்க முதலாக எச்சவியல் ஈறாகக் கிடந்த ஒன்பதோத்தினும் வேறுபாடுடையவாயினும், சொல்லிலக்கணம் உணர்த்தினமையாற் சொல்லதிகாரம் எனப் பெயர் பெறுதல்.

அதிகாரம் எனினும் படலமெனினும் ஒக்கும். (164)

## பேராசிரியர்

**483. ஒருநெறி யின்றி ..................................... மாகும்.**

*இது, மேல் (480) 'பொதுமொழி கிளந்த படலம்' எனப்பட்டதற்கு இலக்கணமுணர்த்துதல் நுதலிற்று*

**(இ-ள்)** ஒருநெறியவன்றிப் பல்வேறு வகைப்பட்ட பொருளெல்லாவற்றிற்கும் வேறுவேறு இலக்கணங் கூற நுதலின் அவற்றுக்குப் பொதுவாகி வருவது படலம் என்றவாறு.

'பொதுமொழி கிளந்த படலம்' (480) என்றவழி; ஒருநெறிப் பொருட்குப் பொதுவாகப்பட்டதனை விலக்கி[1] ஈண்டு விரவிய பொருட்குப் பொதுவாக மொழிவதே படலமென்றானென்பது; அவை அதிகாரங்களாமெனக் கொள்க. (171)

## நச்சினார்க்கினியர்

**171. ஒருநெறி யின்றி ................................ மாகும்.**

*இது, முறையே படலம் கூறுகின்றது.*

**(இ-ள்)** ஒருபொருள் நெறியன்றிப் பல்வேறு வகைப்பட்ட பொருளெல்லாவற்றிற்கும் வேறுவேறிலக்கணங் கூறக் கருதியவற்றுக்குப் பொதுமொழியாகத் தொடர்ந்துவரின் அது படலமாம் எ-று.

---

1. ஒருநெறிப் பொருட்குப் பொதுவாகப்பட்டது இயல் எனப்படும்.

'பொதுமொழி கிளந்த படலம்'' எனவே, ஒருநெறிப்பட்ட பொருட்குப் பொதுவாய் வருதலையும் விலக்கி விரவிய பொருட்குப் பொதுவாக மொழிவது படலமாயிற்று.

படலமாவது அதிகாரமாம். (171)

## சிவலிங்கனார்

**ஒருநெறி யின்றி...................................மாகும்.**

**(இ-ள்)** ஓரினநெறி என்பதின்றிப் பலவினப் பொருள்களான இலக்கணம் கூறக் கருதி அவற்றுக்குப் பொதுவான மொழித் தொடர் களால் கூறப்படின் அது படலம் ஆகும், எ-று.

தொல்காப்பியக் கிளவியாக்கம் முதல் எச்சவியல்வரை பல பொருள்களின் இலக்கணம் கூறப்பட்டு அவற்றுக்குப் பொதுப் பெயராகச் சொல்லதிகாரம் எனப் பொதுமொழி கூறப்பட்டது காண்க.

### பிண்டம்

**474. மூன்றுறுப் படக்கிய தன்மைத் தாயின்**
**தோன்றுமொழிப் புலவர்அது பிண்டம் என்ப. (165)**

## இலக்குவனார்

484. The scholar of high languages says that *pindam* is one which has three parts.

## இளம்பூரணர்

**474. மூன்றுறுப் படக்கிய ............................ என்ப.**

*என்-னின், பிண்டமென்பது உணர்த்துதல் நுதலிற்று.*

**(இ-ள்)** மூன்றுறுப்பினையும் அடக்கின தன்மைத்தாயின் அதனைப் பிண்டமென்று சொல்லுவர் என்றவாறு.

மூன்றுறுப் படக்குதலாவது சூத்திரம் பலவுண்டாகி ஒத்தும் படலமு மின்றாகி வரினும், ஒத்துப் பலவுண்டாகிப் படலமின்றி வரினும், படலம் பலவாகி வரினும், அதற்குப் பிண்டமென்று பெயராம் என்றவாறு.

அவற்றுட் சூத்திரத்தாற் பிண்டமாயிற்று இறையனார் களவியல். ஒத்தினாற் பிண்டமாயிற்று பன்னிருபடலம். அதிகாரத்தாற் பிண்டமாயிற்று இந் நூலென்று கொள்க. இவற்றைச்[1] சிறுநூல் இடைநூல் பெருநூல் எனப்படும். (165)

---

1. இவை என்றிருப்பின் நன்று. இன்றேல் எனப்படும் என்பதற்கு என்க என வியங்கோளாக்குக.

## பேராசிரியர்

**484. மூன்றுறுப் படக்கிய...............................மென்ப.**

*இது, பிண்டங் கூறுகின்றது; வாளாதே 'மூன்றுறுப் படக்கிய பிண்டம்' என்றான் மேல் (480) ஈண்டுச் சூத்திரமும் ஒத்தும் படலமுங் கூறிய அதிகாரத்தானே அம் மூன்றனையும் அடக்கிநிற்பது பிண்டமென்கின்றா னென்பது.*

(இ-ள்) அம் மூன்று உறுப்பினையும் அடக்கிவருவது பிண்டம் என்றவாறு.

அம் மூன்றனையும் உறுப்பெனவே, பிண்டமென்பனதாம் உறுப்பின[1]வென்பது பெற்றாம். தொல்காப்பியமென்பது பிண்டம்; அதனுள். எழுத்ததிகாரஞ் சொல்லதிகாரம் பொருளதிகாரமென்பன படலமெனப் படும்; அவற்றுள் ஓத்துஞ் சூத்திரமும் ஒழிந்த இருகூறுமெனப்படும்.

'தோன்றுமொழிப் புலவரது பிண்ட மென்ப' என்றதனாற் பிண்டத் தினையும் அடக்கிநிற்பது வேறு பிண்டமுளதென்பது. அது முதனூலாகிய அகத்தியமே போலும்; என்னை? அஃது இயற்றமிழ், இசைத்தமிழ், நாடகத்தமிழென்னு மூன்று பிண்டத்தினையும் அடக்கி நிற்றலின். (172)

## நச்சினார்க்கினியர்

**172. மூன்றுறுப் படக்கிய ...................... மென்ப.**

*இஃது, பிண்டங் கூறுகின்றது.*

(இ-ள்) சூத்திரமும் ஒத்தும் படலமுமென்கின்ற மூன்றுறுப்பினையும் உள்ளடக்கிய தன்மைத்தாய் வரின் விளங்கிய மொழியையுடைய புலவ ரதனைப் பிண்டமென்று பெயர் கூறுவர் எ-று.

அம் மூன்றனையும் உறுப்பெனவே, பிண்டமென்பது உறுப்பின வென்பது பெற்றாம். தொல்காப்பியமென்பது பிண்டம். அதனுள் எழுத்துச் சொற்பொருளென்பது படலம். ஓத்துஞ் சூத்திரமு மொழிந்த விரு கூறுமாம்.

'தோன்றுமொழிப் புலவ' ரென்றதனாற் பிண்டத்தனையுமடக்கி நிற்பது வேறு பிண்டி யெனப்படும். அது முதனூலாகிய அகத்தியம். என்னை? இயற்றமிழ், இசைத்தமிழ், நாடகத்தமிழ் என மூன்று பிண்டத் தினையும் அடக்கி நிற்றலின். (172)

## சிவலிங்கனார்

**மூன்றுறுப் ........................... என்ப.**

---

1. உறுப்பின - உறுப்புகளுடையன

(இ-ள்) மூன்றுறுப்புகளைக் கொண்ட இயல்புடையதாயின் ஒரு நூல், அதனைப் பிண்டம் என்று புலவர் கூறுவர், எ-று.

மூன்று உறுப்பு என்பது சூத்திரம், ஓத்து, படலம் என்பன என்றும் இயல், இசை, நாடகம் என்பன என்றும் கூறுவர்.

சூத்திரங்கள் மட்டும் உள்ளது சூத்திரப்பிண்டம்,
சூத்திரமும் ஓத்தும் உள்ளது ஓத்துப்பிண்டம்,
சூத்திரம் ஓத்துப் படலம் மூன்றும் உள்ளது படலப்பிண்டம்.

உரைவகை நான்கு

**475. பாட்டிடை வைத்த குறிப்பி னானும்**
**பாவின் றெழுந்த கிளவி யானும்**
**பொருள்மர[1]பில்லாப் பொய்ம்மொழி யானும்**
**பொருளொடு புணர்ந்த நகைமொழி யானும்என்று**
**உரைவகை நடையே நான்கென மொழிப. (166)**

## இலக்குவனார்

455. They say that *urai vakai* (prose composition) is of four kinds which are the verse and prose being intermixed, the exposition of the meaning of the verses in an elaborate manner, the imaginary story of continuous narration without traditional background and the tale of wit and humour with moral import.

## இளம்பூரணர்

475. பாட்டிடை வைத்த .................................. மொழிப.

*என்-னின், உரை பாகுபடுமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) பாட்டிடை வைத்த குறிப்பாவது - பாட்டிடை வைக்கப் பட்ட பொருட்குறிப்பினானும் உரையாம் என்றவாறு.

பலசொல் தொடர்ந்து பொருள்காட்டுவனவற்றுள் ஓசை தழீஇய வற்றைப் பாட்டென்றார். ஓசையின்றிச் செய்யுட்டன்மைத்தாய் வருவது நூலெனப்பட்டது.

அவ்வகையுமன்றி வரும் உரைத்திறன் ஈண்டு உரையெனப்பட்டது.

---

1. பொருளொடு புணரா - நச். பாடம்

அவையாமாறு:

"ஊர்க்கால் நிவந்த பொதும்பருள்"

என்னுங் குறிஞ்சிக்கலியுள்,

"இவளைச் சொல்லாடிக் காண்பேன் தகைத்து" (கலி.56)

என்றது உரைக்குறிப்பு.

"ஒரூஉ, கொடியியல் நல்லார்"

என்னும் மருதக்கலியுள்,

"கடியர்தமக் கியார்சொலத் தக்கார் மற்று" (கலி.88)

என்றது மது.

சிலப்பதிகாரத்து ஆய்ச்சியர் குரவையுள்,

"கயலெழுதிய இமயநெற்றியின்
அயலெழுதிய புலியும்வில்லும்
நாவலந் தண்பொழின் மன்னர்
ஏவல் கேட்பப் பார்அர சாண்ட
மாலை வெண்குடைப் பாண்டியன் கோயிலுட்
காலை முரசம் கனைகுரல் இயம்புமாகலின்
நெய்ம்முறை நமக்கின் றாமென்று
ஐயைதன் மகளைக் கூஉய்க்
கடைகயிறு மத்துங்கொண்
டிடைமுதுமகள் வந்து தோன்றுமன்" (சிலப்.ஆய்ச்சி.)

என்றது மது.

பாவின்றெழுந்த கிளவியானும் என்பது - பாக்களை யொழியத் தோற்றிய சொல்வகையானும் உரையாம் என்றவாறு.

அஃதாவது, வழக்கின்கண் ஒரு பொருளைக் குறித்து வினவுவாருஞ் செப்புவாருங் கூறுங் கூற்று.

அதுவும் இலக்கணம் பிழையாமற் கூறவேண்டுதலானும் ஒரு பொருளைக் குறித்துச் செய்யப்படுதலானுஞ் செய்யுளாம். இதனைக் குறித்தன்றே 'செப்பும் வினாவும் வழாஅ லோம்பல்' (தொல். கிளவியாக்கம், 13) என்பது முதலாகக் கூறப்பட்ட இலக்கணமெல்லாம் என்று கொள்க.

பொருள்மரபில்லாப் பொய்ம்மொழியானும் என்பது- பொருளியல் பில்லாப் பொய்மொழியானும் உரைவரும் என்றவாறு.

நகைமொழியாவது - மேற்சொல்லப்பட்ட உரை பொருந்தாதென இகழ்ந்து கூறுதல். அவ் விகழ்ச்சியின் பின்னர்ப் பொருளுணர்த்தும் உரை பிறக்குமாதலின் பொருளொடு புணர்ந்த நகைமொழியானும் உரைவரு மென்றார்.

என்று உரைவகை நடையே நான்கென மொழிப என்பது - இவ்வகையினான வுரை நான்கு வகைப்படும் என்றவாறு. (166)

## பேராசிரியர்

**485. பாட்டிடை வைத்த ...................... மொழிப.**

*இஃது, உரையாமா றுணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) உரைப்பகுதி வழக்கு இந் நான்காகுமென்று சொல்லுவர் புலவர் என்றவாறு.

'பாட்டிடை வைத்த குறிப்பி னானும்' என்பது, ஒரு பாட்டினை இடையிடை கொண்டு நிற்குங் குறிப்பினான் வருவன உரையெனப்படும்; என்னை? பாட்டு வருவது சிறுபான்மையாகலின்; அவை; தகடூர்யாத்திரை போல்வன.

மற்று, பிறபாடை விரவியும் வருவனவோவெனின், அவற்றுள்ளுந் தமிழுரையாயின எல்லாம் 'பாட்டிடை வைத்த குறிப்பு' என ஈண்டடங்கும்; பிற பாடைக்காயின் ஈண்டு ஆராய்ச்சியின்றென்பது.

'பாவின் றெழுந்த கிளவி யானும்'

என்பது பாட்டின்றிச் சூத்திரத்திற்குப் பொருளெழுதுவன போல்வன. சூத்திரம் பாட்டெனப் படாவோவெனின், படா; பாட்டும் உரையும் நூலுமென (391) வேறோதினமையின்; அல்லாத சூத்திரத்தாற் சொல்லாத பொருளினை உரையாற் சொல்லித் தொடர்புபடுப்பது பாட்டிடை வைத்த குறிப்பாவது; இஃது அன்னதன்று, வேறொருவன் சூத்திரத்திற் கூறிய பொருளையே மற்றொருவன் கூறுகின்றா னாதலானென்பது. ஒழிந்த பாட்டிற்கும் இவ்வாறே பொருளெழுதின் அஃதொக்கும் அவை பாரதம், பருப்பதம் முதலியன.

"பொருள்மர பில்லாப் பொய்ம்மொழி யானும்"

என்பது, ஒரு பொருளின்றிப் பொய்படத் தொடர்ந்து சொல்லுவன. அவை: ஓர் யானையும் குரீஇயும் தம்மு(ள்ந)ட்பாடி இன்னுழிச் சென்று இன்னவாறு செய்தனவென்று அவற்றுக்கியையாப் பொருள்படத் தொடர்நிலையான் ஒருவனுழை ஒருவன் கற்று வரலாற்று முறையான் வருகின்றன.

பொருளொடு புணர்ந்த நகைமொழியானும் என்பது, பொய்யெனப் படாது மெய்யெனப்பட்டும் நகுதற்கேதுவாகுந் தொடர்நிலை; அதுவும் உரையெனப்படும்; அவையாவன: சிறுகுரீஇயுரையும், தந்திரவாக்கியமும் போல்வனவெனக் கொள்க. இவற்றுட் சொல்லப்படும் பொருள் பொய் யெனப்படாது உலகியலாகிய நகைதோற்றுமென்பது. இவ்வகையான் உரை நான்கெனப்படு மென்றவாறு. 'உரைநடை' என்னாது வகை என்ற தனான் இவ்வுரைப் பகுதி பிறிதும் ஒன்றுண்டு; அது மரபியலுட் பகுத்துச் சொல்லுதும். (173)

## நச்சினார்க்கினியர்

**173. பாட்டிடை வைத்த ...................... மொழிப.**

*இது, "நூலி னான வுரையி னான" (செய். 166) என நிறுத்த முறையே நூலுணர்த்தி யுரை கூறுகின்றது.*

(இ-ள்) பாட்டிடை வைத்த குறிப்[1]பினானும் என்பது, ஒரு பாட்டினை யிடையிடை கொண்டு நிற்குங் கருத்தினான் வருவனவும் எ-று.

அவை தகடூர் யாத்திரையும் சிலப்பதிகாரமும் போல்வன. ஆண்டுப் பிறபாடை தழுவி வருவன தமிழுரை யாகாமையின் ஈண்டாராய்ச்சியின்றாம். அதன்கண் தமிழுரையுள்ளன ஈண்டு அடங்கும்.

பாவின் றெழுந்த கிளவி யானும் என்பது, பாட்டின்றிச் சூத்திரத்திற்குப் பொருளெழுவன போல்வன.

சூத்திரம் பாட்டெனப்படா, பாட்டும் உரையும் நூலுமென வேறோதலின். அன்றியுஞ் சூத்திரங் கருதிய பொருளையன்றி யுரையான் வேறோர் பொருள் கூறி அதனைத் தொடர்புபடுத்திக் கூறாமையின்; ஆண்டும் ஒருவன் கூறியதற்கு ஒருவன் பொருள் கூறுகின்றானாம், ஒழிந்த பாட்டிற்கும் இவ்வாறே உரை கூறுவனவுமொக்கும்.

பொருளொடு புணராப் பொய்ம்மொழி யானும் என்றது, பொருண் முறைமையின்றிப் பொய்யாகத் தொடர்ந்து கூறுவன எ-று.

அவை ஓர் யானையுங் குதிரையுந் தம்முள் நட்பாடி இன்னுழிச் சென்று இன்னவாறு செய்தனவென்று அவற்றுக்கு இயையாப் பொருள்பட்டதோர் தொடர்நிலையாய் ஒருவனுழை யொருவன் கற்று வரலாற்று முறைமையான் வருகின்றன.

பொருளொடு புணர்ந்த நகைமொழி யானும் என்றது, பொய்யெனப்படாது மெய்யெனப்பட்டு நகுதற்கேதுவாகுந் தொடர் நிலையானும் எ-று. (173)

இவை சிறுக்குரீஇ யுரையும், தந்திரவாக்கியமும் போல்வன. இவை பொய்யெனப்படாது உலகியலாகிய நகை தோன்றுதலின்.

என்று உரைவகை நடையே நான்கென மொழிப என்றது, என்று உரைப்பகுதி வழக்கு இந் நான்குமென்று உரைப்பர் புலவர் எ-று.

---

1. பாட்டிடைவைத்த குறிப்பு - பாடல்களின் நடுநடுவே வைத்த உரைநடை.

பாவின்று எழுந்த கிளவி - பாட்டின்றி எழுதப்படும் உரைநடை

பொருள் மரபில்லாப் பொய்ம்மொழி - குருவியும் யானையும் சேர்ந்து இன்ன செயல் செய்தன என்பது போலவரும் கதைபற்றிய உரைநடை.

பொருளொடு புணர்ந்த நகைமொழி - நகைப்பதற்கு ஏதுவான ஆனால் பொருள் இயைபுடைய உரைநடை. விலங்கு, பறவை, ஒலிமூலம் தரும் கருத்துரை, மறைவான பொருள்தரும் அதாவது குறிப்பும் பொருள்தரும் உரை.

'வகை' யென்றதனான் உரைப்பகுதி பிறிதுமுள. அவை மரபியலுள் கூறுப. (173)

## சிவலிங்கனார்

**பாட்டிடை ....................... மொழிப.**

**(இ-ள்)** உரைநடை வகை நான்கு என மொழிவர், எ-று.

1. பாட்டிடை வைத்த குறிப்பினால் வருவது, பாடல்களின் இடையிடையே வருவது. சிலப்பதிகாரத்தின் உரைப்பாட்டுமடையிதுவாம்.
2. பாவில்லாமல் உலகர் வழங்கும் வழக்கம், செய்யுள் உரைகளும் ஆம்.
3. பொருள் மரபில்லாப் பொய்ம்மொழி - பொருளொடு பொருந்தும் மரபில்லாத பொய்க்கூற்று. அது யானையும் குதிரையும் நட்பாடி வாழ்ந்தன என்பதுபோல் கூறும் கூற்று. திராட்சைப்பழமும் நரியும் இதுவே.
4. பொருளொடு புணர்ந்த நகைமொழி - பொய்யெனப்படாது மெய்யாகி நகுதற்கு ஏதுவாகும் உரை. அது தொடுகுறிசாத்திரம் போல்வன. ஒருவர் கூற்றை நகைத்து மறுத்துப் பின் பொருளொடு பொருந்தும் உரை கூறுவதும் இதுவே. பின்வரும் சூத்திரத்துக்கு அவரவர் தத்தம் உரைகளுக் கேற்றவாறு உரை கூறுவர்.

இவை நான்கிலும் அடங்கும் உரைநடைகள்.

**அந் நால்வகையும் இருவகை**

**476. அதுவே தானும் இருவகைத்[1] தாகும். (167)**

## இலக்குவனார்

486. It is of two groups.

## இளம்பூரணர்

**476. அதுவே தானும் ..................... தாகும்.**

**(இ-ள்)** *என்-னின், மேற்சொல்லப்பட்ட உரை இரண்டு வகைப்படும் என்றவாறு.*

அது, மைந்தர்க்கு உரைப்பனவும் மகளிர்க்கு உரைப்பனவுமாம். (167)

---

1. ஓரிரு வகைத்தே - பேரா பாடம். ஈரிரு வகைத்தே - நச் - பாடம்
பேரா - நச் - உரை பார்க்க.

## பேராசிரியர்

**486. அதுவே தானும் ஓரிரு வகைத்தே.**

*இஃது, அவற்றின் தொகை கூறுகின்றது.*

(இ-ள்) அந் நான்கனுள், முதலன இரண்டும் ஒன்றாகவும், ஏனைய இரண்டும் ஒன்றாகவும் தொகுக்கப்படும் அவ்வாற்றாற் பயன் கொள்ளுங் கால் என்றவாறு. அவையாவன கூறுகின்றான். (174)

## நச்சினார்க்கினியர்

**174. அதுவே தானு மீரிரு வகைத்தே.**

(இ-ள்) இது, அந் நான்கனுள் முதலன இரண்டும் ஒன்றாகவும் ஏனைய விரண்டும் ஒன்றாகவும் தொடுக்கப்படும்; அவற்றால் பயன்கொள்ளும் காலத்து, எ-று. (174)

## சிவலிங்கனார்

**அதுவே தானு .................... வகைத்தே.**

*இதன் பொருள் விளங்கவில்லை.*

முன் சொல்லப்பட்ட நான்கனுள் முன் இரண்டும் ஒன்றாகவும் பின்னிரண்டும் ஒன்றாகவும் இருவகைப்படும் என்றுரைப்பர் பேராசிரியரும் நச்சினார்க்கினியரும்.

இளம்பூரணர் மைந்தர்க் குரைப்பனவும் மகளிர்க் குரைப்பனவும் என இருவகைப்படும் என்பர்.

மேற்சொல்லப்பட்ட உரைகள் மேலும் இருவகைத்தாகும் எனப் பொருள் கூறி அடுத்துவரும் சூத்திரம் அவ் விருவகை கூறுவதாகக் கொள்ளலாம்.

### இருவகைக்குரியார்

**477. ஒன்றே மற்றுஞ் செவிலிக் குரித்தே**
**ஒன்றே யார்க்கும் வரைநிலை யின்றே. (168)**

## இலக்குவனார்

487. One (group) belongs to the foster - mother and the other to all without distinction.

## இளம்பூரணர்

**477. ஒன்றே மற்றுஞ் ...................... யின்றே.**

*என்-னின், மேல் இருவகைப்படும் என்ற உரையை யுரைத்தற்குரி யாரை உணர்த்துதல் நுதலிற்று.*

**(இ-ள்)** மகளிர்க்கு உரைக்குமுரை செவிலிக்குரித்து; மைந்தர்க்கு உரைக்குமுரை யெல்லார்க்கு முரித்தென்றவாறு.

செவிலி இலக்கணத்தின் உரைக்கின்ற வுரையும்,[1] பாட்டில் உரைக் கின்ற வுரையும் கூறுவளோவெனின், அவ்விடங்களில் வரும் உரை பொருள்பற்றி வருதலின் அப் பொருள் கூறுவளென்க.

அன்றியும் 'அதுவே தானும்' என்பது, பொருளொடு புணர்ந்த நகைமொழியைச் சுட்டிற்றாக்கி அம் மொழியிரண்டு கூறுபடுமெனப் பொருளுரைப்பினும் அமையும். (168)

## பேராசிரியர்

**487. ஒன்றே மற்றுஞ் ................................ யின்றே..**

*இஃது, அவற்றது இயல்புணர்த்துதல் நுதலிற்று.*

**(இ-ள்)** இதுவும், மேனின்ற அதிகாரத்தான் இறுதி நின்ற இரண்டடன் தொகுதியாகிய ஒன்று செவிலிக்கே உரித்து எனவும், ஒழிந்த இரண்ட னானுமாகிய ஒன்று வரைவின்றி எல்லார்க்கும் உரித்து எனவுங் கூறியவாறு.

தலைமகளை வற்புறுத்துஞ் செவிலியர் புனைந்துரைத்து நகுவித்துப் (பொழுது)போக்குதற் குரியரென்பது இதன் கருத்து. இக் கருத்தேபற்றி பிற சான்றோரும்,

"செம்முது செவிலியர் பொய்ந்நொடி பகர"

என்றாரென்பது; பிறவும் அன்ன.

'மற்றும்' என்றதனான், அவையன்றி வருகின்ற பிசியுஞ் செவிலி யர்க்கு உரித்தென்பது கொள்க. இனி,

'பாட்டிடை வைத்த குறிப்பும் பாவின் றெழுந்த கிளவியும்'(485)

யாருக்கும் வரைவின்றி வருமாறு அவ்வச் செய்யுளுட் காணப்படும். (175)

## நச்சினார்க்கினியர்

**175. ஒன்றே மற்றுஞ் .................. யின்றே.**

---

1. இச் சூத்திரத்துக்குப் பேராசிரியர் நச்சினார்க்கினியர் உரை சிறக்கும்.

(இ-ள்) இது, மேனின்ற அதிகாரத்தான் இறுதி நின்ற இரண்டன் பகுதியுமாகிய ஒன்று செவிலிக்கேயுரித்து. ஒழிந்த இரண்டனானாகிய ஒன்றும் வரைவின்றி எல்லார்க்கு முரித்து எ-று.

தலைவியை வற்புறுக்கும் செவிலியர் புனைந்துரைத்து நகுவித்துப் பொழுதுபோக்குதற்குரியர் என்றவாறு. இக் கருத்தானே சான்றோர்,

“செம்முகச் செவிலியர் கைம்மிகக் குழீஇக்
குறியவு நெடியவு முரைபல பயிற்றி
யின்னே வருகுவ ரின்றுணை யோரென
வுகத்தவை மொழியவு மொல்லாள்” (நெடுநல்.153-6)

என்றார் பாட்டினுள். பிற சான்றோரும் “செம்முகச் செவிலியர் பொய்ந் நொடி பகர” என்றார்.

‘மற்றும்’ என்றதனான் இவையே யன்றி வருகின்ற பிசியுஞ் செவிலிக் குரித்தென்க.

இனிப் பாட்டிடை வைத்த குறிப்பும் பாவின்றெழுந்த கிளவியும் வரையறையின்றி வருமாறு பலவற்றுள்ளுங் காண்க. (175)

**சிவலிங்கனார்**

**ஒன்றே .............................. யின்றே.**

(இ-ள்) இதுவும் விளங்காப் பகுதியதே எனினும் பின்வருமாறு கூறலாம்.

ஒரு பகுதி உரை செவிலிக்குரியது, மற்றொரு பகுதி உரை யாவர்க்கும் உரியது, எ-று.

மேற்சொல்லப்பட்ட நான்கு உரைநடைகளுள் பொருளொடு புணர்ந்த நகைமொழியுரை செவிலிக்குரியது; மற்றைய உரைகள் யாவர்க்கும் உரிய என்பதாம்.

செவிலி எனவே நற்றாயும் கொள்க.

பிசி

**478. ஒப்பொடு புணர்ந்த உவமத் தானுந்
தோன்றுவது கிளந்த துணிவி னானும்
என்றிரு வகைத்தே பிசிநிலை[1] வகையே. (169)**

**இலக்குவனார்**

488. The *pisi* is of two sorts which are the simile woven out of comparison and the allegory.

1. பிசிவகை நிலையே - பேரா, நச் - பாடம்.

## இளம்பூரணர்

**478. ஒப்பொடு புணர்ந்த ............................ வகையே.**

*என்-னின், பிசியாமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) ஒப்போடே புணர்ந்த உவமைநிலையானும் பிசியாம்[1]; தோன்றுவதனைச் சொன்ன துணிவினானும் பிசியாம் என்றவாறு:

'அச்சுப் போலே பூப்பூக்கும், அமலே யன்ன காய்காய்க்கும்' என்பது பிசி. இது உவமைபற்றி வந்தது. (169)

## பேராசிரியர்

**488. ஒப்பொடு புணர்ந்த ...................... நிலையே.**

*இது, முறையானே பிசி இரண்டெனப்படு மென்கின்றது.*

(இ-ள்) ஒப்பொடு புணர்ந்த வுவமமென்பது, தன்கட் கிடந்த ஒப்புமைக் குணத்தோடு பொருந்தி வருமாற்றை உவமப் பொருளானும், இனி, ஒன்று சொல்ல ஒன்று தோன்றுந் துணிவிற்றாகச் சொல்லுஞ் சொல்லானுமென்று இவ்விரு கூற்றதாகும் பிசி கூறுபடும் நிலைமை என்றவாறு.

அவை 'பிறைகவ்வி மலைநடக்கும்' என்பது, ஒப்பொடு புணர்ந்த உவமம்; இஃது யானையென்றாவது[2]

"முத்துப்போற் பூத்து முகிழிற் களாவண்ண
நெய்த்தோர் குருதி நிறங்கொண்டு வித்துதிர்த்து"

என்பதுமது; இது, கமுகின்மேற்று.[3]

"நீராடான் பார்ப்பா னிறஞ்செய்யா னீராடி
லூராடு நீரிற் காக்கை"

என்பது, 'தோன்றுவது கிளந்த துணிவினான்' வந்தது. இது நெருப் பென்றாவது.[4] 'வகைநிலை' என்ற மிகையான், இவையுஞ் செவிலிக் குரித்தென்பது கொள்க. (176)

## நச்சினார்க்கினியர்

**176. ஒப்பொடு புணர்ந்த ................... நிலையே.**

---

1. பிசி - விடுகதை
2. பிறை - தந்தம், மலை - யானை
3. கமுகின் பாளை வெடித்தால் முத்துப்போல் காய்.அரும்பும் அது காய்த்தால் இரத்த நிறத்தில் இருக்கும்
4. நெருப்புப் பார்ப்பான் எனப்பட்டது. அது நீராடாது; நிறம் செம்மையுடையது. நீராடின ஊரில் பறக்கும் காக்கைபோல் கருநிறமாகிவிடும்.

*இது, முறையே பிசி யிரண்டென்கின்றது.*

**(இ-ள்)** தன்கட் கிடந்த வொப்புமைக் குணத்தோடு பொருந்தி வருமாற்றை யுவமப் பொருளானும், இனியொன்று கூற வொன்று தோன்றுந் துணிவிற்றாகக் கூறுங் கூற்றானும் என்றிரு கூற்றதாகும் பிசி கூறுபடு நிலைமை எ-று.

அவை 'பிறைகவ்வி மலைநடக்கும்.' இது, ஒப்பொடு புணர்ந்த உவமம்; இஃது யானையென்றாம்.

> "முத்துப்போற் பூத்து முகிழிற் கிளிவண்ண
> நெய்த்தோர் குருதி நிறங்கொண்டு வித்துதிர்த்து"

என்பது மது; இது, கமுகின்மேற்று.

> "நீராடான் பார்ப்பா னிறஞ்செய்யா னீராடி
> னூராடு நீரிற் காக்கை."

இது தோன்றுவது கிளந்த துணிவு. இது நெருப்பென்றாம்.[1] 'வகை' யென்றதனால் இது செவிலிக்கே யுரித்தென்க. (176)

## சிவலிங்கனார்

**ஒப்பொடு புணர்ந்த ............... வகையே.**

**(இ-ள்)** (பிசி - விடுகதை) பிசிவகை ஒப்பொடு பொருந்திய உவமை யானும் ஒன்று சொல்ல நேரே அதன் பொருள் தோன்றாது. வேறு ஒன்று தோன்றுவது சொல்லிய துணிவினானும் என இருவகையில் வரும், எ-று.

**(உ-ம்)**"பிறை கவ்வி மலைநடக்கும்."

இது உவமையால் மருப்புடைய யானையை யுணர்த்தும்.

> "நீராடான் பார்ப்பா னிறஞ்செய்யா னீராடின்
> ஊராடு நீரிற் காக்கை."

இது நெருப்பைச் குறித்தது. பார்ப்பான் என்றது நெருப்பு. அது நீராடாது. அதன் நிறம் செம்மை; அது நீரில் நனையின் ஊர்க் காக்கை போல் கருமையாம் என்பது பொருள்.

### முதுமொழி

**479. நுண்மையுஞ் சுருக்கமும் ஒளியு முடைமையும்[1]**
**மென்மையும்[2] என்றிவை விளங்கத் தோன்றிக்**

---

1. ஒளியுடைமையும் - பேரா, நச். பாடம்

2. எண்மையும் - பேரா. பாடம்

**குறித்த பொருளை முடித்தற்கு வரூஉம்**
**ஏது நுதலிய முதுமொழி யென்ப. (170)**

## இலக்குவனார்

489. The *muthumoli* (proverb) is that which occurs to give expression to a particular idea with reason quoted in subtle, short, bright and easy style.

## இளம்பூரணர்

**479. நுண்மையுஞ் சுருக்கமும் .................................... யென்ப.**

*என்-னின், முதுமொழியாமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) நுண்மை விளங்கவும், சுருக்கம் விளங்கவும், ஒளியுடைமை விளங்கவும், மென்மை விளங்கவுமென்று இன்னோரன்ன விளங்கவும் தோன்றிக் கருதின பொருளை முடித்தற்கு வரும் ஏதுவைக் குறித்தன முதுமொழி[1] யென்று சொல்லுவர் என்றவாறு. (170)

## பேராசிரியர்

**489. நுண்மையுஞ் சுருக்கமும்.............................யென்ப.**

*இது, முதுமொழி யுணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) கூரிதாய்ச் சுருங்கி விழுமிதா யெளிதாகி இயற்றப்பட்டுக் குறித்தபொருளை முன் மூன்றனுளொன்றனை முடித்ததற்கு வருமாயின், அங்ஙனம் வந்ததனைப் பொருண்முடித்தற்குக் காரணமாகிய பொருளி னைக் கருதுவது முதுமொழியென்ப புலவர் என்றவாறு.

"உழுத வுழுத்தஞ்செய் யூர்க்கன்று மேயக்
கழுதை செவியரிந் தற்றால் - வழுதியைக்
கண்டன கண்க ளிருப்பப் பெரும்பணைத்தோள்
கொண்டன மன்னோ பசப்பு"

என்றவழி, மற்று வழுதியைக் கண்ட கண் இருப்பத் தோள் பசந்தன என்றக்கால், ஒன்றன் வினைப்பயன் ஒன்று நுகர்ந்ததென்புழிக் குறித்த பொருள் இயைபின்மை கூறுதலாயிற்று.[2] அதனைச் சொற்றொடர் இனிது விளக்கிற்றன்றாயினும் முற்கூறிய முதுமொழி. முடித்ததென்பது; என்னை? அதன்கண்ணே அது முடித்தற் கேதுவாகிய இயைபின்மை கிடந்தமை

---

1. முதுமொழி - பழமொழி

2. இதற்குத் தரப்பட்ட - முடிக்கப்பட்ட முதுமொழி : வயலில் விளைந்த உளுந்தை ஊர்க்கன்று மேயக் கழுதைக்காதை அரிந்ததுபோல என்பது.

யினென்பது. இது பருப்பொருட்டன்றி நுண்ணிதாகிச் சொற்சுருக்க முடைத்தாய் விழுமிதாகி எளிதிற் பொருள்தோன்றியவாறு கண்டு கொள்க. எனவே, இதுவும் இந் நாற்பகுதித் தென்றவாறு.[1] (177)

## நச்சினார்க்கினியர்

**177. நுண்மையுஞ் சுருக்கமும்..............................யென்ப.**

*இது, முதுமொழி கூறுகின்றது.*

**(இ-ள்)** நுண்மையும் சுருக்கமும் ஒளியுடைமையும் மென்மையும் என்றிவை விளங்கத் தோன்றி - கூர்மையும், சொற்சுருங்கி இருத்தலும், விழுப்பமும், எளிதில் பொருள் தெரிதலும் என்ற இந் நான்கும் விளங்கத் தோன்றி, குறித்த பொருளை முடித்தற்கு வரூஉம் - அறம், பொருள், இன்பம் என்னும் மூன்றனுள், ஒன்றை முடித்தற்கு வருமாயின், ஏது நுதலிய முதுமொழி என்ப - அங்ஙனம் வந்ததனை அப் பொருள் முடித்தற்குக் காரணமாகிய பொருளினைக் கருதிவரும் முதுமொழி யென்பர் புலவர் எ-று.

"உழுத வுழுத்தஞ்செய் யூர்க்கன்று மேயக்
கழுதை செவியரிந் தற்றால் - வழுதியைக்
கண்டன கண்க ளிருப்பப் பெரும்பணைத்தோள்
கொண்டன மன்னோ பசப்பு"

இதனுள் ஒன்றன் வினைப்பயன் ஒன்று நுகர்ந்ததெனக் குறித்து அப் பொருளியைபின்மை கூறியதனைச் சொற்றொடரினிது விளக்காதேனும் முற்கூறிய முதுமொழிக்கண்ணே அப் பொருளை முடித்தற் கேதுவாகிய இயைபின்மை கிடந்து முடிந்தவாறு காண்க. இதனுள் நுண்மை முதலிய நான்குங் காண்க. பழமொழி இவ் விலக்கணம்பற்றிச் செய்தது. (177)

## சிவலிங்கனார்

**நுண்மையுஞ் சுருக்கமும் ........................... யென்ப.**

**(இ-ள்)** முதுமொழி என்பது, நுண்மை சுருக்கம் ஒளி மென்மை என்பவை விளங்கித் தோன்றுமாறு சொல்வான் தான் குறித்த பொருளை இத்தகையது என முடித்தற்கு ஏற்ப வரக்கூடிய காரணத்தைத் தன்கண் கொண்ட உரையாம் என்பர், எ-று.

**(உ-ம்)"உரைமுடிவு காணான் இளமையோன் என்ற
நரைமுது மக்கள் உவப்ப - நரைமுடித்துச்
சொல்லால் முறைசெய்தான் சோழன் குலவிச்சை
கல்லாமற் பாகம் படும்."**

---

1. **இது - இப்** பிசி. நாற்பகுதித்து - நுண்மை, சுருக்கம், விழுமம், எளிமை.

இதில், 'குலவிச்சை கல்லாமல் பாகம் படும்' என்பது முதுமொழி.

இளையனாய போதே அரியணையேறிய கரிகாலனிடம் ஒரு வழக்கைக் கூறவந்த முதியோர், அவன் இளையன்; எவ்வாறு அனுபவ மில்லாமல் வழக்கைத் தீர்ப்பான் என எண்ணியபோது, அவன் முதியான் போன்று நரைமுடித்து வந்து தீர்ப்பு வழங்கினான். இது கூற வந்த பொருள். இதில் உள்ள தடை இளையன் அனுபவம் இல்லாதவன் நீதி வழங்க முடியுமா என்பது. முடியாது. ஆனால் அவன் நல்ல தீர்ப்பு வழங்கினான்; முதியவர் உவப்ப வழங்கினான். இது முரணாகுமே எனின் அதற்குரிய காரணத்தைத் தன்கண் கொண்டு விடை தந்தது 'குலவிச்சை கல்லாமல் பாகம் படும்' என்னும் பழமொழி.

ஓரிடத்து ஒன்று நிகழ அதன் பயன் பிறிதோரிடத்து நிகழ்வதற்குத் 'தென்னை மரத்தில் தேள்கொட்டப் பனைமரத்தில் நெறிகட்டியது' என்னும் பழமொழியை உலகினர் கூறுவதும் இதுவே. 'காலில் அடித்தான் வாயில் பல்போச்சாம்' என்பதும் இது.

வழுதியைக் கண்ட கண்ணை விட்டுவிட்டுப் பசப்பானது தோளில் பரவியது என்பதைக் கூறும் தலைவி, 'வயல் உளுந்தை ஊர்க்கன்று மேயக் கழுதைக் காதை யறுத்தானாம்' என்ற பழமொழியைக் கூறுவதாக வந்த பாடலைப் பேராசிரியரும் நச்சினார்க்கினியாரும் காட்டுவர். அது,

"உழுத உழுத்தஞ்செய் ஊர்க்கன்று மேயக்
கழுதை செவியரிந் தற்றே - வழுதியைக்
கண்ட கருங்கண் இருப்பப் பெரும்பனைத்தோள்
கொண்டன மன்னோ பசப்பு"

என்பது. பெரும்பாலும் வேற்றுப்பொருள் வைப்பணியும் இதன்பாற் சாரும்.

மந்திரம்

**480. நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளக்கும்[1]**
**மறைமொழி தானே மந்திரம் என்ப. (171)**

## இலக்குவனார்

490. *Mandhiram* is the formula sworn in the name of great men whose words never fail.

## இளம்பூரணர்

**நிறைமொழி .............................. என்ப.**

1. கிளந்த - பேரா, நச். பாடம்

*என்-னின், மந்திரம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

**(இ-ள்)** நிறைந்த மொழியையுடைய மாந்தர் தமதாணையாற் சொல்லப்பட்ட மறைந்த சொல் மந்திரமாவது என்றவாறு.

அது வல்லார்வாய்க் கேட்டுணர்க. (171)

## பேராசிரியர்

**490. நிறைமொழி ................................ என்ப.**

*இது, மந்திரச்செய்யு ளுணர்த்துதல் நுதலிற்று.*

**(இ-ள்)** நிறைமொழி மாந்தரென்பது, சொல்லிய சொல்லின் பொருண்மை யாண்டுங் குறைவின்றிப் பயக்கச் சொல்லும் ஆற்றலுடை யாராவார், ஆணையாற் கிளக்கப்பட்டுப் புறத்தார்க்குப் புலனாகாமன் மறைத்துச் சொல்லுஞ் சொற்றொட ரெல்லாம் மந்திரமெனப்படும் என்றவாறு.

அவை வல்லார்வாய்க் கேட்டுணர்க. 'தானே' என்று பிரித்தான், இவை தமிழ் மந்திரமென்றற்கும், பாட்டாகி அங்கதமெனப்படுவனவும் உள, அவை நீக்குதற்குமென உணர்க அவை:

"ஆரிய நன்று தமிழ்தீ தெனவுரைத்த
காரியத்தாற் காலக்கோட் பட்டானைச் - சீரிய
வந்தண் பொதியி லகத்தியனா ராணையாற்
செந்தமிழே தீர்க்க சுவா"[1]

எனவும்,

"முரணில் பொதியின் முதற்புத்தேள் வாழி
பரண கபிலரும் வாழி - யரணிய
லானந்த வேட்கையான் வேட்கோக் குயக்கோட
னானந்தஞ் சேர்க சுவா"

எனவும், இவை தெற்கண் வாயில் திறவாத பட்டிமண்டபத்தார் பொருட்டு நக்கீரர் ஒருவன் வாழவும் (ஒருவன் சாவவும்) பாடிய மந்திரம் அங்கதப்பாட்டாயின. மேல் 'பாட்டுரை நூல்' (391) என்புழி அங்கத மென்றோதினான் இன்ன மந்திரத்தை. இஃது, ஒருவனை இன்னவாற்றாற் பெரும்பான்மையுஞ் சபித்தற் பொருட்டாகலின் அப் பெயர்த்தாயிற்று.

இக் கருத்தேபற்றிப் பிறரும்,

"நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும்" **(குறள்.28)**

என்றாரென்க. அங்கதப்பாட்டாயவழி அவற்றுக்கு அளவை,

---

1. 'சுவாகா என்பது மறைமொழி - மந்திரம்.

"அங்கதப் பாட்டவற் றளவோ டொக்கும்" (471)

என மேற்கூறினா னென்பது. (178)

## நச்சினார்க்கினியர்

**178. நிறைமொழி மாந்த..............................யென்ப.**

*இது, மந்திரச் செய்யுள் கூறுகின்றது.*

(இ-ள்) சொல்லிய சொல்லின் பொருண்மை யாண்டுங் குறைவின்று பயக்கச் சொல்லு மாற்றலுடையார் அவ் வாணையாற் கிளக்கப்பட்டுப் புறத்தார்க்குப் புலனாகாமை மறைத்துச் சொல்லுஞ் சொற்றொடரெல்லாம் மந்திரமெனப்படும் எ-று.

அவை வல்லார்வாய்க் கேட்டுணர்க.

'தானே' யென்று பிரித்தார், இவை தமிழ் மந்திரமென்றற்கும், மந்திரந்தான் பாட்டாகி யங்கத மெனப்படுவன வுள, அவை நீக்குதற்கு மென்றுணர்க.

அவை:

"ஆரிய நன்று தமிழ்தீ தெனவுரைத்த
காரியத்தாற் காலக்கோட் பட்டானைச் - சீரிய
வந்தண் பொதியி லகத்தியனா ராணையாற்
செந்தமிழே தீர்க்கசுவா கா"

"முரணில் பொதியின் முதற்புத்தேள் வாழி
பரண கபிலரும் வாழி - யரணிய
லானந்த வேட்கையான் வேட்கோக் குயக்கோட
னானந்தஞ் சேர்கசுவா கா"

எனவும், இவை தெற்கில் வாயில் திறவாத பட்டிமண்டபத்தோர் பொருட்டு நக்கீரர் ஒருவன் வாழவுஞ் சாவவும் பாடி யின்னவாறாகவெனச் சவித்தற் பொருட்டாய் வந்த மந்திரம் பாட்டாய் வருதலின் அங்கதமாயிற்று.

**இதனான்,**

"நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும்" **(குறள். 28)**

என்றார். (178)

## சிவலிங்கனார்

**நிறைமொழி ........................ என்ப.**

(இ-ள்) தாம் சொல்லும் சொல்லாற் பிறர்க்குப் பயன் பயந்தேவிடும் ஆற்றலுடைய மொழியினையுடையார் தமது ஆணையாற் சொல்லிய புறத்தார்க்குச் செவிப்புலனாகாமல் மறையும் சொல்லும் சொற்றொடருமே மந்திரம் என்பர், எ-று.

மந்திரம் தமிழ்மந்திரம். இது பிறரைச் சபிக்கவரின் அங்கதம் எனப்படும்.

"முரணில் பொதியின் முதற்புத்தேள் வாழி
பரண கபிலரும் வாழி - யரணிய
லானந்த வேட்கையான் வேட்கோக் குயக்கோட
னானந்தஞ் சேர்கசுவா கா"

"ஆரிய நன்று தமிழ்தீ தெனவுரைத்த
காரியத்தாற் காலக்கோட் பட்டானைச் - சீரிய
வந்தண் பொதியி லகத்தியனா ராணையாற்
செந்தமிழே தீர்க்கசுவா கா."

சுவாகா என்பது தமிழ்மந்திரம். கொண்டான் என்னும் குயவனை நக்கீரர் முதற்பாடலால் சாவவும் அடுத்த பாடலால் பிழைக்கவும் செய்தார் என்பர்.

சமயச்சார்பான கடவுள்மந்திரம் தன்பொருட்டுக் கூறப்படுவது. மந்திரங்களின் பொருளும் பயனும் வல்லார்வாய்க் கேட்டுணர்க.

## குறிப்பு

**481. எழுத்தொடுஞ் சொல்லொடும் புணரா தாகிப்**
**பொருட்புறத் ததுவே குறிப்பு[1] மொழியே. (172)**

### இலக்குவனார்

491. The *kuṟippu* is, they say, that which suggests meanings other than what the words indicate plainly.

### இளம்பூரணர்

**481. எழுத்தொடுஞ் .............................. மொழியே.**

*என்-னின், குறிப்புமொழியாமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) எழுத்தொடும் சொல்லொடும் புணராதாகிச் சொல்லினா னுணரப்படும் பொருளின் புறத்ததுவே குறிப்புமொழி என்றவாறு.

1. குறிப்புமொழி என்ப - பேரா, நச். பாடம்

மேல் அங்கதமென்று சொல்லி ஈண்டுக் குறிப்புமொழி யென்றதனான் இச் சொல் வசைகுறித்து வருமென்று கொள்க.

புகழ்குறித்து வந்தாற் குற்றமென்னையெனின், அதனை வெளிப் படக் கூறக் கேட்டார்க்குந் தனக்கும் இன்பம் பயத்தலிற் குறிப்பினாற் கூறல் வேண்டுவது வசையென்று கொள்ளப்படும். (172)

## பேராசிரியர்

**491. எழுத்தொடுஞ் .............................. யென்ப.**

*இது, முறையானே கூற்றிடை வைத்த குறிப்புணர்த்துதல்' (477) நுதலிற்று.*

(இ-ள்) எழுத்து முடிந்தவாற்றானும், சொல் தொடர்ந்தவாற்றானும், சொற்படுபொருளானும், செவ்வன் பொருளறிய லாகாமையின், எழுத் தொடுஞ் சொல்லொடும் புணராது பொருட்குப் புறத்தே பொருளுடைத் தாய் நிற்பது குறிப்பாவது என்றவாறு.

இதனைப் 'பாட்டுரை நூல்' (391) என்றவழி; 'வாய்மொழி' என்றோதினான், கவியாற் பொருள் தோன்றாது பின்னர் இன்னது இதுவெனச் சொல்லி உணர்த்தப்படுதலின்.

இனி, அதனை இதன் தொகைச் சூத்திரத்தைக் 'கூற்றின் வைத்த குறிப்பு' (477) என்று ஓதினான் பாட்டிடைப் படுபொருள் பிறிதாகி அதனிடையே குறித்துக்கொண் டுணரினல்லது மெய்ப்படாதென்றற் கென்பது. பிறர் அவற்றைப் பொருளிசை யென்று சொல்லுப.

"குடத்தலையர் செவ்வாயிற் கொம்பெழுந்தா கையி
னடக்கிய மூக்கின ராம்'

என வரும். இதனுட் குடமே தலையாகப் பிறந்தாரெனவும், கொம்பெழுந்த வாயினரெனவும், கையுட் கொண்ட மூக்கின ரெனவும் கூறியக்கால் எழுத்தும், சொல்லும், பொருளும் இயல்பிலவாதலும் குறிப்பினான் அதனைக் குஞ்சரமென்று கொண்டவாறும் கண்டுகொள்க; பிறவும் அன்ன.

மற்றிது பிசியெனப்படாதோ வெனின், இது பாட்டு வடிவிற் றாகலின் அற்றன்றென்பது; அஃதேல், பாட்டெனப் படாதோவெனின், குறித்த பொருண் முடிய நாட்டாமையின் யாப்பழிந்து, 'நாற்சொல் லியலான் யாப்புவழிப் படாமை' (392) யின் மரபும் அழிந்து, பிறவுறுப்புப் பலவுங் கொண்டமையிற் பாட்டெனவும் படாதென்பது. இஃது 'எழுத்து முதலாக வீண்டிய வடி' (390) யெனப்படாமையின் இதனையும் அடி வரையில்லனவற்றோடு ஓதினா னென்பது. அல்லாதார் குறிப்பிசை வந்த செய்யுளெல்லாங் குறிப்பெனப் படுமென்ப. அங்ஙனங்கூறிற் குறிப் பிசையுடைய பாட்டினுள் வாராவாகிய செல்லுமென மறுக்க. (179)

**நச்சினார்க்கினியர்**

**179. எழுத்தொடுஞ் .......................... யென்ப.**

*இது, முறையே கூற்றிடை வைத்த குறிப்புணர்த்துகின்றது.*

(இ-ள்) எழுத்து முடிந்தவாற்றானுஞ் சொற்றொடர்ந்தவாற்றானுஞ் சொற்படுபொருளானுஞ் செவ்வன் பொருளறிய வரிதாகிப் பொருட் புறத்தே பொருளுடைத்தாயும் நிற்பது குறிப்புமொழியாவது எ-று.

(எ-டு)"குடத்தலையர் செவ்வாயிற் கொம்பெழுந்தார் கையி
னடக்கிய மூக்கினர் தாம்"

இது, குஞ்சரமென்ப துணர்த்திற்று. இது கூறுகின்ற பொருளைக் கரந்து கூறப்பட்டு ஏது முதலியவற்றோடு புணராது நின்றது. இது பாட்டு வடிவிற்றாய் வருதலிற் பிசியெனலு மாகாது, குறித்த பொருளை முடிய நாட்டினாற் சொல்லியலான் யாப்புவழிப் படாமையின் மரபழிந்து பிறவுங் குறைதலிற் பாட்டெனவும் படாதாயிற்று. அதனான் இது அடிவரையறை யின்றாயிற்று. (179)

**சிவலிங்கனார்**

**எழுத்தொடுஞ் .............................. யென்ப.**

(இ-ள்) ஓரெழுத்து மொழியோடும் தொடர்மொழியோடும் தொடர்ப் பொருளோடும் பொருந்தாமல் அவற்றின் பொருளின் புறத்தே தோன்றுவது குறிப்பு என்பர், எ-று.

(உ-ம்)"பல்சான் றீரே பல்சான் றீரே
..............................................................
பயனில் மூப்பிற் பல்சான் றீரே" (புறம்.195)

என்றது இகழ்ச்சிக் குறிப்பு. பெரும்பான்மையும், குறிப்புமொழி இகழ்ச்சிப் பொருளிலேயே வரும் என்பாரும் உளர்.

**பண்ணத்தி**

**482. பாட்டிடைக் கலந்த பொருள வாகிப்
பாட்டின் இயல பண்ணத் திய்யே.[1] (173)**

**இலக்குவனார்**

492. *Pannaththi* is that which has the theme of verse as its own and moves in the nature of songs.

1. பண்ணத் தியல்பே - பேரா. நச். பாடம்

## இளம்பூரணர்

**482. பாட்டிடைக் கலந்த ------------------ தியே.**

*என்-னின், பண்ணத்தி[1] யாமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) மேல் இத்துணையும் பாவும் பாவின்றி வழங்குவனவும் எடுத்தோதினார். இனிப் பிறநூலாசிரியர் விரித்துக் கூறின இசைநூலின் பாவினமாமாறு உணர்த்துதலின் இது .............. பாட்டிடைக் கலந்த பொருளவாகி என்பது - பாட்டின்கட் கலந்த பொருளையுடைத்தாகி யென்றவாறு.

எனவே, அவ்வடி பாவிற்குரிய பொருள் கொள்ளப்படும்.

பாட்டி னியல பண்ணத் தியே என்பது - பாட்டுகளின் இயல்பை யுடையவாம் பண்ணைத் தோற்றுவிக்குஞ் செய்யுள்கள் என்றவாறு.

பண்ணைத் தோற்றுவித்தலாற் பண்ணத்தி யென்றார்.

அவையாவன சிற்றிசையும் பேரிசையு முதலாக இசைத்தமிழில் ஓதப்படுவன. அவையாமாறு வருகின்ற சூத்திரத்தாற் கூறுப. (173)

## பேராசிரியர்

**492. பாட்டிடைக் கலந்த ..................................... யியல்பே.**

*இது, பண்ணத்தி கூறுகின்றது.*

(இ-ள்) பழம்பாட்டினூடு கலந்த பொருளே தனக்குப் பொருளாகப் பாட்டும் உரையும்போலச் செய்யப்படுவன பண்ணத்தி என்றவாறு.

மெய்வழக்கல்லாத புறவழக்கினைப் பண்ணத்தியென்ப. இஃது எழுதும் பயிற்சி யில்லாத புறவுறுப்புப் பொருள்களைப் பண்ணத்தி யென்பவென்பது. அவையாவன நாடகச் செய்யுளாகிய பாட்டுமடையும் வஞ்சிப்பாட்டும் கடகண்டும் முதலாயின. அவற்றை, மேலதேபோலப் பாட்டென்னாராயினார், நோக்கு முதலாயின உறுப்பின்மையினென்பது. அவை (645) வல்லார்வாய்க் கேட்டுணர்க. (180)

## நச்சினார்க்கினியர்

**180. பாட்டிடைக் கலந்த .............................. யியல்பே.**

*உரை இல்லை.*

## சிவலிங்கனார்

**பாட்டிடைக் ....................... யியல்பே.**

---

1. பண்ணத்தி - பண்ணுடைய பாடல். கீர்த்தனை போல்வன

(இ-ள்) நான்கு பாவிலும் கலந்துவரும் பொருள்களே தனக்கும் பொருளாகி உரைநடையாயினும் பாட்டின் இயல்போல வருவது பண்ணத்தியாம், எ-று.

பண்ணைத் தனக்கு முதன்மையாகக் கொண்டது பண்ணத்தி. தாழிசை துறை விருத்தங்களைப் பண்ணத்தியில் சேர்க்கலாம். தேவாரம், திருப்புகழ், திருவாய்மொழி, கீர்த்தனைகள் யாவும் பண்ணத்தியாம்.

பண் பாடுபவன் பாணன். பாணனால் பாடப்படும் இசைப்பாக்கள் பண்ணத்தியாம் என்க.

### பண்ணத்தி பிசிபோல்வது

## 483. அதுவே தானும் பிசியொடு மானும். (174)

## இலக்குவனார்

493. It is similar to *pisi.*

## இளம்பூரணர்

483. அதுவே தானும் ...................... மானும்.

*என்-னின், மேற்சொல்லப்பட்டதனுள் ஓர் உதாரணம் உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) மேற்சொல்லப்பட்ட பண்ணத்தி பிசியோடொத்த அளவிற்று என்றவாறு.

பிசியென்பது இரண்டடி அளவின்கண்ணே வருவதாதலின் இதுவும் இரண்டடியான் வருமென்று கொள்ளப்படும்.

(உ-ம்) "கொன்றை வேய்ந்த செல்வன் அடியிணை
என்றும் ஏத்தித் தொழுவோம் யாமே."

இது, பிசியோடு ஒத்த வளவிற்றாகிப் பாலையாழென்னும் பண்ணிற்கு இலக்கணப் பாட்டாகி வந்தமையிற் பண்ணத்தியாயிற்று. பிறவுமன்ன. (174)

## பேராசிரியர்

493. அதுவே தானும் ...................... மானும்.

*இதுவும் அது.*

(இ-ன்) மேற்கூறப்பட்ட பண்ணத்தி பிசியோடொக்கும் என்றவாறு.

அதனை ஒத்தலென்பது அதுவுஞ் செவிலிக்குரித்தென்றவாறு, 'பிசியொடும்' என்ற உம்மையால்,

"பொருளொடு புணராப் பொய்ம்மொழி யானும்
பொருளொடு புணர்ந்த நகைமொழி யானும்" (485)

ஒக்குமென்றுணர்க. 'தானும்' என்ற மிகையாற் பாட்டுடை வசைக் கூத்திற்கே உரித்தென்பது கொள்க. (181)

## நச்சினார்க்கினியர்

181. அதுவே தானும் .......................... மானும்.

உரை இல்லை.

## சிவலிங்கனார்

அதுவே தானும் .............................. மானும்.

(இ-ள்) அப் பண்ணத்தியானது பிசியோடு ஒக்கும்; அதாவது இரு வகைப்படும், எ-று.

ஒருவகை பாணர் பாடுவது; மற்றொருவகை விறலியர் ஆடிப் பாடுவது.

பண்ணத்தி அடிவரையறை

484. அடிநிமிர் கிளவி ஈரா றாகும்
அடியிகந்து வரினுங் கடிவரை யின்றே. (175)

## இலக்குவனார்

494. Its maximum lines are twelve.

495. It is not to be avoided if it occurs beyond the limit of the maximum allowed for it.

## இளம்பூரணர்

484. அடிநிமிர் ...................... யின்றே.

*என்-னின், இதுவும் பண்ணத்தி பாகுபடுமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

பண்ணத்தியெனினும் பாவினமெனினு மொக்கும்.

"நாற்சீர் கொண்ட தடியெனப் படுமே" (செய்யுளியல், 31)

யென்றமையான் அடியென்பது நாற்சீரான் வருவதென்று கொள்க.

(இ-ள்) நாற்சீரடியின் மிக்குவரும் பாட்டுப் பன்னிரண்டும் அவ்வழி அவ்வடியின் வேறுபட்டு வருவனவுங் கொள்ளப்படும் என்றவாறு.

இதனாற் சொல்லியது இருசீரடி முதலிய எல்லா வடிகளானு மூன்றடிச் சிறுமையாக ஏறிவரும் பாவினம் என்றவாறாம்.

பன்னிரண்டாவன ஆசிரியம், வஞ்சி, வெண்பா, கலியெனச் சொல்லப்பட்ட நான்கு பாவினோடுந் தாழிசை துறை விருத்தமென்னு மூன்றினத்தையும் உறழப் பன்னிரண்டாம்.

அவற்றுள், தாழிசையாவது: ஆசிரியத்தாழிசை, வஞ்சித்தாழிசை, வெண்டாழிசை, கலித்தாழிசை என நான்காம்.

துறையாவது: ஆசிரியத்துறை, வஞ்சித்துறை, வெண்டுறை, கலித் துறை என நான்காம்.

விருத்தமாவது: ஆசிரியவிருத்தம், வஞ்சி விருத்தம், வெளிவிருத்தம், கலிவிருத்தம் என நான்காம்.

அவற்றுள் ஆசிரியத் தாழிசையாவது மூன்றடி யொத்துவருவது;

"நீடற்க வினையென்று நெஞ்சின் உள்ளி
நிறைமலர்சாந் தொடுபுகையும் நீரு மேந்தி
வீடற்குந் தன்மையின் விரைந்து சென்று
விண்ணோடு மண்ணிடை நண்ணும் பெற்றி
பாடற்கும் பணிதற்குந் தக்க தொல்சீர்ப்
பகவன்ற னடியிரண்டும் பணிது நாமே" (யா.வி.ப.264)

என வரும்.

அவ்வழி ஒருபொருள்மேல் மூன்றடுக்கி வருவன சிறப்புடைத்தென ஒருசாரார் உதாரணங் காட்டுமாறு:

"கன்று குணிலாக் கனியுதிர்த்த மாயவன்
இன்றுநம் மானுள் வருமே லவன்வாயிற்
கொன்றையந் தீங்குழல் கேளாமோ தோழீ;

பாம்பு கயிறாக் கடல்கடைந்த மாயவன்
ஈங்குநம் மானுள் வருமேல் அவன்வாயில்
ஆம்பலந் தீங்குழல் கேளாமோ தோழீ;

கொல்லையஞ் சாரற் குருந்தொசித்த மாயவன்
எல்லைநம் மானுள் வருமேல் அவன்வாயில்
முல்லையந் தீங்குழல் கேளாமோ தோழீ". (சிலப்.ஆய்ச்சி.)

இவை மூன்றடியான் மூன்றடுக்கி வந்த ஆசிரியத்தாழிசை யென்றவாறு.

இவை அளவடியான் வருதலானும் ஒத்து மூன்றாகி வருதலானும் இவ் வாசிரியர் மதத்தால் தரவின்றாகித் தாழிசை பெற்ற கொச்சக வொருபோ கெனப்படும். மேற்காட்டியதே ஆசிரியத்தாழிசை.

இனி, வஞ்சித் தாழிசையாவது குறளடி நான்கினால் ஒருபொருள் மேன் மூன்றடுக்கி வரும்.

"மடப்பிடியை மதவேழங்
தடக்கையால் வெயில்மறைக்கும்
இடைச்சுரம் இறந்தார்க்கே
நடக்குமென் மனனேகாண்;

இரும்பிடியை இகல்வேழங்
பெருங்கையால் வெயில்மறைக்கும்
அருஞ்சுரம் இறந்தார்க்கே
விரும்புமென் மனனேகாண்;

பேடையை இரும்போத்துத்
தோகையால் வெயில்மறைக்கும்
காடகம் இறந்தார்க்கே
ஓடுமென் மனனேகாண்" (யா.வி.ப.341)

என வரும்.

அஃதேல் இவை மூன்றடுக்கி வருதலிற் கொச்சகவொருபோகாதல் வேண்டுமெனின், அளவடியான் வாராமையான் ஆகாதென்க.

இனி, வெண்டாழிசையாவது மூன்றடியான் வந்து வெண்பாப் போல இறும். அது,

"நண்பி தென்று தீய சொல்லார்
முன்பு நின்று முனிவு செய்யார்
அன்பு வேண்டு பவர்" (யா.வி.ப. 244)

என வரும்.

சிந்தியல் வெண்பா ஒருபொருள்மேல் மூன்றடுக்கி வருவதனை வெள்ளொத்தாழிசை யென்ப. அது,

"அன்னாய் அறங்கொல் நலங்கிளர் சேட்சென்னி
ஒன்னார் உடைபுறம் போல நலங்கவர்ந்து
துன்னான் துறந்து விடல்;

ஏடி அறங்கொல் நலங்கிளர் சேட்சென்னி
கூடார் உடைபுறம் போல நலங்கவர்ந்து
நீடான் துறந்து விடல்;

பாவாய் அறங்கொல் நலங்கிளர் சேட்சென்னி
மேவார் உடைபுறம் போல நலங்கவர்ந்து
காவான் துறந்து விடல்" (யா.வி.ப.330)

என வரும்.

கலித்தாழிசையாவது அடிவரையின்றி ஒத்துவந்து ஈற்றடி சிலசீர் மிக்குங் குறைந்தும் வருவது. **அது,**

"வாள்வரி வேங்கை வழங்குஞ் சிறுநெறியெங்
கேள்வரும் போழ்தின் எழால்வாழி வெண்திங்காள்
கேள்வரும் போழ்தின் எழாதாய்க் குறாஅலியரோ
நீள்வரி நாகத் தெயிறே வாழி வெண்திங்காள்" (யா.வி.ப.330)

என வரும்.

இத் தாழிசை ஒருபொருள்மேல் மூன்றடுக்கிவரினுங் கொச்சக வொருபோகெனப்படா; கலித்தாழிசை யெனப்படும், ஈற்றடி மிக்கு வருதலான்.

இனி, ஆசிரியத்துறையாவது நான்கடியாய் இடையிடை சீர் குறைந்து வரும். அது,

"கரைபொரு கான்யாற்றங் கல்லதர் எம்உள்ளி வருதிராயின்
அரையிருள் யாமத் தடுபுலியோ நும்மஞ்சி யகன்று போக
நரையுருமே றுங்கை வேலஞ்சு நும்மை
வரையர மங்கையர் வெளவுதல் அஞ்சுதும் வாரலையோ"
(யா.வி.ப.265)

என வரும்.

வஞ்சித் துறையாவது குறளடி நான்கினால் தனித்து வரும். அது,

"முல்லைவாய் முறுவலித்தன
கொல்லைவாய்க் குருந்தீன்றன
மல்லன்வான் மழைமுழங்கின
செல்வர்தேர் வரவுகாண்குமே" (யா.வி.ப.341)

என வரும்.

இனி, வெண்டுறையாவது மூன்றடிச் சிறுமையாக ஏழடிப் பெருமையாக வந்து இறுதியடிகளில் சில சீர் குறைந்துவரும்.

"குழலிசைய வண்டினங்கள் கோழிலைய செங்காந்தட் குலைமேற்பாய
அழலெரியின் மூழ்கினவால் அந்தோ வளியவென் றயல்வாழ் மந்தி
கலுழ்வனபோல் நெஞ்சயர்ந்து கல்லருவிதூஉம்
நிழல்வரை நன்னாடன் நீப்பனோ அல்லன்" (யா.வி.ப. 246)

என வரும்.

பிறவும் வந்தவழிக் காண்க.

கலித்துறையாவது நெடிலடி நான்கினான் வருவது.

அஃதாவது, ஐஞ்சீரான் வருவதும், பதினாறும், பதினேழும் எழுத்துப் பெற்று நான்கடியான் வருவனவுமாம்.

"யானுந் தோழியும் ஆயமும் ஆடுந் துறைநண்ணித்
தானுந் தேரும் பாகனும் வந்தென் நலனுண்டான்
தேனும் பாலும் போல்வன சொல்லிப் பிரிவானேல்
கானும் புள்ளுங் கைதையும் எல்லாங் கரியன்றே." (யா.வி.ப.332)

"நல்லார் பழிப்பில் எழிற்செம் பவளத்தை நாணநின்ற
பொல்லா முகத்தெங்கள் போதக மேபுர மூன்றெரித்த
வில்லான் அளித்த விநாயக னேயென்று மெய்ம்மகிழ
வல்லார் மனத்தன்றி மாட்டான் இருக்க மலர்த்திருவே."

(மூத்தநாயனார் திருவிரட்டை மணிமாலை, 20)

இது நேரசை முதலாகிப் பதினாறெழுத்தான் வந்தது.

"கனிய நினைவொடு நாடொறுங் காதல் செயுமடியார்க்
கினிய னவனொரு வின்னாங் கிலமெவ ரும்வணங்கப்
பனிவெண் பிறைநறுங் கொன்றைச் சடைப்பலி தேரியற்கை
முனிவன் சிறுவன் பெறுவெங்கொல் யானை முகத்தவனே."

(மூத்தநாயனார் திருவிரட்டை மணிமாலை.6)

இது நிரையசை முதலாகிப் பதினேழெழுத்தான் வந்தது.

இனி, ஆசிரிய விருத்தமாவது அறுசீரடி முதலாகிய மிக்க அடியினான் நான்கடியு மொத்துவரும். அது,

"இரைக்கும் அஞ்சிறைப் பறவைகள் எனப்பெயர் இனவண்டு புடைசூழ
நுரைக்க ளென்னுமக் குழம்புகொண் டெதிர்ந்தெழ நுடங்கிய விலயத்தால்
திரைக்க ரங்களிற் செழுமலைச் சந்தனத் திரள்களைக் கரை மேல்வைத்
தரைக்கு மற்றிது குணகடற் றிரையொடும் பொருதல தவியாதே"

(சூளா. கல்யாண.51)

என வரும்.

பிறவும் வந்தவழிக் காண்க.

இனி, வஞ்சிவிருத்தமாவது முச்சீரடி நான்காகிவரும். அது,

"இருது வேற்றுமை இன்மையால்
சுருதி மேற்றுறக் கத்தினோ
டரிது வேற்றுமை யாகவே
கருது வேல்தடங் கையினாய்" (சூளா.சீயவதை.170)

என வரும்.

இனி, வெளிவிருத்தமாவது நான்கடியா னாயினும் மூன்றடியா னாயினும் அடிதொறுந் தனிச்சொற் பெற்று வரும். அது,

"ஆவா என்றே அஞ்சினர் ஆழ்ந்தார் - ஒருசாரார்
கூகூ என்றே கூவிளி கொண்டார் - ஒருசாரார்
மாமா வென்றே மாய்ந்தனர் நீந்தார் - ஒருசாரார்
ஏகீர் நாய்கீர் என்செய்தும் என்றார் - ஒருசாரார்"

என வரும்.

இது நான்கடியான் வந்தது.

மூன்றடியான் வருவது வந்தவழிக் காண்க.

இனி, கலிவிருத்தமாவது நாற்சீரடி நான்கினால் வரும்.

"தேம்பழுத் தினியநீர் மூன்றுந் தீம்பலா
மேம்பழுத் தளிந்தன சுளையும் வேரியும்
மாம்பழக் கனிகளு மதுத்தண் டீட்டமுந்
தாம்பழுத் துளசில தவள மாடமே" (சூளா.நகர.14)

என வரும்.

இவையெல்லாம் உரையிற்கோடல் என்பதனானும் பிறநூல் முடிந்தது தானுடம்படுத லென்பதனானுங் கொள்க. (175)

## பேராசிரியர்

**494. அடிநிமிர் ............................ றாகும்.**

*இதுவும் அது.*

**(இ-ள்)** அப் பண்ணத்தியின் அடிப்பெருக்கங் கிளக்குங்காற் பன்னிரண்டாம் என்றவாறு.

'ஆகும்' என்றதனாற் சிறுபான்மை அப் பன்னிரண்டடியின் ஏறியும் வரப்பெறுமென்பது. 'ஈரா றாகும்' என்றதனான், இது நெடுவெண் பாட்டாகி வருமெனவும், அதுபோல ஆறடியின் இழிந்து வாராதெனவுங் கொள்க. (182)

**495. அடியிகந்து ................................... யின்றே.**

*இதுவும் அது.*

(இ-ள்) அது முழுதும் அடியாகி வாராது. இடையிடை ஓரோவடி பெற்று அல்லுழியெல்லாம் பரந்துபட்டு வரவும் பெறும் என்றவாறு.

அவை, முற்காலத்துள்ளார் செய்யுளுட் காணாமையிற் காட்டாமாயினாம். இக்காலத்துள்ளனவேற் கண்டுகொள்க. இலக்கணம் உண்மையின் இலக்கியங் காணாமாயினும் அமையுமென்பது. (183)

## நச்சினார்க்கினியர்

**182. அடிநிமிர் ................................ றாகும்.**

**183. அடியிகந்து ................................ யின்றே.**

உரை இல்லை.

## சிவலிங்கனார்

**அடிநிமிர் ................................ கடிவரை யின்றே.**[1]

(இ-ள்) பண்ணத்திக்குப் பேரெல்லை பன்னிரண்டடியாம்; அப் பன்னீரடியின் மாறுபட்டு மிக்கும் குறைந்தும் வரினும் நீக்கு நிலைமை யில்லை,. எ-று.

திருப்புகழ் அடிநிமிர்ந்தவாறு காண்க.

---

*1. அன்னிதாமசு*

*தொல்காப்பியச் செய்யுளியலில் வரும்,*

*"அடக்கிய லின்றி யடிநிமிர்ந் தொழுகியும்" (143)*

*"பரந்த மொழியான் அடிநிமிர்ந்து ஒழுகினும்" (230)*

*"அம்மை தானே அடிநிமிர் வின்றே" (227)*

*போன்றவற்றை நோக்க, அடிநிமிர் கிளவி என்றதன் அடிநிமிர்தல் அடிகள் எண்ணிக்கையில் மிகுந்து செல்லுதல் என்பதனைக் குறிக்கும் எனக் கொள்ளலாம். அடி எண்ணிக்கையில் ஒரு குறிப்பிட்ட எல்லை யின்மை இங்குப் புலப்படுகின்றது. எனவே அடிவரையறை யில்லாத பன்னிரு செய்யுள்களே அடிநிமிர் கிளவி ஈராறு என்பது விளங்கும்.*

*அவை கலிவெண்பாட்டு, கைக்கிளைச் செய்யுள், புறநிலை, வாயுறை, செவியறிவுறூஉ என்னும் ஐந்து அடிவரையில்லாச் செய்யுளும், உரை, நூல், வாய்மொழி, பிசி, அங்கதம், முதுசொல் என்னும் ஆறு அடிவரையில்லாச் செய்யுள்களும், பண்ணத்தியும் இணையப் பன்னிரண்டு என்னும் எண்ணிக்கை பொருந்த ஈராறு என்பதன் விளக்கமாகப் பொருந்துகின்றன.*

*(பன்னிரண்டாவது கருத்தரங்கு ஆய்வுக்கோவை தொகுதி 2 (பக். 27-31) இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்ற வெளியீடு, அண்ணாமலை நகர் (1980))*

புறனடை

**485. கிளரியல்[1] வகையிற் கிளந்தன தெரியின்**
**அளவியல் வகையே அனைவகைப் படுமே. (176)**

## இலக்குவனார்

496. While examining what are enjoined, the nature of limit is such.

## இளம்பூரணர்

**485. கிளரியல் வகையிற் ....................... படுமே.**

*என்-னின், மேற்சொல்லப்பட்டன தொகுத்து உணர்த்துதல் நுதலிற்று.*

**(இ-ள்)** ஈண்டுச் சொன்ன வகையினாற் சொல்லப்பட்டனவற்றை யாராயுங்காலத்து அவ் வியல்வகை யத்துணைப் பாகுபடும் என்றவாறு.

இதனாற் சொல்லியது செய்யுளாவது அடிவரையுள்ளனவும் அடி-வரையில்லனவுமென இருவகைப்படுமென்பதூஉம், அடிவரையுள்ளன ஆசிரியம், வஞ்சி, வெண்பா, கலி எனவும்; தாழிசை, துறை, விருத்த மெனவும்; அடிவரையில்லன நூல், உரை, பிசி, முதுமொழி, மந்திரம். குறிப்புமொழி என அறுவகைப்படுமென்பதூஉம் உணர்த்தியவாறு.

அஃதேல், மேல் ‘அளவியல் வகையே அனைவகைப் படுமே’ என்ற சூத்திர மிகையாதல் வேண்டுமெனின், அது பாவிற்கு அடி வரையறுத்துக் கூறப்பட்டது. இது செய்யுள் இனைத்தென வரையறுத் துணர்த்திற்று. (176)

## பேராசிரியர்

**496. கிளரியல் வகையிற் ......................... படுமே.**

*இதுவும் மேலவற்றுக்கெல்லாம் புறனடை.*

**(இ-ள்)** எடுத்தோதிய வகையாற் சொல்லியன ஆராயின் அளவியற் பகுதி அக் கூற்றதாம் என்றவாறு.

எடுத்தோதிய வகையா னென்பது, நூலும் உரையும் நந்நான் கெனவும், பிசி இரண்டெனவும், முதுமொழியும் மந்திரமும் கூற்றிடை வைத்த குறிப்பும் ஒரோவொன்றெனவுங் கூறிவந்த வகையான் அவற்றை இனைத்தென் றெண்ணி அளந்த பகுதியும் அளவியலே யாமாகலின்

1. கிளரிய வகையிற் - நச். பாடம்

அவ் வளவியலடி வரையறை கூறியவாற்றானும் அடி வரையறை யிலவற்றுக்குக் கூறியவாற்றானும் இருவகைப்படும்[1] அளவியலென்றவாறு. (184)

## நச்சினார்க்கினியர்

184. கிளரியல் வகையிற்..............................படுமே.

உரை இல்லை.

## சிவலிங்கனார்

கிளரியல் .............................. படுமே.

(இ-ள்) நூல், உரை, பாட்டு முதலானவற்றுக்குக் கிளந்து கூறிய இலக்கணவகையில் அடிவரையறை முதலியவற்றை ஆராயின் அவற்றின் அளவுகளின் இயல்வகை இதுகாறும் கூறிய வகையே படும், எ-று.

### 13. திணை

**486. கைக்கிளை முதலா ஏழ்பெருந்[2] திணையும்**
**முற்கிளந் தனவே முறையி[3] னான. (177)**

## இலக்குவனார்

497. *Thiṇai* is what is enjoined as the great seven from *kaikkilai* at the outset in the order of subjects.

## இளம்பூரணர்

486. கைக்கிளை முதலா .................................. னான.

என்-னின், நிறுத்தமுறையானே திணையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) திணையாவது கைக்கிளை, முல்லை, குறிஞ்சி, பாலை, மருதம், நெய்தல் பெருந்திணை யென்பன. அவை முறைமையினான் மேற்சொல்லப்பட்டன என்றவாறு.

முறைமையினாற் சொல்லுதலாவது, பாடாண்பாட்டினைக் கைக்கிளைப்புறமெனவும், வஞ்சியை முல்லைப்புறமெனவும், வெட்சியைக்

---

1. அடிவரையுள்ளன அடிவரையில்லன

2. எழுபெருந் - பேரா. நச். பாடம்

3. முறைநெறி வகையின் - பேரா. நச். பாடம்

குறிஞ்சிப்புறமெனவும், வாகையைப் பாலைப்புற மெனவும், உழிஞையை மருதப்புறமெனவும், தும்பையை நெய்தற்புறமெனவும், காஞ்சியைப் பெருந்திணைப்புறமெனவும் ஓதியநெறி கொள்ளப்படும். இவ்வாறு கொள்ளவே பதினான்கு திணையும் ஏழாகி யடங்குமாயின. (177)

## பேராசிரியர்

**497. கைக்கிளை முதலா ........................ வகையின்.**

இது, பதின்மூன்றாம் முறைமைக்கணின்ற திணையுறுப்பு (313) உணர்த்துகின்றது.

(இ-ள்) கைக்கிளைமுதல் பெருந்திணை யிறுவாய் ஏழும் முன்னர்க் கிளக்கப்பட்டன என்றவாறு.

'முறைநெறி வகையின்' என்பது, அவற்றுக்கு முறைமையாற் புறமெனப்பட்ட வெட்சி முதல் பாடாண்பகுதி யீறாகிய எழுபகுதியோடு மென்றவாறு. எனவே, அவற்றுக்குப் பொதுவாகிய முறையாற் கரந்தையுள்ளிட்டுப் பதினைந்து திணையுள் ஒன்று செய்யுட் குறுப்பாகி வரல் வேண்டுமெனவும், முன்னோதியவாறே கொள்ளப்படுமெனவுஞ் சொல்லினானாம்; இது சொல்லாக்கால் அவை வரினும் வரும், வாராதொழியவும் பெறுமென்பது படுமென்பது. இது மேல்வருகின்ற கைகோண் முதலியனவற்றுக்கும் ஒக்கும். (185)

## நச்சினார்க்கினியர்

**185. கைக்கிளை முதலா ........................... வகையின்.**

*இது, நிறுத்தமுறையே திணையென்னும் உறுப்புக் கூறுகின்றது.*

(இ-ள்) கைக்கிளை முதலா எழுபெருந் திணையும் - கைக்கிளை முதலாக முல்லை, குறிஞ்சி, பாலை, மருதம், நெய்தல், பெருந்திணை என்ற எழுநிலனும், முறைநெறி வகையின் - அவற்றிற்கு முறைமை வழியால் புறமென அடைத்த வெட்சி முதல் பாடாண் பகுதி ஈறாகிய எழு பகுதியோடே கூட்ட, முற்கிளந்தனவே - முன்னர்க் கிளக்கப்பட்டனவேயாகச் செய்யுட்கு உறுப்பாய் நிற்கும் எ-று.

எனவே, அகமேழும் புறமேழும் அவ் விரண்டற்கும் பொதுவாகிய கரந்தை யொன்றுமாகப் பதினைந்தனுள் ஒன்று செய்யுட்குறுப்பாயல்லது வேறுறுப்பின்று என்றவாறாயிற்று. (185)

## சிவலிங்கனார்

**கைக்கிளை ................................ வகையின.**

**(இ-ள்) கைக்கிளை** முதலாக ஏழ் பெரிய **திணைகளும்** முன்னே அகத்திணையியல் **களவியல்** கற்பியல் பொருளியல்களில் முறைப்படக் கூறப்பட்டனவே **திணையாம்** எ-று.

கைக்கிளை முதலான ஏழ்திணை கூறவே புறத்திணையாம் வெட்சி, வஞ்சி முதலிய திணையும் கொள்க.

14. கைகோள் - களவு

**487. காமப் புணர்ச்சியும் இடந்தலைப் படலும்**
**பாங்கொடு தழாஅலுந் தோழியிற் புணர்வுமென்**
**றாங்கநால் வகையினும் அடைந்த சார்வொடு[1]**
**மறையென மொழிதல் மறையோர் ஆறே. (178)**

## இலக்குவனார்

498. *Marai* (kaḷavu) is said to be, accordiung to the learned, the love-union, the meeting after the union, the union with the help of the male friend and the union with the help of the female friend of the lady.

## இளம்பூரணர்

**487. காமப் புணர்ச்சியும் ............................ ஆறே.**

*என்-னின், கைகோள் வகையிற் களவாமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) இயற்கைப் புணர்ச்சியும், இடந்தலைப்படலும், பாங்கற் கூட்டமும், தோழியிற் கூட்டமு மென்று சொல்லப்பட்ட நான்கு வகை யானும் அவற்றைச் சார்ந்து வருகின்ற கிளவியானும் வருவன களவென்று கூறுதல் வேதமறிவோர் நெறி என்றவாறு.

இதனுள் களவென்னாது மறையென்றதனான் இது தீமை பயக்குங் களவன்மை கொள்க.

இன் - ஆன் பொருள்பட வந்தது.[2] ஒடு - எண். (178)

## பேராசிரியர்

**498. காமப் புணர்ச்சியு ............................ ராறே.**

களவு கற்பென்பன காமத்திணையின் ஒழுகலான் ஆண்டுப் பரந்து பட்டனவெல்லாந் தொகுத்துக் கூறுகின்றான், அவை செய்யுட் குறுப்பாயடங்கலின். அவற்றுள் இது களவென்னும் கைகோளுணர்த் துதல் நுதலிற்று.

1. சார்பொடு - பேரா. பாடம், சார்போடு - நச். பாடம்
2. வகையினும் - வகையானும்

**(இ-ள்)** காமப்புணர்ச்சியும், அது நிகழ்ந்த பின்னர் இடந்தலைப்பாடும், அதற்குப் பின்னர்ப் பாங்கற்குச் சொல்லி அவனாற் கூடுதலும், அதன்பின்னர்த் தோழியைப் பின்னின்று குறைமுடித்துக் கோடலுமென அந் நாற்பகுதிக்கண்ணும் பொருந்திய சார்பினாற் களவொழுக்கம் இதுவென்று கருதுமாற்றாற் செய்யுள் செய்தல் கந்திருவ வழக்கம் என்றவாறு.

கந்திருவ வழக்கம் மறையோ ரொழுகிய நெறியதுவாகலான் 'மறையோ ராறு' என்றானென்பது. எனவென்பது வினையெச்சம். எனவே, பாங்கனுந் தோழியும் உணர்ந்தவழியும் அது மறையோர் வழித் தென்றவாறு. காமப்புணர்ச்சி நிகழ்ந்தன்றி இடந்தலைப்பாடு நிகழா தெனவும், அவ் விடந்தலைப்பாடு பிற்பயத்தலரிதென்பது அவள் ஆயத் தொடுங் கூடிய கூட்டத்தான் அறிந்த தலைமகன் பாங்கனை உணர்த்தி அவனாற் குறைமுடித்துக் கோடலும், தன்வயிற் பாங்கன் அவள்வயிற் பாங்கு செய்யானாகலின்[1] அதன் பின்னர்த் தோழியாற் குறைமுடித்துக் கோடலுமென இந் நான்கும் முறையான் நிகழுங் களவொழுக்க மென்றவாறு.

"வேட்கை யொருதலை யுள்ளுதன் மெலித
லாக்கஞ் செப்ப னாணுவரை யிறத்த
னோக்குவ வெல்லா மவையே போறன்
மறத்தன் மயக்கஞ் சாக்கா டென்றச்
சிறப்புடை மரபினவை" (100)

என்பனவுங் கைகோளாகாவோ வெனின், ஆகா; கைகோளென்பது ஒழுகலாறாகலான். அவை அவற்றுட் பிறந்த உள்ளநிகழ்ச்சி ஒன்றொன் றனிற் சிறந்து பெருகியக்கால் அவ்வப் பகுதியாகுமெனக் கொள்க.

மற்றுக் களவியலுள்,

"ஆங்ஙனம் புணர்ந்த கிழவோன் றன்வயிற்
பாங்கி னோரிற் குறிதலைப் பெயலும்
பாங்கிலன் றமியோ ளிடந்தலைப் படலும்" **(இறையனார். 3)**

எனப் பாங்கற்கூட்டம் முற்கூறியதாலெனின், இது கைகோள் கூறிய இடமன்மையின் முற்கூறினும் அமையுமென்பது.[2]

**மற்று,** இயற்கைப் புணர்ச்சி புணர்ந்த தலைமகனைப் பாங்கன் **கண்டு இவ்** வேறுபாடு எற்றினானாயிற்றென்று வினவுமன்றே? அதனாற் **பாங்கற்கூட்டம்** நிகழ்ந்த பின்னரன்றி இடந்தலைப்பாடு நிகழாதாம் **பிறவெனின், அ**ற்றன்று; யாழோர் கூட்டம் உலகியலாகாதாதலான் இல்ல தன்றாமாகவே உலகத்தார் நிறையுடையாராகி மறைவெளிப்படாமல் ஒழுகுவாரும், மறைவெளிப்படுத்து விளம்பும் பாங்கனையுடையாரும்,

---

1. பாங்குசெய்யான் - அவள் பக்கமாகச் சென்று இருவர்ப் புணர்ச்சிக்கு உரியன செய்யான்.

2. இடந்தலைப்பாடு முற்கூறினும் அமையும்

இல்லாதாருமெனப் பலவகையராதலின் வினாதல் ஒருதலையன்றென்பது; அல்லதூஉம், இடந்தலைப்பாடு நிகழாதாயினன்றே துணைவேண்டு மென்பது; என்னை? துணையின்றி நிகழுங் களவு சிறப்புடைத் தாகலானும் பாங்கன் கழறுமென்று அஞ்சி அவனை முந்துற மறைத் தொழுகுமாகலானுமென்பது. களவொழுக்கமெல்லாம் இந் நான்கு வகை யானும் அடங்கும். அவற்றுக்குச் செய்யுள்:

"கொங்குதேர் வாழ்க்கை யஞ்சிறைத் தும்பி
காமஞ் செப்பாது கண்டது மொழிமோ
பயிலியது கெழீஇய நட்பின் மயிலியற்
செறியெயிற் றரிவை கூந்தலி
னறியவு முளவோநீ யறியும் பூவே" (குறுந்.2)

என்னும் பாட்டு, இயற்கைப் புணர்ச்சிக்கண் நிகழ்ந்த செய்யுள்.

"சொல்லிற் சொல்லெதிர் கொள்ளா யாழநின்
றிருமுக மிறைஞ்சி நாணுதி கதுமெனக்
காமங் கைம்மிகிற் றாங்குத லெளிதோ
கொடுங்கே ழிரும்புற நடுங்கக் குத்திப்
புலிவிளை யாடிய புகர்முக வேழத்தின்
றலைமருப் பேய்ப்பக் கடைமணி சிவந்தநின்
கண்ணே கதவ வல்ல நண்ணா
ராண்டலை மதில ராகவு முரசுகொண்
டோம்பரண் கடந்த வடுபோர்ச் செழியன்
பெரும்பெயர்க் கூட லன்னநின்
கரும்புடைத் தோளு முடையவா லணங்கே" (நற்.39)

என்பது, இடந்தலைப்பாடு.

"இடிக்குங் கேளிர் நுங்குறை யாக
நிறுக்க லாற்றினோ நன்றுமற் றில்ல
ஞாயிறு காயும் வெவ்வறை மருங்கிற்
கையி லூமன் கண்ணிற் காக்கும்
வெண்ணெ யுணங்கல் போலப்
பரந்தன் றிந்நோய் நோன்றுகொளற் கரிதே" (குறுந்.58)

என்பது, பாங்கற்கூட்டத்துக்கண் வந்தது.

"தலைப்புணைக் கொளினே தலைப்புணைக் கொள்ளும்
கடைப்புணைக் கொளினே கடைப்புணைக் கொள்ளும்
புணைகை விட்டுப் புனலோ டொழுகி
னாண்டும் வருகுவள் போலு மாண்ட
மாரிப் பித்திகத்து நீர்வார் கொழுமுகை
செவ்வெரி நுறழுங் கொழுங்கடை மழைக்கட்
டுளிதலைத் தலைஇய தளிரன் னோளே" (குறுந். 222)

என்பது, தோழியிற்கூட்டம். பிறவும் அன்ன. (186)

**நச்சினார்க்கினியர்**

**186. காமப் புணர்ச்சியும் ............................ ராறே.**

*இது, முறையே கைகோட் செய்யுட்கு உறுப்பாமாறு கூறுகின்றது.*

*கைகோளாவன களவு, கற்பு அவைதாங் காமத்தின்கண் ணெழுதலான் அவற்றுட் பிறந்த வுள்ளநிகழ்ச்சி யிடைவிடாது மேற்சிறந்து பெருகி யகலாப் பகுதியெனக் கொள்க. அவற்றைத் தொகுத்தவை செய்யுட் குறுப்பெ 'ன்றார்.*

**(இ-ள்)** காமப் புணர்ச்சியும் இடந்தலைப்பாடும் பாங்கொடு தழாஅலும் தோழியிற் புணர்வும் - இயற்கைப் புணர்ச்சியும், அதன் பின்னர் இடந்தலைப்பாடும், அதன் பின்னர் அவன்வயிற் பாங்காகிய பாங்கற்குக் கூறி அவனாற் கூடுதலும் அதன் பின்னர் அவள்வயிற் பாங்காகிய தோழியை இரந்து குறைமுடித்துக் கோடலும் என்று, ஆங்க நால்வகையினும் அடைந்த சார்பொடு - என்ற அந் நாற்பகுதிக்கண்ணும் பொருந்திய சார்பினால், மறையென மொழிதல் மறையோர் ஆறே - களவொழுக்கம் இதுவென்று பிறர் கருதச் செய்யுள் செய்தல் கந்திருவ வழக்கம் எ-று.

கந்திருவர்க்கு மறையோர் ஓதிய நெறி அதுவாகலின் மறையோ ராறென்றார். என வினையெச்சம். எனவே பாங்கனுந் தோழியு முணர்ந் துழியுங் களவென்றல் மறையோர் வழக்கு எ-று.

இக் களவு இல்லதன்றி யுலகியலாதலின் நிறையுடையார் மறை வெளிப்படா தொழுகலிற் றாமே சென்று இடந்தலைப்பாட்டிற் கூடுதலும், அது நிகழாவழியுங் கூட்டநிகழ்ந்து அவள் ஆயத்திடை நின்றவழியும் அவளருமை யறிந்து பாங்கனை யுடம்படுத்திக் கூடுதலும், அவன் தோழியைப் போலக் கூட்டுந் தன்மையிலனாதலிற் றோழியாற் கூடுதலு மென முறைமை கூறினார். களவு இந் நான்கு பகுதியானு மடங்கும்.

**(எ-டு)** "கோட லெதிர்முகைப் பகவீ முல்லை" **(குறுந்.62)**

இது இயற்கைப் புணர்ச்சி நிகழ்ந்தது.

"உறுதோ றுயிர் ............................ தோள்" **(குறள்.1106)**

"சொல்லிற் சொல்லெதிர் கொள்ளாய்" **(நற்.39)**

"வேட்ட பொழுதி ........................ டோள்" **(குறள்.1105)**

இவை களவியலிற்[1] கண்டுகொள்க. (186)

---

1. இடந்தலைப்பாடு, பாங்கற்கூட்டம், பாங்கியற் கூட்டம்.

## சிவலிங்கனார்

**காமப் புணர்ச்சி ............................ ஆறே.**

(இ-ள்) இயற்கைப் புணர்ச்சி இடந்தலைப்பாடு பாங்கற்கூட்டம் தோழியிற் கூட்டம் எனும் அந் நால்வகைப் புணர்ச்சியினாலும் அவற்றைச் சார்ந்த நிமித்தங்களானும் நிகழ்வது களவு என்னும் கைகோள் என்பது நூலோர் கண்ட வழியாம், எ-று.

மறையோர் - நூலோர். "இசையொடு சிவணிய நரம்பின் மறைய" (தொல். நூன்மரபு, 33) என்னுமிடத்தும் மறை நூலாதல் காண்க.

### கற்பு

**488. மறைவெளிப் படுதலுந் தமரிற் பெறுதலும்**
**இவைமுதல்[1] லாகிய இயனெறி திரியாது**
**மலிவும் புலவியும் ஊடலும் உணர்வும்**
**பிரிவொடு புணர்ந்தது கற்பெனப் படுமே. (179)**

## இலக்குவனார்

499. *Karpu* is the disclosure of the secret having her in marriage with the help of the relatives and the occurrence of *malivu, pulavi, ūdal, unarvu* and *pirivu* without deviating from the regular conduct of wedded love.

## இளம்பூரணர்

**488. மறைவெளிப் படுதலுந் ......................... படுமே..**

*என்-னின், கைகோள்வகையிற் கற்பாகிய கைகோள் உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) களவொழுக்கம் வெளிப்படுதலுங்[2] களவொழுக்கமின்றித் தமரானே பெறுதலுமென்று சொல்லப்பட்ட இவை முதலாகிய இயற்கை நெறியிற் றப்பாது மகிழ்தலும், புலத்தலும், ஊடலும், ஊடல் தீர்தலும், பிரிதலுமென்று சொல்லப்பட்ட இவற்றொடு கூடி வருவது கற்பென்று சொல்லப்படுவது என்றவாறு.

இயனெறி என்றதனாற் கரணத்தின் அமைதல் இன்றியமையா தென்று கொள்க. (179)

---

1. இருமுத லாகிய - நச். பாடம்.

2. களவொழுக்கம் வெளிப்பட்டு மணமுடித்தலும்

## பேராசிரியர்

**499. மறைவெளிப் படுதலுந் ......................... படுமே.**

*இது, கற்பென்னுங் கைகோளுணர்த்த னுதலிற்று.*

**(இ-ள்)** மறைந்தொழுகும் ஒழுகலாறு வெளிப்படுதலும் அதன்பின் தமர் கொடுப்பத் தான் அவ்வகையாற் பெறுதலுமென்னும் இவ் விரண்டும் முதலாகி வழக்குநெறி திரியாது மகிழ்ச்சியும் புலத்தலும் ஊடலும் உணர்த்தலுமென்னும் நான்குடன் பிரிவுளப்பட ஐந்தும் புணர்ந்தது கற்பென்னும் கைகோளாம் என்றவாறு.

**'இவைமுதலாகிய'** என்றதனால்,

"கொடுப்போ ரின்றியுங் கரண முண்டே
புணர்ந்துடன் போகிய காலை யான" (143)

என்றவழிக் கூடிய வதுவைபோல்வன கொள்க. அவைதாங் கற்பெனப் படுவதல்லது ஒழுகலா றெனப்படா; என்னை? இவறொழுக்க மன்றி வேள்வியாசான் முதலாயினாரும் செய்விக்கும் ஒழுக்கமாகலான். அங்ஙனமாயினும் அவற்றையுங் கைகோளின்பாற் சார்த்தி யுணரப்படு மென்றற்கு ஈண்டுக் கூறினானென்பது.

**இனிக் கூறும் ஐந்தும்,** தலைவனுந் தலைவியும் ஒழுகும் ஒழுகலா றெனவேபடும். **முன்னைய இரண்டும்** போலப் பிறர் கொடுக்கப்பட்டன **வல்லவென்பது.**

**மலிதலென்பது, இல்லொ**ழுக்கமும் புணர்ச்சியும் முதலாயவற்றான் மகிழ்தல்.

**புலவியென்பது, புணர்ச்சி**யான் வந்த மகிழ்ச்சி குறைபடாமற் காலங்கருதிக் **கொண்டுய்ப்ப**தோர் உள்ளநிகழ்ச்சி.

ஊடலென்பது, உள்ளத்து நிகழ்ந்ததனைக் குறிப்புமொழியானன்றிக் கூற்றுமொழியா னுரைப்பது.

அங்ஙனம் ஊடனிகழ்ந்தவழி அதற்கேதுவாகிய பொருளின்மை யுணர்வித்தல் உணர்வெனப்படும். இல்லது கடுத்த[1] மயக்கந்தீர உணர்த்து தலால் உணர்த்துதலெனவும், அதனை உணர்தலால் உணர்வெனவும் படும்; புலவிக்காயின், உணர்த்தல் வேண்டா, அது குளிர்ப்பக் கூறலுந் தளிர்ப்ப முயங்கலும் முதலாயவற்றான் நீங்குதலின். அம் முறையானே கூறியவற்றுப்பின் பிரிதல் கூறினான், அஃது இவை நான்கனொடும் வேறு படுதலின்; அதனை ஊடலோடு வைக்கவே அவ் வூடலிற் பிறந்த துனியும் பிரிவின்பாற்படுமென்பது கொள்க; என்னை? காட்டக்காணாது கரந்து மாறுதலின். இவற்றுக்குச் செய்யுள்:

1. கடுத்த - ஐயப்பட்ட

"எம்மனை முந்துறத் தருமோ
தம்மனை யுய்க்குமோ யாதவன் குறிப்பே" (அகம்.195)

என்பது மறைவெளிப்பாடு.

"தமர்தர வோரிற் கூடி யுடன்புணர் கங்குல்"

என்பது தமரிற்பெறுதல். (அகம்.86)

"கேள்கே டூன்ற"

என்னும் அகப்பாட்டினுள்,

"நலங்கே ழாகம் பூண்வடுப் பொறிப்ப
முயங்குகஞ் சென்மோ நெஞ்சே" (அகம்.93)

என்பது மலிதல்.

"நாணுக்கடுங் குரைய ளாகிப்
புலவி வெய்யள்யா முயங்குங் காலே"

என்பது புலவி.

"நோய்சேர்ந்த திறம்பண்ணி நின்பாண னெம்மனை
நீசேர்ந்த வில்லினாய் வாராமற் பெறுகற்பின்" (கலி.77)

என்பது ஊடல்.

"விருந்தெதிர் கொள்ளவும் பொய்ச்சூ ளஞ்சவு
மரும்பெறற் புதல்வனை முயங்கக் காணவு
மாங்கவிந் தொழியமென் புலவி" (கலி.75)

என்பது, உணர்தல்.

"திறனல்ல யாங்கழற யாரை நகுமிம்
மகனல்லான் பெற்ற மகன்" (கலி.86)

என்பது, துனி. துனித்தலென்பது, வெறுத்தல். அறுவகைப் பிரிவும் பிரிவெனவே அடங்கும். அவை மேற்காட்டப்பட்டன. (187)

## நச்சினார்க்கினியர்

**187. மறைவெளிப் படுதலுந் ..................................... படுமே.**

*இது, கற்பென்னுங் கைகோள் கூறுகின்றது.*

(இ-ள்) மறை வெளிப்படுதலும் தமரிற் பெறுதலும்:- மறைந்தொழுகும் ஒழுகலாறு வெளிப்படுதலும், தமர் கொடுப்பக் கரண வகையால் பெறுதலும், இருமுதலாகிய இயல்நெறி திரியாது - என்னும் இவ் விரண்டு முதலிய ஆசான் முதலியோர் செய்விக்கும் வழக்குநெறி திரியாது, மலிவும் புலவியும் ஊடலும் உணர்வும் பிரிவொடு புணர்ந்தது - மகிழ்ச்சியும், புலத்தலும், ஊடலும் உணர்த்தலும் நான்கும் பிரிவுளப்பட்ட ஐந்தும் புணர்ந்தது, கற்பெனப்படுமே - கற்பு எனப்படும் எ-று.

மலிவு முதலிய ஐந்தும் கைகோளின்பாற் சார்த்தித் தலைவனுந் தலைவியும் ஒழுகும் ஒழுகலாறெனவே படும். முன்னை மறைவெளிப் படுதலுந் தமரிற் பெறுதலுமென்னும் இரண்டும் பிறரோடுபட்ட வொழுகலாறெனப்படும்; அவை ஆசான் முதலியோர் செய்வித்தலின்.

'மலித' லென்பது இல்லொழுக்கமும் புணர்ச்சியு முதலியவற்றான் மகிழ்தல்.

'புலவி' யென்பது புணர்ச்சியான் வந்த மகிழ்ச்சி குறைபடாமற் காலங்கருதிக் கொண்டுய்ப்பதோர் உள்ளநிகழ்ச்சி.

'ஊட'லென்பது உள்ளத்து நிகழ்ந்ததனைக் குறிப்பு மொழியானன்றிக் கூற்றுமொழியா னுரைப்பது.

அங்ஙனம் ஊடனிகழ்ந்தவழி அதற்கேதுவாகிய காரியமின்மை 'உணர்வித்த' லெனப்படும்.

இல்லது நடுக்க மயக்கந்தீர வுணர்த்துதலான் உணர்த்துதலெனவும் அதனை உணர்தலான் உணர்வெனவும் படும். புலவியாயி னுணர்த்தாது குளிர்ப்பக் கூறித் தளிர்ப்ப முயங்குதன் முதலியவற்றா னீங்கும்.

பிரிவு இந் நான்கற்கும் வேறுபடுதலிற் பின் வைத்தார். அதனை யூடலொடு வைப்பவே யவ் வூடலுட் பிறந்த துனியும் பிரிவின்பாற்படும். அது காட்டக் காணாது கரந்து மாறுதலின்.

**(எ-டு)**"எம்மனை முந்துறத் தருமோ
தம்மனை யுய்க்குமோ யாதவன் குறிப்பே" **(அகம்.195)**

என்பது மறைவெளிப்பாடு.

"பேரிற் கிழத்தி யாகெனத் தமர்தர
வோரிற் கூடிய வுடன்புணர் கங்குல்" **(அகம்..86)**

என்பது தமரிற் பெறுதல்.

"விரிதிரைப் பெருங்கடல்" **(குறுந்.101)**

என்பது மலிதல்.

"நாணுக் கடுங்குரையளாகிப்
புலவி வெய்யணா முயங்குங் காலே"

என்பது புலவி.

"நோய்சேர்ந்த திறம்பண்ணி நின்பாண னெம்மனை
நீசேர்ந்த வில்வினாய் வாராமை பெறுகற்பின்" **(கலி.77)**

என்பது ஊடல்.

"விருந்தெதிர் கொள்ளவும் பொய்ச்சூ ளஞ்சவு
மரும்பெறற் புதல்வனை முயங்கக் காணவு
மாங்கவிந் தொழியுமென் புலவி" **(கலி.75)**

என்பது உணர்தல்.

"திறனல்ல யான்கழற யாரை நகுமிம்
மகனல்லான் பெற்ற மகன்" (கலி.86)

என்பது துனி. துனித்தல் - வெறுத்தல்.

பிரிவெனவே ஆறு மடங்கும். அவை முன்னர்க் காட்டினாம். (187)

## சிவலிங்கனார்

**மறைவெளிப் ............................ படுமே.**

**(இ-ள்)** களவுவெளிப்பாடும், களவொழுக்கம் இல்லாமல் தமரானே மணந்து கொடுப்பக் கொள்ளும் ஒழுக்கமும் என்று சொல்லப்பட்ட இவை முதலாகிய ஒழுக்கங்களில் மாறுபடாது மகிழ்தலும், புலத்தலும், ஊடலும், பிரிவும் ஆகிய வொழுக்கங்களோடு சேர்ந்து இயல்வது கற்பெனப்படும், எ-று.

களவு வெளிப்பட்டபோதே கற்பொழுக்கத்துக் குரியராவதுபற்றி- அதாவது களவிற் சேராது மணந்து சேர்தல்பற்றிக் களவு வெளிப்பாடே கற்பு எனும் கைகோள் எனப்படும்..

## 489. மெய்பெறும்[1] அவையே கைகோள் வகையே. (180)

## இலக்குவனார்

500. Being truthful is of idealism.

## இளம்பூரணர்

**489. மெய்பெறும் ................................ வகையே.**

*என்-னின், மேற்சொல்லப்பட்டவற்றைத் தொகுத்து உணர்த்துதல் நுதலிற்று.*

**(இ-ள்)** பொருள்பெற வந்த மேற்சொல்லப்பட்ட களவு கற்பென்னும் இருவகையே கைகோள் வகையாவன என்றவாறு.

ஏகாரந் தேற்றம். (180)

## பேராசிரியர்

**500. மெய்பெறு ............................ வகையே.**

*இது, புறத்திணைக் கைகோளுணர்த்துகின்றது.*

**(இ-ள்)** பொருள்கள் பெற்ற கைகோட் பகுதி அகத்திணைக் கைகோளே என்றவாறு.

---

1. மெய்பெறு வகையே - பேரா. பாடம், மெய்பெற வகையே - நச். பாடம்.

கைகோளென்பது, ஒழுக்கங்கோடல்; எனவே, அகத்திற்குப் புறனாயினும், புறத்திணைக்குக் கைகோள் அவ்வாறு வேறுவகைப்படக் கூறப்படா; பொது வகையானே மறைந்த ஒழுக்கமும் வெளிப்பாடுமென இரண்டாகி அடங்கும் அவையு மென்றவாறு. அவை வெட்சியுள்ளும் ஒழிந்த திணையுள்ளுங் காட்டப்பட்டன. (188)

## நச்சினார்க்கினியர்

**188. மெய்பெற .................................. வகையே.**

*இது, புறத்திணைக் கைகோள் கூறுகின்றது.*

(இ-ள்) மெய்பெறக் கைகோள்வகை யவையே என்பது, பொருள்பெற வரும் கைகோட் பகுதி அகத்திணைக் கைகோளே எ-று.

எனவே, அகத்திற்குப் புறனாயினும் புறத்திணைக் கைகோள் அவ்வாறு வேறு வகைப்படக் கூறப்படா. பொதுவகையானே மறைந்த வொழுக்கமும் வெளிப்பாடும் என இரண்டாய் அடங்கும் அவை எ-று.

அவை வெட்சித்திணையுள்ளும் ஒழிந்த திணையுள்ளுங் காண்க.[1]
(188)

## சிவலிங்கனார்

**மெய்பெற .......................... வகையே.**

(இ-ள்) அகப்பொருள் பெறவந்த களவும், கற்புமாகிய அவையே கைகோளின் வகையாம். எ-று.

கைகோள் - ஒழுக்கம்

### 15. கூற்று

**490. பார்ப்பான் பாங்கன் தோழி செவிலி**
**சீர்த்தகு சிறப்பிற் கிழவன் கிழத்தியோடு**
**அளவியல் மரபின் அறுவகை யோருங்**
**களவினிற் கிளவிக் குரியர் என்ப. (181)**

## இலக்குவனார்

501. *Parppan pāngan, thōli, sevili* and the honoured husband and wife, these six being counted traditionally are entitled to make expressions in the period of the secret love.

---

1. திடீரெனப் பகைவன் முன்னதாக அறியாவகை தாக்குதல் அறிவித்துத் தாக்குதல் என இருவகைப் போர் முறைகளை வெட்சி முதலிய திணைகளிற் காண்க.

## இளம்பூரணர்

**490. பார்ப்பான் பாங்கன் ...................... என்ப.**

*என்-னின், இனிக் கூறப்படுவாரை உணர்த்துவார் களவின்கட் கூறுவாரை உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) பார்ப்பார் முதலாகச் சொல்லப்பட்ட கலந்தொழுகு மரபினை யுடைய அறுவகையோரும் களவொழுக்கக் கிளவி கூறுதற்குரியரென்றவாறு.

ஓடு எண்ணின்கண் வந்தது. கலந்தொழுகு மரபென்றதனாற் பார்ப்பாரினும் பாங்கரினுஞ் சிலரே இதற் குடம்படுவாரென்று கொள்க.

பார்ப்பான்[1] உயர்குலத்தானாகிய தோழன்.

பாங்கன்[2] ஒத்த குலத்தானும் இழிந்த குலத்தானுமாகிய தோழன். (181)

## பேராசிரியர்

**501. பார்ப்பான் பாங்கன் .................. .............. ரென்ப.**

*இது, கூற்றென்னும் உறுப்புணர்த்துகின்றது.*

(இ-ள்) எண்ணப்பட்ட அறுவருங் களவொழுக்கினுள் (177) நிகழ்ந்தன கூறினாராகவல்லது ஒழிந்தோர் கூறினாராகச் செய்யுள் செய்யப்பெறா ரென்றவாறு.

பார்ப்பானென்பான், நன்றும் தீதும் ஆராய்ந்து உறுதி கூறுவானெனப்படும். பாங்கனென்பான், அவ்வாறன்றித் தலைமகன்வழி நின்றொழுகி வருமாகலின் அவனை அவன்பின் வைத்தான். தோழி, அவன்போன்றும் பெண்பாலாகலின் அவளைப் பின்வைத்தான். செவிலி மாற்றருஞ் சிறுவரவிற்றாதலின் அவளை அவளின்பின் வைத்தான். அவரிற் சிறந்தமையிற் சீர்த்தகு சிறப்பிற் கிழவனையுங் கிழத்தியையும் அவர்பின் வைத்தான். அவ் விருவருள்ளுந் தலைமகளது கூற்றே பெருவரவின தாகலின் அவளை ஈற்றுக்கண் வைத்தானென்பது.

(உ-ம்)"சீர்கெழு வெண்முத்த மணிபவர்க் கல்லதை
..........................................................................
தேருங்கா னும்மக ளுமக்குமாங் கனையளே" (கலி. 9)

என்பது, பார்ப்பான் கூற்று.

"காமங் காம மென்ப காம
மணங்கும் பிணியு மன்றே நினைப்பின்
முதைச்சுவற் கலித்த முற்றா விளம்புன்
மூதா தைவந் தாங்கு
விருந்தே காமம் பெருந்தோ ளோயே" (குறுந். 204)

1. பார்ப்பான் - அந்தணன்

2. பாங்கன் - உடன் பக்கமாக எப்போதும் இருக்கும் தோழன்- சிவ.

"ஏனல் காவ லிவளு மல்லள்
..........................................................
சொல்லு மாடுப கண்ணி னானே"
(ப. 485)

என்பது, தோழி கூற்று.

"பெயர்த்தனென் முயங்கயான் வியர்த்தன னென்றனள்.
.................................................................................
ஆம்பன் மலரினுந் தான்றண் ணியளே" (குறுந். 84)

என்பது, செவிலி கூற்று.

"பாலு முண்ணாள் பழங்கண் கொண்டு
நனிபசந் தனளென வினவுதி" (அகம். 48)

என்பதும் அது.

"கேளிர் வாழியோ கேளிர் நாளுமென்
..........................................................................
அரைநாள் வாழ்க்கையும் வேண்டலென் யானே" (குறுந். 280)

என்பது, கிழவன் கூற்று.

"விளங்குதொடி முன்கை வளைந்துபுறஞ் சுற்ற
நன்மார் படைதலி னினிதா கின்றே" (அகம். 58)

என்பது, கிழத்தி கூற்று. பிறவும் அன்ன. (189)

## நச்சினார்க்கினியர்

**189. பார்ப்பான் பாங்கன் ......................................... என்ப.**

இது, கூற்றென்னும் உறுப்புணர்த்துகின்றது.

(இ-ள்) பார்ப்பான் முதலாகக் கிழவன் கிழத்தியோ டெண்ணப்பட்ட கூற்றிற்கு எல்லையாக நடந்த முறைமையையுடைய அறுவருங் களவொழுக்கத்து நிகழ்ந்தன கூறினாராகவல்லது ஒழிந்தோராகச் செய்யுள் செய்யப்பெறார் எ-று.

நன்றுந் தீது மாராய்ந்து உறுதி கூறுதலிற் பார்ப்பானை முற்கூறித் தலைவன்வழி நின்றொழுகும் பாங்கனைப் பிற்கூறினார். தோழி கூற்றிற் செவிலி கூற்றுச் சிறுபான்மை வருதலின் அதனைப் பின் வைத்தார். சிறப்புடையன பிற்கூறினார். அவ் விரண்டும் ஒன்றற்கொன்று சிறப் புடைமையு முணர்க.

(எ-டு)" சீர்கெழு வெண்முத்த மணிபவர்க் கல்லதை
நீருளே பிறப்பினு நீர்க்கவைதா மென்செய்யுந்
தேருங்கா லும்மக னுமக்குமாங் கனையளே" (கலி. 9)

இது பார்ப்பான் கூற்று.

"காமங் காம மென்ப காம
மணங்கும் பிணியு மன்றே நினைப்பின்.........தோளோயே"(குறுந். 204)

இது பாங்கன் கூற்று.

ஏனைய முன்னர்க் காட்டினாம். (189)

## சிவலிங்கனார்

**பார்ப்பான் பாங்கன் ................................ ரென்ப.**

(இ-ள்) பார்ப்பான் முதலாகத் தலைவி யிறுதியாகக் கூறப்பட்ட ஒருவரையொருவர் கலந்தொழுகும் முறைமையினையுடைய அறுவகை யினரும் களவுக் கைகோளில் கூற்று நிகழ்த்துதற்குரியர் என்பர், எ-று.

பார்ப்பான் - அறம்கூறும் அந்தணன்.

**கற்பிற் கூற்றுக்குரியோர்**

**491. பாணன் கூத்தன் விறலி பரத்தை**
**யாணஞ் சான்ற அறிவர் கண்டோர்**
**பேணுதகு சிறப்பிற் பார்ப்பான் முதலா**
**முன்னுறக் கிளந்த அறுவரொடு[1] தொகைஇத்**
**தொன்னெறி மரபிற் கற்பிற் குரியர். (182)**

## இலக்குவனார்

502. *Pāṉaṉ, kūththaṉ, viṟali, paraththai, aṟivar* who are resourceful. *Kandor* and the *pārppāṉ* who has the honour of being respected, are entitled to make expressions in the period of wedded love along with these who have such right in the secret love.

## இளம்பூரணர்

**491. பாணன் கூத்தன் ................................ குரியர்.**

*என்-னின், கற்பின்கட் கூறத்தகுவாரை உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) பாணன் முதலாகச் சொல்லப்பட்ட அறுவரும், மேற் சொல்லப்பட்ட பார்ப்பார் முதலிய அறுவருங் கூடப் பன்னிருவருங் கற்பின்கட் கூறுதற்குரியர் என்றவாறு.

'தொன்னெறி மரபிற் கற்பு' என்றதனான் அவர் குலந்தோறுந் தொன்றுபட்டு வருகின்ற நெறியையுடைத்தென்று கொள்க. (182)

1. கிளவியொடு - பேரா. நச். பாடம்

## பேராசிரியர்

**502. பாணன் கூத்தன் ......................................... குரியர்.**

*இதுவுமது.*

(இ-ள்) இவ் வெண்ணப்பட்ட எல்லாருஞ் சொல்லிய சொல்லாகச் செய்யுள் செய்யப்பெறுங் கற்பினுள் என்றவாறு.

'முன்னுறக் கிளந்த கிளவி'[1] என்பது, பொருணோக்கிற்று. இசையின் பின்னரது நாடகமாகலிற் பாணன்பின் கூத்தனை வைத்தும், பெண் பாலாகலான் விறல்பட ஆடும் விறலியைக் கூத்தன்பின் வைத்தும், அவ் வினத்துப்[2] பரத்தையரை அதன்பின் வைத்தும், பொருட்குச் சிறந்தாராகலின் நற்பொருள் உணரும் அறிவரை அவர்பின் வைத்தும், ஏதிலராகிய கண்டோரை அவர்க்குபின் வைத்துங் கூறினானென்பது. இவ்வாற்றான் இவரோடு முன்னர்க் களவொழுக்கத்திற் கூறிய அறுவருங் கூறப்பெறுவ ரென்றவாறு. 'தொன்னெறி மரபின்' என்றதனாற் பாகனுந் தூதனுங் கூறவும் அமையும்; அவை புறப்பொருட்குச் சிறந்து வரும்; அவற்றுக்குச் செய்யுள்:

"செவ்வழி நல்யா ழிசையினென் பையெனக்
கடவுள் வாழ்த்திப் பையுண் மெய்நிறுத்
தவர்திறஞ் செல்வேன் கண்டனென் யானே" (அகம். 14)

என்பது, பாணன் கூற்று.

"ஆடலிற் பயின்றனை யென்னா தென்னுரை
யூடலிற் றெளிதல் வேண்டும்"

என்பது, கூத்தன் கூற்று.

"மரந்தலை மணந்த நனந்தலைக் கானத்து
.......................................................................................
நறுங்கண் ணியன்கொ னோகோ யானே" (நற். 394)

என்னும் நற்றிணைப் பாட்டு, கண்டோர் கூற்று.

"விதையர் கொன்ற முதையற் பூழி
.......................................................................................
மெல்லிறைப் பணைத்தோட் டுயிலமர் போயே" (நற். 121)

என்னும் நற்றிணைப் பாட்டுப் பாகன் கூற்று. ஒழிந்தனவுங் கற்பியலுட் கூறியவாற்றான் அறிக. (190)

---

1. கிளவி - பொருள்

2. அவ்வினம் - பெண்ணினம். அவ்வினத்துப் பரத்தையர் என்றது விறலியரே (கூத்தியரே) பரத்தையராவாரும் ஆம் என்பதை யுணர்த்திற்று.

## நச்சினார்க்கினியர்

**190. பாணன் கூத்தன் ................................ குரியர்.**

*இதுவுமது.*

**(இ-ள்)** அவ் வெண்ணப்பட்ட வறுவரும் பார்ப்பார் முதலாக முற்கூறிய அறுவரோடே கூடத் தொகுத்து இப் பன்னிருவருங் கூறிய கூற்றாகச் செய்யுள் செய்யப்பெறுங் கற்பினுள் எ-று.

கிளவியென்னுஞ் சொல் ஈண்டுப் பொருண்மேற்று.

இசைப்பின்னரது நாடகமாதலின் பாணன்பின் கூத்தனும், பெண்பாலாகலின் விறல்பட ஆடும் விறலி அவர் பின்னும், அவ் வினத்துப் பரத்தை அவர் பின்னும், அகப்பொருட்குச் சிறவாமையின் அறம் பொருள் கூறும் அறிவர் அவர் பின்னும், ஏதிலாராகிய கண்டோர் அவர் பின்னும் வைத்தார்.

'தொன்னெறி மரபின்' என்றதனால், பாகனும் தூதுகூறலு மமையும். அவை புறப்பொருட்குச் சிறந்தன.

"செவ்வழி நல்யா ழிசையினென் பையெனக்
கடவுள் வாழ்த்திப் பையுண் மெய்நிறுத்
தவர்திறஞ் செல்வேன் கண்டனென் யானே." (அகம். 14)

இது, பாணன் கூற்று.

"ஆடலிற் பயின்றனை யென்னா தென்னுரை
ஊடலிற் றெளிதல் வேண்டும்"

என்பது, கூத்தன் கூற்று.

"மரந்தலை மணந்த நனந்தலைக் கானத்
தலந்தலை ஞெமையத் திருந்த குடிஞை
பொன்செய் கொல்லனி னினிய தெளிப்பப்
பெய்ம்மணி யார்க்கு மிழைகிளர் நெடுந்தேர்
வன்பான் முரம்பி னேமி யதிரச்
சென்றிசின் வாழியோ பனிக்கடு நாளே
யிடைச்சுரத் தெழிலி யுறைத்தென மார்பிற்
குறும்பொறிக் கொண்ட சாந்தமொடு
நறுந்தண் ணியன்கொல் நோகோ யானே." (நற்.394)

இது, கண்டோர் கூற்று.

"விதையர் கொன்ற முதையற் பூழி
யிடுமுறை நிரம்பிய ஈரிலை வரகின்
கவைக்கதிர் கறித்த காமர் மடப்பிணை
அரலை அங்காட் டிரலையொடு வதியும்
புறவிற் றம்மநீ நயந்தோ ளூரே
எல்லி விட்டன்று வேந்தெனச் சொல்லுபு
பரியல் வாழ்கநின் கண்ணி காண்வர
விரியுளைப் பொலிந்த வீங்குசெலற் கலிமா
வண்பரி தயங்க வேறித் தண்பெயல்

கான்யாற் றிடுமணற் கரைபிறக் கொழிய
வெவ்விருந் தயரு மனைவி
மெல்லிறைப் பணைத்தோட் டுயிலமர் போயே." (நற். 121)

இது பாகன் கூற்று.

ஒழிந்தன கற்பியலுட் காண்க. (190)

## சிவலிங்கனார்

**பாணன் ..................................... குரியர்**

(இ-ள்) பாணன், கூத்தன், விறலி, பரத்தை, அறிவர், கண்டோர் ஆகிய அறுவரும் கைக்கிளையிற் கூற்றுக்குரிய பார்ப்பான் முதலிய அறுவரும் ஆகிய பன்னிருவரும் கற்புக் கைகோளிற் கூற்றுக்குரியர், எ-று.

### பிறர் கூற்று

**492. ஊரும் அயலுஞ் சேரி யோரும்**
**நோய்மருங் கறிநருந் தந்தையுந் தன்ஐயும்**
**கொண்டெடுத்து மொழியப் படுதலல்லது[1]**
**கூற்றவண் இன்மை யாப்புறத் தோன்றும். (183)**

## இலக்குவனார்

503. The villagers or the town people, neighbour, the people of the street, the doctor, the father and the elder brother have the privilege of being quoted by others; but they make no expressions.

## இளம்பூரணர்

**492. ஊரும் அயலுஞ் ..................................... தோன்றும்.**

*என்-னின், மேற்சொல்லப்பட்ட இருவகைக் கைகோளிற்கும் உரியதோர் மரபு உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) ஊரிலுள்ளாரும், சேரியிலுள்ளாரும், அயன்மனை யுள்ளாரும் நோய்ப்பக்கங் குறிப்பினா லறிவாருந் தந்தையுந் தமையனும் இருவகைக் கைகோளினும் பட்டதனை யுட்கொண்டு பிறிதொன்றை யெடுத்து மொழியினல்லது பட்டாங்குக்[2] கூறுதலின்மை வலியுறுத்தத் தோன்றும் என்றவாறு.

---

1. படுவ தல்லதை - நச். பாடம்.
2. தாமே கண்டதாகக் கூறுதல் அவர்க்கு இல்லை. அவர்கள் கூற்றாகப் பிறர் சொல்வதே உண்டு.

எனவே, வலியில்வழிச் சிறுபான்மை நிகழவும் பெறும்.

"எந்தையும்,
நிலனுறப் பொறாஅன் சீறடி சிவப்ப
எவன்இல குறுமகள் இயங்குதி என்னும்." (அகம். 12)

இது தந்தை யுட்கொண்டு கூறியது. பிறவுமன்ன. (183)

## பேராசிரியர்

**503. ஊரு மயலுஞ் ................................ தோன்றும்.**

**(இ-ள்)** இவ் வெண்ணப்பட்ட அறுவகையோருஞ் சொல்லிய சொல்லாகச் செய்யுள் செய்யப் பெறார் என்றவாறு.

இவை, களவிற்கும் கற்பிற்கும் பொது. 'கொண்டெடுத்து மொழியப் படுத லல்லது' என்பது, இவர் கூற்றாகப் பிறர் சொல்லினல்லது இவர்தாங் கூறாரென்றவாறு; அவை:

"ஊஉ ரலரெழச் சேரி கல்லென
வானா தலைக்கு மறனி லன்னை" (குறுந். 262)

எனவும்,

"தெரிகணை நோக்கிச் சிலைநோக்கி
...................................... சாய்த்தார் தலை" (கலி. 39)

எனவும் வருவன போல்வன.

'யாப்புறத் தோன்றும்' என்றதனான் அகத்திணைக்கண் இவ்வாறு நிலைபெற்றதென்பது; எனவே, புறத்திணைக்கண் அவர் கூறவும் பெறு-மென்பது. இதுநோக்கிப் போலுங் கூறாதாரையுங் கூறுவாராயிற்றென்பது.[1] 'நோய்மருங் கறிநரை' இடை வைத்தான், முன்னைய மூன்றும் பெண்பா லெனவும், ஒழிந்தன ஆண்பாலெனவும், அறிவித்தற்கென்பது. எனவே, நோய்மருங்கறிநர் பெண்பாலும் ஆண்பாலு மாயினாரென்பது. (191)

## நச்சினார்க்கினியர்

**191. ஊரும் அயலுஞ் ...................................... தோன்றும்.**

*இது, பெரும்பான்மையும் கூறப்படாதோரைக் கூறப்படுகின்றது.*

இது களவிற்கும் கற்பிற்கும் பொது.

(எ-டு)"ஊஉ லரெழச் சேரி கல்லென
வானா தலைக்கு மறனி லன்னை" (குறுந். 262)

"தெரிகணை நோக்கிச் சிலைநோக்கிச் சாய்த்தார்தலை" (கலி. 39)

1. புறத்திணைக்கண் இவ் வறுவகையினர்க்கும் கூற்று உண்மையின் கூற்றில்லா அகத் திணையிலும் கூற்று உள்ளவர்போல் கூறியது.

"எந்தையும் நிலனுற ............................... என்னும்" (அகம். 12)

என்றாற் போல்வன கொள்க.

"துறந்ததற் கொண்டு துயரடச் சாஅய்" (ஐங்குறு. 393)

இது அயலோர் கூற்றுச் சிறுபான்மை வந்தது.

அகத்திணைக்கண் இங்ஙனம் வருமெனவே புறத்திணைக்கண் அவர் கூறவும் பெறுமென்பது. இதுநோக்கிப் பெரும்பான்மை கூறாதாரையுங் கூறினார். முன்னைய மூன்றும் பெண்பாலும், நோய் மருங்கறிநர் இருபாலும், ஒழிந்தார் ஆண்பாலு மாமென் றுணர்க. (191)

## சிவலிங்கனார்

**ஊரும் அயலுஞ் ................................... தோன்றும்.**

**(இ-ள்)** களவு, கற்பு எனும் இரண்டு கைகோளிலும் ஊரிலுள்ள பெண்டிரும், அயல்மனையகத்துப் பெண்டிரும், சேரிப்பெண்டிரும், தலைவன் தலைவியர் நோய் அறியும் ஆடவரும் பெண்டிரும், தலைவியின் தந்தையும், ஐயனும் (அண்ணனும்) தலைவன் தலைவியர் ஒழுக்கங்களை யறியினும் யாதேனும் ஒன்றுபற்றிக் கூறுவதல்லது அறிந்தவாறே கூறார் என்பது உறுதியாகத் தோன்றும், எ-று.

செய்யுளாதலின் இக் கூறியவர் கூற்றாகச் செய்யுள் செய்யப்படாது என்பதாம். இவர்கள் அறிந்தார் எனத் தோழி, தலைவி கொண்டெடுத்து மொழிதல் சிறுப்பான்மை யுண்டு என்க.

**நற்றாய்கூற்று நிகழாவிடம்**

**493. கிழவன் தன்னொடுங் கிழத்தி தன்னொடும்**
**நற்றாய் கூறல் முற்றத் தோன்றாது. (184)**

## இலக்குவனார்

504. The expression of the mother never takes place with the husband and wife.

## இளம்பூரணர்

**493. கிழவன் தன்னொடுங் ................................... தோன்றாது.**

*என்-னின், நற்றாய்க்குரிய மரபு உணர்த்துதல் நுதலிற்று.*

**(இ-ள்)** தலைவனொடுந் தலைவியொடும் நற்றாய் கூற்று நிரம்பத் தோன்றாது என்றவாறு.

1. தலைவியைச் சார்ந்தோர் என்பதே ஒக்கும்.

எனவே, ஏனையோர்க்கே கூறும் என்றவாறாம். உதாரணம் வந்துழிக் காண்க. (184)

## பேராசிரியர்

**504. கிழவன் றன்னொடுங் .................................. தோன்றாது.**

*இஃது, எய்தாத தெய்துவித்தது; விலக்கியல் வகையால் விதித்ததெனவும் அமையும்.*

**(இ-ள்)** கிழவனோடும் கிழத்தியோடும் இடையிட்டு நற்றாய் கூறுதல் நிரம்பத் தோன்றாது என்றவாறு.

'நற்றாய்' என்று ஒருமை கூறியவதனால், தலைமகள் தாயையே கொள்ளப்படும். இதனானே தந்தை தன்னையரென்பன போல்வன வற்றுக்கும் இஃதொக்கும். 'முற்ற' என்றதனால் தானே தலைவனாதலால் தலைவன் தமர் யாவருங் கூறார், முற்கூறப்பட்டார் அல்லரென்பது கொள்க. முற்றாதென்னாது 'தோன்றாது' என்றதனால், புறத்திணைக்கண் இவை வரைவின்றி வழக்கினோடு பொருந்துமாற்றாற் கொள்ளப்படு மென்பது. 'கிழவன் றன்னொடும் கிழத்தி தன்னொடும் கூறார்' எனவே அல்லுழிச் சொல்லப்பெறும் நற்றாயென்பதாம்; அஃது,

> "எம்வெங் காம மியைவ தாயின்
> ..................................................................
> செறிந்த சேரிச் செம்மன் மூதூ
> ரறிந்த மாக்கட் டாகுக தில்ல
> ..................................................................
> மென்றோ ளஞ்ஞை சென்ற வாறே" **(அகம். 15)**

என வரும். (192)

## நச்சினார்க்கினியர்

**192. கிழவன் றன்னொடுங் .................................. தோன்றாது.**

*இஃது, எய்தாத தெய்துவித்தது.*

**(இ-ள்)** கிழவனோடும் கிழத்தியோடும் இடையிட்டு நற்றாய் கூறுதல் நிரம்பத் தோன்றாது. எனவே, அல்லுழிக் கூறப்பெறும் நற்றாயும் எ-று.

> **(எ-டு)**"செறிந்த சேரிச் செம்மன் மூதூ
> ரறிந்த மாக்கட் டாகுக தில்ல." **(அகம். 15)**

இது நற்றாய் அல்லுழிக் கூறியது.

தாயென ஒருமையாற் கூறவே தலைவியுடைய நற்றாயாயிற்று. தந்தை, தன்னையர்க்கும் இஃது ஒக்கும்.

'முற்ற'வென்றதனால், தலைவன் றமர் யாவருங் கூறாரென வுணர்க.

'தோன்றா' தென்றதனானே புறத்திணைக்கண் வரைவின்றி வழக்கிற்குப் பொருந்துமாறு கொள்க. (192)

**சிவலிங்கனார்**

**கிழவன் தன்னொடுங் .................................. தோன்றாது.**

**(இ-ள்)** தலைவனொடும் தலைவியொடும் நற்றாய் கூற்றுத் தோன்றாது,. எ-று. தோழி, தந்தை தன்னையர்க்குக் கூறும் என்பதாம்.

**கண்டோர் கூற்று**

**494. ஒண்தொடி மாதர் கிழவன் கிழத்தியொடு**
**கண்டோர் மொழிதல் கண்ட தென்ப. (185)**

**இலக்குவனார்**

505. They say that the expression of *kaṇḍōr* with the husband and wife is found during the love.

**இளம்பூரணர்**

**494. ஒண்தொடி மாதர் .................................. தென்ப.**

*என்-னின், கண்டோர்க்குரியதோர் மரபு உணர்த்துதல் நுதலிற்று.*

**(இ-ள்)** ஒண்டொடி மாதராவார் நற்றாயுந் தோழியுஞ் செவிலியும். இவரொடுந் தலைவனொடுந் தலைவியொடுங் கண்டோர் கூறுதல் காணப்பட்டது என்றவாறு.

எனவே, ஏனையோர் கேட்பக் கூறிற்றில்லை என்றவாறாம். (185)

**பேராசிரியர்**

**505. ஒண்தொடி மாதர் .................................. தென்ப.**

**(இ-ள்)** தலைமகனோடும், தலைமகளோடும் இடைச்சுரத்துக் கண்டோர் மொழிதல் (40) அறியப்பட்டது என்றவாறு.

'ஒண்டொடி மாதர் கிழவன்' எனவே, அவ் விருவர் கூட்டத்துக் கண்ணுமன்றி அவ் விருவரோடுந் தனித்துழிக் கூற்றில்லையென்றவாறு. 'கண்டது' என்ற மிகையான், இடைச்சுரத்துக் கண்டோர் செவிலிக்கு உரைப்பனவுங் கொள்க; அவை,

"இளையண் மெல்லியண் மடந்தை
யரிய சேய பெருங்கான் யாறே" **(சிற்றட்டகம்)**

எனவும்,

"அணித்தாத் தோன்றுவ தெம்மூர்
மணித்தார் மார்ப சேர்ந்தனை சென்மே"

எனவும் வரும்.

இதனுள், ஒண்டொடி மாதர் கிழவன் எனச் செவ்வனந் தோன்றக் கூறியது தலைமகனையாதலின்.

"வில்லோன் காலன கழலே தொடியோள்
மெல்லடி மேலன சிலம்பே" (குறுந். 7)

என்பது, செவிலிக்குக் கண்டோர் கூறியது. (193)

## நச்சினார்க்கினியர்

**193. ஒண்டொடி மாதர் .................................. தென்ப.**

*இதுவுமது.*

(இ-ள்) ஒள்ளிய தொடியினையுடைய செவிலியோடும், தலைவனோடும், தலைவியோடும் இடைச்சுரத்துக் கண்டோர் மொழிந்தன முதனூலிற் கண்டது எ-று.

'ஒண்டொடி மாத' ரென்றார் செல்வச் சிறப்புடைமை தோன்ற.

'கண்ட'தென மிகைபடக் கூறியவதனால், தலைவி நடைமெலிந்து அசைந்தமை கண்டாரல்லது சேர்ந்தனை செல்லென்னார்; என்றும் அவ் விருவர் கூட்டத்தன்றி, தனித்துழிக் கூறாரென்றும் கொள்க.[1]

உதாரணம் முற்காட்டினாம். (193)

## சிவலிங்கனார்

**ஒண்டொடி .................................. தென்ப.**

(இ-ள்) ஒள்ளிய தொடியுடைய நற்றாய், செவிலி, தலைவன், தலைவி ஆகியோருடன் கண்டோர் கூற்று நிகழ்த்துவர் என்பர் எ-று.

கண்டோர் - இடைச்சுரத்துவழிப் போவாருள் தலைவன் தலைவியர் உடன்போக்கையும் அவரைத் தேடிவரும் செவிலி நற்றாயரையும் கண்டோர். மற்றையாரிடம் கூற்று நிகழ்த்தார்.

### உடன்போக்கில் தலைவன் கூற்று

## 495. இடைச்சுர மருங்கிற் கிழவன் கிழத்தியொடு
## வழக்கியல் ஆணையிற் கிளத்தற்கும் உரியன். (186)

---

1. தலைவி நடை மெலியாது செல்வது கண்டாரும் தலைவியையோ தலைவனையோ தனித்துக் கண்டாரும் கூறார் என்பது.

## இலக்குவனார்

506. The lover is entitled to make expressions to his love, on the basis of moral code in usage.

## இளம்பூரணர்

**495. இடைச்சுர மருங்கிற் ................................ உரியன்.**

*என்-னின், இது தலைவற்குரியதோர் மரபு உணர்த்துதல் நுதலிற்று.*

**(இ-ள்)** தலைவியை யுடன்கொண்டுபோம் இடைச்சுரத்தின்கண் தலைவியைத் தலைவன் வழக்குநெறி யாணையானே கூறுதற்குரியன் என்றவாறு.

உம்மை எதிர்மறை. ஆணையென்பது ஆக்கினை; வடமொழித் திரிவு.[1] மெல்லிய காம நிகழுமிடத்து ஆக்கினை கூறப்பெறானாயினும் அவ்விடத்து வேண்டுமென்பது எடுத்தோதப்பட்டது.

**(உ-ம்)**"நீவிளை யாடுக சிறிதே யானே
மழகளி றுரிஞ்சிய பராரை வேங்கை
மணலிடு மருங்கின் இரும்புறம் பொருந்தி
அமர்வரின் அஞ்சேன் பெயர்க்குவென்
நுமர்வரின் மறைக்குவன் மாஅ யோளே" **(நற். 362)**

என்பதனுட் கண்டுகொள்க.

மெல்லிய மகளிர்முன் வன்மை[2] கூறலாகாமையின் இது வழுவமைத்தவாறு. (186)

## பேராசிரியர்

**506. இடைச்சுர மருங்கிற் ........................................... முரியன்.**

*இதுவும் கூற்றுவிகற்பமே கூறுகின்றது.*

**(இ-ள்)** இடைச்சுரத்து உடன்போகிய கிழத்தியொடும் கிழவன் நீதிநூல் வகையாற் கிளத்தற்குமுரியன் என்றவாறு.

நீதிநூல் வகையாற் கிளத்தலென்பது, கிழத்தி தன் தமர் இடைச் சுரத்துக்கண்ணுறின் அவர் கேட்பத் தலைவிக்குச் சொல்லுவானாய் வழக்கியல் கூறுதலுமுரியனென்பது. 'வழக்கிய லாணை' என்றதனான் நீதிநூல் விதிபிறழக் கூறின் அஃது இராக்கதம் போன்று காட்டுமென்பது. உம்மையாற் கிழத்தியொடு வழக்கிய லாணையானன்றி மருட்டிக் கூறவும் பெறுமென்பது.

---

1. ஆணை எனும் தமிழின் திரிபே ஆக்கினை என்க.
2. வன்மை - வலிமையான ஆணை

"அழிவிலர் முயலு மார்வ மாக்கள்
வழிபடு தெய்வங் கட்கண் டாஅங்
கலமரல் வருத்தந் தீர யாழநின்
னலமென் பணைத்தோ ளெய்தின மாகலிற்
பொரிப்பூம் புன்கி னெழிற்றகை யொண்முறி
சுணங்கணி வனமுலை யணங்குகொளத் திமிரி
நிழல்காண் டோறு நெடிய வைகி
மணல்காண் டோறும் வண்ட றைஇ
வருந்தா தேகுமதி வாலெயிற் றோயே
மாநனை கொழுதி மகிழ்குயி லாலு
நறுந்தண் பொழில கானங்
குறும்பல் லூரயாஞ் செல்லு மாறே" (நற். 9)

என்பதனுள் 'வருந்தா தேகுமதி' எனவே 'வழிபடு தெய்வங் கட்கண்டால்'[1] விடுவார் இல்லாததுபோல நின்னை விடுதல் எனக்கு அறனன்றெனக் கூறி மெல்லெனச் செல்கவென மருட்டிக் கூறியவாறு காண்க. (194)

## நச்சினார்க்கினியர்

**194. இடைச்சுர மருங்கிற் ................................... முரியன்.**

*இதுவுங் கூற்றுவிகற்பங் கூறுகின்றது.*

**(இ-ள்)** இடைச்சுரத்தில் உடன்போய்க் கிழத்தியொடுங் கிழவன் நீதிநூல்வழியாற் கிளத்தற்கும் உரியன் எ-று.

அது தலைவி தமர் இடைச்சுரத்திற் கண்ணுறின் அவர் கேட்க அவட்குக் கூறுவானாய் வழக்கியல் கூறலும் உரியனென்க. நீதிநூல் பிறழக் கூறின் இராக்கதமாம்.

(எ-டு)"நுமர்வரி னோர்ப்பி னல்லது தமர்வரின்
முந்நீர் மண்டல முழுது மாற்றா
தெரிகணை விடுத்தலோ விலனே
யரிமதர் மழைக்கண் கலுழ்வகை யெவனே."

உம்மையான் அவ்வாறன்றி மருட்டிக் கூறவும் பெறும்.

(எ-டு) "அழிவில முயலு மார்வ மாக்கள்
வழிபடு தெய்வங் கட்கண் டாஅங்
கலமரல் வருத்தந் தீர ................. மாறே." (நற். 9)

இது தெய்வம்போல விடுந்தன்மையினை யல்லையென மருட்டினான். (194)

1. கண்கண்டால் - கண்ணெதிரே கண்டால்

## சிவலிங்கனார்

இடைச்சுர .................................. முரியன்

(இ-ள்) தலைவன், தலைவியை உடன்கொண்டு போம் இடைச்சுர வழியில் தலைவியிடத்து நீதிநூல் முறைப்படி சில கூறற்கும் உரியன், எ-று. கூறுவது வாளா கூறுவதுடன் ஆணைபோலவும் கூறற்குரியன் என்றவாறு.

(உ-ம்)"நுமர்வரி னோர்ப்பி னல்லது தமர்வரின்
முந்நீர் மண்டல முழுது மாற்றாது
தெரிகணை விடுத்தலோ விலனே
யரிமதர் மழைக்கண் கலுழ்வகை யெவனே."

இது தலைவியைத் தெருட்டிக் கூறியது.

(உ-ம்)"அழிவில முயலு மார்வ மாக்கள்
வழிபடு தெய்வங் கட்கண் டாஅங்கு
அலமரல் வருத்தந் தீர ........... மாறே." (நற்.9)

இது ஆணையாகக் கூறியது.

### கண்டோர் கூற்று

## 496. ஒழிந்தோர் கிளவி கிழவன் கிழத்தியொடு மொழிந்தாங் குரியர் முன்னத்தின் எடுத்தே. (187)

## இலக்குவனார்

507. The expression of others with the lover and the love takes place in the same way as enjoined already.

## இளம்பூரணர்

496. ஒழிந்தோர் கிளவி ........................... எடுத்தே.

*என்-னின், இது தலைவனுந் தலைவியும் அல்லாதார்க்குரியதோர் மரபு உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) தலைவனையுந் தலைவியையும் ஒழிந்த பதின்மரும் அத் தலைவனொடுந் தலைவியொடுஞ் சொல்லிப் போந்த மரபினாற் சொல்லப் பெறுவர்; இடமுங் காலமுங் குறித்து என்றவாறு.

மொழிந்தாங்கு என்பதனை வழக்கியலாணை யெனினுமமையும். முன்னமாவது,

"இவ்விடத் திம்மொழி இவரிவர்க் குரித்தென்
றவ்விடத் தவரவர்க் குரைப்பது" (தொல்.செய்யுளியல், 199)

எடுத்தென்பது அறம்பொரு ளின்பங்கட்குத் தகாத சொற்களை யெடுத்துக் கூறுதல். அஃதாவது தலைவனைப் பார்ப்பானும் பாங்கனும் கழறலும், தோழி இயற்பழித்தலும், தலைவியைச் செவிலி யலைத்தலும், பாணர் கூத்தர் பாசறையிற் சென்று கூறுதலும், தோழி தலைமகனை வற்புறுத்தலும் முதலாயின. (187)

## பேராசிரியர்

**507. ஒழிந்தோர் கிளவி ....................................... எடுத்தே.**

*இதுவுங் கண்டோர் கூற்று..*

**(இ-ள்)** மேலைச் சூத்திரத்துக் கூறிய தலைமகனையும் தலைமகளையும் ஒழித்து, ஒழிந்தோ ரெனப்படுவார் கண்டோரெனப்படுப. அவர் கூற்றுங் கிழவன் கிழத்தியொடு மொழிந்தாங்கு வழக்கியலாணை (506) யிற் கிளத்தற்கும் உரியரென்பான் முன்னத்தினெடுத்துக் கூறுப வென்றானென்பது.

முன்னத்தி னெடுத்தலென்பது, அதிகாரத்தான் அறநூற் கருத்தினா னெடுத்துரைப்ப வென்றவாறு; அவை,

"பலவுறு நறுஞ்சாந்தம் படுப்பவர்க் கல்லதை
மலையுளே பிறப்பினு மலைக்கவைதா மென்செய்யு
நினையுங்கா னும்மக ளுமக்குமாங் கனையளே" (கலி.9)

என்றாற் போல்வன.

இவ்வாறு வழக்கியலாணையாற் கிளவாது(40) வாளாதே அவரைக் கண்டனமெனவும் அவர் இன்னுழிப் புகுவரெனவுஞ் சொல்லுவன.

"கண்டோர் மொழிதல் கண்ட தென்ப" (505)

என்புழிக் கூறினாம். (195)

## நச்சினார்க்கினியர்

**181. ஒழிந்தோர் கிளவி ..................................... னெடுத்தே.**

*இதுவுங் கண்டோர் கூற்று.*

**(இ-ள்)** கண்டோர் கூறுங் கூற்றும் தலைவன் தலைவியொடு மொழிந்தாற்போல வழக்கியலாணையாற் கிளத்தற்குரியர் எ-று.

தலைவனுந் தலைவியும் ஒழிந்தோராவார் கண்டோர். அவர் வழக்கியலாணையாற் கிளத்தற்கு உரியர் என்பார் முன்னத்தினெடுத்துக் கூறுப என்றார். அதிகாரத்தான் அறநூற்கருத்தான் உரைப்ப ரென்க.

"பலவுறு நறுஞ்சாந்தம் படுப்பவர்க் கல்லதை
மலையுளே பிறப்பினு மலைக்கவைதா மென்செய்யு
நினையுங்கா னும்மக ளுமக்குமாங் கனையளே" **(கலி.9)**

என வரும்.

இங்ஙனம் வழக்கியலாணையாற் கிளவாதன 'கண்டோர் மொழிதல் கண்டது' (அகம். 40) என்பதனாற் கூறிற்று. (195)

## சிவலிங்கனார்

ஒழிந்தோர் ................................ எடுத்தே.

(இ-ள்) தலைவன் தலைவியொடு ஆணையின் மொழிந்ததுபோல இடைச்சுரத்துக் கண்டோரும் தாயரிடத்துக் குறிப்பான் மொழிதற்கும் உரியர், எ-று.

(உ-ம்)"பலவுறு நறுஞ்சாந்தம் படுப்பவர்க் கல்லதை
மலையுளே பிறப்பினு மலைக்கவைதா மென்செய்யு
நினையுங்கா ணும்மக ணுமக்குமாங் கனையளே." (கலி.9)

இது கண்டோர் இடைச்சுரத்துச் செவிலியிடம் கூறியது.

### 16. கேட்போர்

**497. மனையோள் கிளவியுங் கிழவன் கிளவியும்
நினையுங் காலைக் கேட்குநர் அவரே. (188)**

## இலக்குவனார்

508. The expression of wife and husband, when examined, is heard by others.

## இளம்பூரணர்

**497. மனையோள்** ........................................ **அவரே.**

*என்-னின், இதுவும் அது.*

(இ-ள்) தலைவியும் தலைவனும் கூறக் கேட்போர் மேற்சொல்லப் பட்ட பதின்மரும் என்றவாறு.

இது, முதலாகக் கேட்போரைக் கூறுகின்றது. (188)

## பேராசிரியர்

**508. மனையோள்** ........................................ **அவரே.**

*இது, கேட்போரென்னும் உறுப்புணர்த்துகின்றது.*

(இ-ள்) முன்னர்க் கூற்றிற் குரியரெனப்பட்ட பன்னிருவருட் கேட்டற்குரியர் தலைமகனும் தலைமகளும் ஒழித்து ஒழிந்த பதின்மரும் என்றவாறு.

அவர் கேட்பனவும் அவ் விருவர் கிளவியுமே யெனவும் தத்தங் கிளவி கேளாரெனவுங் கூறியவாறு. 'மனையோள் கிளவியுங் கிழவன்

கிளவியும்' என்பதனை, மேற்போயின கூற்றிற்குங் கூட்டியுரைக்க. உரைக்கவே கூறுவனவுங் கேட்பனவு மெல்லாம் அவ் விருவர் கிளவி யுமேயெனவும், தத்தங் கிளவி கூறவுங் கேட்கவும் பெறாரெனவுங் கூறியவாறாயிற்று. இங்ஙனம் விலக்குப்பட்டனவற்றுள் வேறுபட வருவனவும் மேற்கூறுகின்றாம். மற்றுக் கூற்றுக்கு உரியரெனப்படுவார் அவ்வயின் தலைவியுந் தலைவனுங் கூறக் கேளாரோவெனின், அவை தங் கிளவியாகலின் தாங்கேட்டல் விதந்தோதவேண்டுவதன்றென்பஃது.

'நினையுங் காலை' என்றதனால், தலைமகள் சொல்லக் கேட் போரும், தலைமகன் சொல்லக் கேட்போரும், தலைவனுந் தலைவியுந் தம்முட் கேட்டனவற்றுக் குரியனவும் ஆராய்ந்து கொள்ளப்படும் மேற்கூறிய வகையானென்பது; எனவே, தலைமகன் கூறப் பரத்தை கேட்டலும், தலைமகள் கூறப் பரத்தை கேட்டலும் முதலாயின புலனெறி வழக்கிற்கேலாதன விலக்கப்பட்டன. ஒழிந்தனவற்றுள் சில வருமாறு:

"விளங்குதொடி முன்கை வளைந்துபுறஞ் சுற்ற
நின்மார் படைதலி னினிதா கின்றே" (அகம்..58)

என்னும் தலைமகள் கூற்று, தலைமகன் கேட்டது.

"வருந்தா தேகுமதி வாலெயிற் றோயே" (நற்.9)

என்பது, தலைமகன் கூற்று, தலைமகள் கேட்டது.

"நின்கேள்
புதுவது பன்னாளும் பாராட்ட யானு
மிதுவொன் றுடைத்தென வெண்ணி" (கலி.24)

எனவும்,

"மாலையு முள்ளா ராயிற் காலை
யாங்கா குவங்கொல் பாண" (அகம்.14)

எனவும்,

"உயங்கின் றன்னையென் மெய்யென் றசைஇ" (அகம்.17)

எனவும்,

"ஒண்டா ரகலமு முண்ணுமோ பலியே" (குறுந்.362)

எனவும்,

"எல்லீரு மென்செய்தீ ரென்னை நகுதிரோ" (கலி.142)

எனவும் இன்னோரன்னவெல்லாந் தோழியும் பாணனும் செவிலியும் கண்டோரும் அறிவரும் கேட்பத் தலைமகள் கூற்றுவந்தன. பிறவும் அன்ன.

"இடிக்குங் கேளிர் நுங்குறை யாக
..........................................................................................
பரந்தன் றிந்நோய் நோன்றுகொளற் கரிதே" (குறுந்..58)

எனவும்,

"எலுவ சிறாஅ ரெம்முறு நண்ப
..........................................................................................
புதுக்கோள் யானையிற் பிணித்தற்றா லெம்மே" (குறுந்.129)

எனவும்,

"ஊர்க பாக வொருவினை கழிய" (அகம்.44)

எனவும்,

"பேரமர் மழைக்கணின் றோழி யுறீஇய
வாரஞ ரெவ்வங் களையா யோவென"

எனவும்,

"சான்றவிர் வாழியோ சான்றவி ரென்றும்" (கலி.139)

எனவும் இவை பார்ப்பானும், பாங்கனும், பாகனும், தோழியும், கண்டோரும் கேட்போராகத் தலைமகன் கூற்று நிகழ்ந்தன. பிறவும் அன்ன.

"ஒன்றித் தோன்றும் தோழி" (39)

என்றமையின் தோழி கூற்றுந் தலைமகள் (225) கூற்றேயாம் என்பது. (196)

## நச்சினார்க்கினியர்

**196. மனையோள் கிளவியுங் ......................... ரவரே.**

*இது, கேட்போரென்னும் உறுப்புக் கூறுகின்றது.*

(இ-ள்) முன்னர்க் கூற்றிற்குரியர் என்ற பன்னிருவருள், தலைவி கிளவியையும் தலைவன் கிளவியையும் கேட்டற்குரியர் அவ் விருவரையும் ஒழிந்த பதின்மரும் எ-று.

மனையோள் கிளவியுங் கிழவன் கிளவியும் என்பதனை மேற்போயின கூற்றிற்கும் கூட்டுக. கூட்டவே, அவ் விருவர் கிளவி மேற்கூறுவனவும் கேட்பனவும் எனவும், தத்தம் கிளவி கூறவும் கேட்கவும் பெறாரென்வும் கூறியவாறாயிற்று. இங்ஙனம் விலக்கியவற்றுள் வேறுபட வருவன மேற்கூறுகின்றார்.

தத்தங் கிளவியைத் தம்மிற் றாம் கேட்பரென்றலை விதந்தோத வேண்டாமையின், தலைவனுந் தலைவியுங் கேட்பரென்னாராயினர்.

'நினையுங் காலை' என்றதனால் தலைவனுந் தலைவியும் தனித் தனி கூற அவற்றைக் கேட்ட பதின்மரும் தாங்கேட்ட கூற்றிற்குச் செய்யத் தகுவன தம்முள் ஆய்ந்து கோடற்கு உரியர் என்று கொள்க. எனவே, தலைவன் கூறப் பரத்தை கேட்டலுந், தலைவி கூறப் பரத்தை கேட்டலு முதலியவற்றுள், புலனெறி வழக்கிற்கு ஏலாதன விலக்கப்பட்டன.

(எ-டு) "விளங்குதொடி முன்னக வளைந்துபுறஞ் சுற்ற
நின்மார் படைதலி னினிதா கின்றே." (அகம்.58)

இது தலைவி கூற்று, தலைவன் கேட்டது.

"வருந்தா தேகுமதி வாலெயிற் றோயே" (நற்.9)

இது தலைவன் கூற்று, தலைவி கேட்டது.

"நின்கேள், புதுவது பன்னா ளும்பாராட்ட யானு
மிதுவொன் றுடைத்தென வெண்ணி யதுதே." (கலி.24)

எனவும்,

"மாலையு முள்ளா ராயிற் காலை
யாங்கா குவம்கொல் பாண வென்ற
மனையோள் சொல்லெதிர் சொல்லல் செல்லேன்" (அகம்.14)

எனவும்,

"உயங்கின் றன்னையென் மெய்யென் றசைஇ" (அகம்.17)

எனவும்,

"தண்டா ரகலமு முண்ணுமோ பலியே" (குறுந்.362)

எனவும்,

"எல்லீரு மென்செய்தீ ரென்னை நகுதிரோ" (கலி.142)

எனவும், இவை தோழியும் பாணனும் செவிலியும் அறிவரும் கேட்பத் தலைவி கூற்று வந்தன.

"இடிக்குங் கேளிர் நுங்குறை யாக" (குறுந்.58)

எனவும்,

"எலுவ சிறாஅ ரெம்முறு நண்ப" (குறுந்.129)

எனவும்,

"ஊர்க பாக வொருவினை கழிய" (அகம்.44)

எனவும்,

"பேரமர் மழைக்கண் ணின்றோழி செய்த
வாரஞர் வருத்தங் களையா யோவென"

எனவும்,

"சான்றவிர் வாழியோ சான்றவி ரென்றும்" (கலி.139)

எனவும், இவை பார்ப்பானும் பாங்கனும் பாகனும் தோழியும் கண்டோரும் கேட்பத் தலைமகன் கூற்று நிகழ்ந்தன.

"ஒன்றித் தோன்றும் தோழி மேன" (அகம்.39)

என்றலின் தோழி கூற்றுந் தலைவி கூற்றேயாம். (196)

## சிவலிங்கனார்

**மனையோள் .................................... அவரே.**

**(இ-ள்)** தலைவன் கூற்றையும், தலைவி கூற்றையும் நினையுங்கால் கேட்டற்குரியோர் மற்றைப் பதின்மருமாவர், எ-று.

### பார்ப்பார், அறிவர் கூற்று

**498. பார்ப்பார் அறிவர் என்றிவர் கிளவி**
**யார்க்கும் வரையார் யாப்பொடு புணர்ந்தே. (189)**

## இலக்குவனார்

509. The expressions of *pārppār and arivar* are not forbidden to anybody in the making of compositions.

## இளம்பூரணர்

**498. பார்ப்பார் ........................................ புணர்ந்தே.**

*என்-னின், பார்ப்பாரும், அறிவரும் கூறுங் கூற்றுக் கேட்போரை யுணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) பார்ப்பார், அறிவர் என்று சொல்லப்பட்ட இருவர் கூற்றும் எல்லாரும் கேட்கப் பெறுவர் என்றவாறு. (189)

## பேராசிரியர்

**509. பார்ப்பா ரறிவ ........................................ புணர்ந்தே.**

*இதுவுமது.*

(இ-ள்) இது மேற்கூறிய பார்ப்பாரும் அறிவரும் கூறிய கூற்றுக் கேட்போரை இன்னாரென்று வரையப்படாது என்றவாறு.

என்றவழி, 'யார்க்கும்' என்றது, அகத்திணையோர்க்கும் புறத்திணை யோர்க்கு மென்றவாறு. 'யார்க்கும் வரையார்' என்றதனை, எச்சப்படுத்துச் சிலர்க்கும் வரையப்படுமென்பது கொள்க. என்னை? பார்ப்பார் கூற்று, தலைமகனும் செவிலியும் நற்றாயும் கேட்பினல்லது பிறர் கேட்டற்கேலா. அறிவர் கூற்று, தலைமகளுந் தோழியுஞ் செவிலியும் நற்றாயும் கேட்டற்குரியர்.

புறத்திணைக்கண்ணும் பொதுவியற் கரந்தையோர்க்கும் (185) பார்ப்பார் கிளவி ஏலாவெனவும், அறிவர் கிளவி ஏற்குமெனவும், பிறவு மின்னோரன்ன கொள்க.

'யாப்பொடு புணர்ந்து' என்பது, அகப்பொருளும் புறப்பொருளுமாக யாக்கப்படுஞ் செய்யு ளெல்லாவற்றோடும் பொருந்து மென்றவாறு. இவர் கிளவி வரையப்படாதெனவே அவர் வாயிலாகிய வழித் தலைமகள் வாயின் மறுத்தலில ளென்பதூஉம், புறத்திணைத் தலைவர்க்கும் அவ்வாறே வழிநிற்றல் வேண்டுமென்பதூஉங் கூறியவாறாயிற்று என்னை? அறிவரெனப்படுவார் மூன்று காலமுந் தோன்ற நன்குணர்ந்தோரும் புலனன்குணர்ந்த புலமையோரு (647) மாகலானும், இனிப் பார்ப்பாரும் அவ்வாறே சிறப்புடையராகலானும், அவர்வழி நிற்றல் அவர்க்குக் கடனாகலானுமென்பது. (197)

**நச்சினார்க்கினியர்**

**197. பார்ப்பா ரறிவ ........................................... புணர்ந்தே.**

*இதுவுமது.*

**(இ-ள்)** பார்ப்பாரும் அறிவருமென்கின்ற இருவர் கூற்றும் அகமும் புறமுமாக யார்க்குஞ் செய்யுளென்றவற்றோடும் பொருந்தி வருதலின் அகத் திணையோர்க்கும் புறத்திணையோர்க்குங் கேட்டலை வரையார். எ-று.

இனி 'வரையா' ரென்றதனை யெச்சப்படுத்துச் சிலர்க்கு வரையப் படுமென்று கொள்க. அவை பார்ப்பார் கூற்றுந் தலைவனும், செவிலியும், நற்றாயுங் கேட்பினல்லது பிறர் கேட்டற்கேலாமையும், இவர் கூற்றுந் தலைவனும், தோழியும், செவிலியும், நற்றாயுங் கேட்டற் குரிமையும் புறத்திணைக்கண்ணும் பொதுவியற் கரந்தையோர்க்கும் பார்ப்பார் கிளவி யேலாது அறிவர் கிளவி யேற்குமென்றலும் பிறவுமாம். எனவே தலைவி அறிவர் வாயிலாயவழி மறாமையும் புறத்திணைத் தலைவர்க்கு மவ்வாறே அவர்வழி நிற்றல் வேண்டுமென்பதூஉங் கூறிற்று.

அறிவராவார் முக்காலமு முணர்ந்தோரும் புலநன்குணர்ந்த புலமையோரும்.

எ-டு: கூறியவற்றுள்ளும் பிறவற்றுள்ளுங் காண்க. (197)

**சிவலிங்கனார்**

**பார்ப்பார் ........................................... புணர்ந்தே.**

**(இ-ள்)** பார்ப்பார், அறிவர் என்றிருவர் கூற்றும் கேட்டற்குரியோராக யாவர்க்கும் நீக்கார். எ-று. என்றது, எல்லாரும் கேட்பர் என்றபடி

யாவர்க்கும் என்றாராயினும் பார்ப்பார் கூற்றினை தலைமகள், செவிலி, நற்றாய் எனும் மூவரே கேட்பர்; அறிவர் கூற்றினைத் தலைமகளும், தோழியும், செவிலியும், நற்றாயும் கேட்பர் என்க.

புறத்திணையாயின் யாவரும் கேட்பர் என்க.

**பரத்தை, வாயில் கூற்று நிகழுமாறு**

**499. பரத்தை வாயில் எனவிரு வீற்றுங்[1]**
**கிழத்தியைச் சுட்டாக் கிளப்புப்பயனிலவே. (190)**

**இலக்குவனார்**

511. The expressions of *paraththai* and *vayil* are not worthy when not centred round the lady-love.

---

1. கூற்றும் - பேரா. பாடம்

## இளம்பூரணர்

**199. பரத்தை வாயில் ............................................... பயனிலவே.**

*என்-னின், இதுவுமொருசார் கூற்றிற்குரியா ரியல்பு உணர்த்துதல் நுதலிற்று.*

**(இ-ள்)** பரத்தையென்று சொல்லப்படும் வேறுபாட்டினும் வாயிலென்று சொல்லப்படும் வேறுபாட்டினுந் தலைமகளைச் சுட்டாத கூற்றுப்[2] பயனில்லை என்றவாறு. (190)

## பேராசிரியர்

**511. பரத்தை வாயி ............................................... மிலவே.**

*இது, பயனில் கூற்றுணர்த்துதல் நுதலிற்று.*

**(இ-ள்)** பரத்தையும் வாயில்களுமென்னும் இரண்டு வேறுபாட்டின் கண்ணும் எழுந்த கிளவி, கிழத்தி கேட்பாளாகக் கருதிச் சொல்லாக்காற் பயமில வென்றவாறு.

கிழத்தியைச் சுட்டாவெனவே, பாங்காயினார் கேட்பச் சொல்லினும் அமையுமென்பதாயிற்று.

"செறிதொடி தெளிர்ப்ப வீசிச் சிறிதிவ
ணுலமந்து வருகஞ் சென்மோ தோழி" (அகம்.106)

என்றக்கால், தலைவிக்குப் பாங்காயினார் கேட்பச் சொல்லிக் கூறல் வேண்டுமென்பது. வாயில்களுந் தலைமகளை ஊடல் காப்பவல்லது சொல்லாராகலான் தலைமகள் கேட்பாளாகச் சொல்ல வேண்டுமென்பது. 'சுட்டாக் கிளப்புப் பயமில' என்றதனான், வாயில்கள் கூறுவனவுங் கிழத்திக்குப் பாங்காயின தோழி கேட்பச் சொல்லினும் அமையும். அவற்றுக்குச் செய்யுள்:

"ஒருயிர் மாத ராகலி னிவளுந்
தேரா துடன்றனண் மன்னே"

என்பது, கிழத்தி கேட்ப வாயில்கள் கூறியது. இது, தோழி கேட்பச் சொல்லியதூஉமாம். (199)

## நச்சினார்க்கினியர்

**198. பரத்தை வாயி ................................ மிலவே.**

*இதுவுமது.*

**(இ-ள்)** பரத்தையும் வாயில்களும் என்னும் இரண்டு வேறு பாட்டின்கண்ணும் கிழத்தி கேட்பாளாகக் கருதிக் கூறாத கூற்றுப் பயமில எ-று.

---

1. தலைமகளைச் சுட்டலாவது, தலைமகள் கேட்பவளாகக் கருதிக் கூறல்.

கிழத்தியைச் சுட்டாவெனத் தலைவி பாங்காயினார் கேட்பக் கூறுதலுமமையும்

(எ-டு)"செறிதொடி தெளிர்ப்ப வீசிச் சிறிதிவ
ணுலமந்து வருகஞ் சென்மோ தோழி" (அகம். 106)

இது தலைவிக்குப் பாங்காயினார் கேட்பக் கூறியது. வாயில்களுந் தலைவி ஊடல்தீரவே கூறவேண்டுதலின் அவள் கேட்பவே கூறுவாரா யிற்று. இன்னு மதனானே தோழி கேட்ப வாயில்கள் கூறினுமமையும்.

(எ-டு)" ஒருயிர் மாத ராகலி னிவளுந்
தேரா துடன்றனண் மன்னே."

இது வாயில்கள் கூறத் தலைவி கேட்டலுந் தோழி கேட்டலுமாம். (198)

## சிவலிங்கனார்

பரத்தை வாயில் ............................ இலவே.

(இ-ள்) பரத்தையர் கூற்றும் வாயில்கள் கூற்றும் என்னும் வேறு பாடுகளில் தலைவியைச் சுட்டிக் கூறவில்லையாயின் பயன் இல்லை, எ-று. எனவே, தலைவி கேட்குமாறு கூறவேண்டும் என்பதாம். தலைமகள் கேட்டலாவது சிறைப்புறமாகக் கேட்டலும் வாயில்கள் மூலமாகக் கேட்டலும் ஆம்.

### வாயில்கூற்றுப் புறனடை

50ய. வாயில் உசாவே தம்மு ளுரிய.[1] (191)

## இலக்குவனார்

512. The *vāyils* may make enquiries among themselves.

## இளம்பூரணர்

500. வாயில் உசாவே ................................................ ளுரிய.

*என்-னின், வாயில்கட்குரியதோர் மரபு உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) வாயில்கள் உசாவுமிடத்துக் கிழத்தியைச் சுட்டாது[2] தம்முள் உசாவுதலுரித்து என்றவாறு. உதாரணம் வந்துழிக் கண்டுகொள்க. (191)

## பேராசிரியர்

512. வாயி லுசாவே ................................................ முரிய.

1. தம்முளு முரிய - பேரா. பாடம்

2. கிழத்தி கேட்பாளாகச் சுட்டாது. சுட்டாது உசாவினும் கிழத்திகேட்பதாகவே அமையும் என்பர் பேரா. நச்.

*இதுவுமது.*

(இ-ள்) மேனின்ற அதிகாரத்தால் தலைமகளைச் சுட்டி, ஒருவ ரொருவர்க்குரைப்பார்போல வாயில்கள் தம்முட் கூறவும் பெறும் அவையுந் தலைமகள் கேட்பன என்றவாறு.

அதற்குச் செய்யுள்:

"தண்ணந் துறைவன் கொடுமை
நம்மு ணாணிக் கரப்பா டும்மே" (குறுந். 9)

என்பது பாடினி, பாணர்க்குரைத்தது. 'தம்முளும்' என்ற உம்மை எதிர்மறை யாகலான், கேட்குநர் அவரெனப் பட்டவாறன்றித் தம்முள் தாங் கேட்டல் சிறுபான்மையெனக் கொள்க. (200)

## நச்சினார்க்கினியர்

**199. வாயி லுசாவே ........................................ ஞரிய.**

*இதுவுமது.*

(இ-ள்) முற்கூறிய அதிகாரத்தாற் றலைவியைச் சுட்டி யொருவ ரொருவர்க் குரைப்பார்போல வாயில்கள் தம்முட் கூறவும் பெறும் எ-று.

அவையுந் தலைவி கேட்பவென,

" தண்ணந் துறைவன் கொடுமை
நம்மு ணாணிக் கரப்பா டும்மே." (குறுந்.9)

இது பாடினி பாணர்க் குரைத்தது.

"மலரைப் பொறாவடி மானுந் தமியள்மன் அன்னொருவன்
பலரைப் பொறாதென் றிழிந்துநின் றாள்பள்ளி காமனெய்த
வலரைப் பொறாதென் றழல்விழித் தோனம் பலம்வணங்காக்
கலரைப் பொறாச்சிறி யாளென்னை கொல்லோ கருதியதே."
(திருச்சிற்.367)

இதுபோல்வன பிறவும் வாயில்கள் தம்முட் கூறின.

உம்மை யெதிர்மறையாகலின் கேட்குந ரவரெனப்பட்டவரன்றித் தம்முள் தாங்கேட்டல் சிறுபான்மையாம். (199)

## சிவலிங்கனார்

**வாயி லுசாவே ..................................... ஞரிய.**

(இ-ள்) வாயில்கள் ஒருவர்ஒருவர் தம்முள் கூறிக்கொள்ளுதலும் உண்டு; தலைவியைச் சுட்டாமலேயே, எ-று.

தலைவியைச் சுட்டிக் கூறாராயினும் தலைவி கேட்பதாகவே கருதுதல் வேண்டும், தம்முட் கூறிக் கொள்வதால் பயனின்மையின்.

கேட்டல் - மரபுவழுவமைப்பு

**501. ஞாயிறு திங்கள் அறிவே நாணே**
**கடலே கானல் விலங்கே மரனே**
**புலம்புறு பொழுதே புள்ளே நெஞ்சே**
**அவையல பிறவு நுதலிய[1] நெறியாற்**
**சொல்லுந போலவுங் கேட்குந போலவுஞ்**
**சொல்லியாங் கமையும் என்மனார் புலவர். (192)**

## இலக்குவனார்

513. The sun, the moon, wisdom, modesty, the sea, grove, animals, trees, the time of loneliness, birds, heart and others are treated as if they speak and hear in accordance with the rules enjoined - so say the poets.

## இளம்பூரணர்

**501. ஞாயிறு திங்கள்..............புலவர்.**

*என்-னின், இதுவுங் கேட்டற் பொருண்மைக்கண் வருவதோர் மரபுவழுவமைத்தலை உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) ஞாயிறு முதலாக நெஞ்சு ஈறாகச் சொல்லப்பட்ட பதினொன்றும் அத்தன்மைய பிறவுமாகிய மக்களல்லாத பொருள்கள் தாங்கருதிய நெறியினானே சொல்லுவன போலவுங் கேட்குநபோலவுஞ் சொல்லியமையப் பெறும் என்றவாறு.

ஆங்கு-அசை.

"பழிதபு ஞாயிறே பாடறியா தார்கட்
கழியக் கதழ்வை யெனக்கேட்டு நின்னை
வழிபட் டிரக்குவேன் வந்தேனென் நெஞ்சம்
அழியத் துறந்தானைச் சீறுங்கால் என்னை
ஒழிய விடாதீமோ என்று." (கலி.143)

"மாதர் முகம்போல் ஒளிவிட வல்லையேற்
காதலை வாழி மதி." (குறள்.118)

"உறுதி தூக்கத் தூங்கி அறிவே
சிறிதுநனி விரையல் என்னும் ஆயிடை." (நற்.284)

---

1 நுவலிய - பேரா. நச். பாடம்

"நேர்ந்தநங் காதலர் நேமி நெடுந்திண்டேர்
ஊர்ந்த வழிசிதைய ஊர்கின்ற ஓதமே
பூந்தண் பொழிலே புணர்ந்தாடும் அன்னமே
ஈர்ந்தண் துறையே இதுதகா தென்னீரே" (சிலப்.கானல்வரி)

இதனுட் கடலுங் கானலும் புள்ளு மரனுங் கூறப்பட்டன.

"மாலைநீ,
தையெனக் கோவலர் தனிக்குழல் இசைகேட்டுப்
பையென்ற நெஞ்சத்தேம் பக்கம்பா ராட்டுவாய்" (கலி.108)

"வருந்தினை வாழிய நெஞ்சே" (அகம்.79)

பிறவு மென்றதனான்,

"மன்றப் பனைமேல் மலைமாந் தளிரேநீ
தொன்றிவ் வுலகத்துக் கேட்டும் அறிதியோ
மென்தோள் ஞெகிழ்த்தான் தகையல்லால் யான்காணேன்
நன்றுதீ தென்று பிற" (கலி.142)

எனவும் இந்நிகரன கொள்க.

இத்துணையுங் கூறப்பட்டது கேட்போ ரியல்பு. (192)

## பேராசிரியர்

**513. ஞாயிறு திங்க............புலவர்.**

*இது, கேளாதன சில பொருள் கேட்பனவாகப் பொருளியலுள் (196) வழுவமைக்கப்பட்டனவற்றை இலக்கண வகையாற் கூறுவனவுங் கேட்குநவும் ஆகதற்கண்ணும் ஆராய்கின்றானென்பது.*

(இ-ள்) ஞாயிறும், திங்களும், அறிவும், நாணும், கடலும், கானலும், விலங்கும், மரனும், பொழுதும், புள்ளும், நெஞ்சும் இன்னோரன்ன பிறவும் மேற்பொருளியலுள்,

"செய்யா மரபிற் றொழிற்படுத் தடக்கியும்" (196)

என்று பொதுவகையாற் கூறியவாற்றான் அவைதாம் சொல்லுவன போலவும் கேட்பனபோலவும் சொல்ல அமையும் என்றவாறு.

ஈண்டுக் கூற்றும் உடன்கூறினான் மேலிவற்றை வரையறுத்துக் கூற்றிற்கு உரியவென்றிலனாகலின், புலம்புறுபொழுதென்பது மாலையும், யாமமும், எற்பாடும், காரும், கூதிரும், பனியும், இளவேனிலும் போல்வன. 'பிறவும்' என்றதனால் புல், புதல் முதலியன கொள்க. அவற்றுட் சில வருமாறு:

"கதிர்பகர் ஞாயிறே கல்சேர்தி யாயி
னவரை நினைத்து நிறுத்தென்கை நீட்டித்

தருகுவை யாயிற் றவிருமென் னெஞ்சத்
துயிர்திரியா மாட்டிய தீ" (கலி.142)

என்றாற்போல்வன கண்டுகொள்க. (201)

## நச்சினார்க்கினியர்

**200. ஞாயிறு திங்க............புலவர்.**

*இது, கேட்போருங் கூற்றும் வேறுபட வருமாறு கூறுகின்றது. அவை பொருளியலுள் வழுவமைதி கூறுவனவுங் கேட்குநவுமாய் ஈண்டு வருதலின் ஆராய்கின்றார்.*

(இ-ள்) ஞாயிறு முதல் நெஞ்சீறாகக் கூறியனவும் அவை போல்வன பிறவும் மேற் "செய்யா மரபில் தொழிற்படுத் தடக்கியும்" (பொருளியல்,2) எனப் பொருளியலுட் பொதுவகையாற் கூறியவாற்றான் அவ்வதாங் கூறுவன போலவுங் கேட்பன போலவுங் கூறுமாறமையுமென்று கூறுவர் புலவர் எ-று.

கூற்றும் உடன்கூறினார் மேற்கூற்றிற்குரியன இவையென வரை யறாமையின்.[1]

பொழுதாவன: மாலையும், யாமமும், எற்பாடும், காரும், கூதிரும், பனியும், இளவேனிலும் போல்வன.

பிறவுமென்றதனால் புல்லும் புதலும் முதலியனவுங் கொள்க.

(எ-டு)"கதிர்பகர் ஞாயிறே கல்சேர்தி யாயி
னவரை நினைத்து நிறுத்தென்கை நீட்டித்
தருகுவை யாயிற் றவிருமென் னெஞ்சத்
துயிர்திரியா மாட்டிய தீ." (கலி.142)

"வாள்வரி வேங்கை வழங்குஞ் சிறுநெறியெங்
கேள்வரும் போழ்தி னெழால்வாழி வெண்டிங்காள்"

"உறுதி தூக்கத் தூங்கிய வறிவே" (நற்.184)

"நேர்ந்தநங் காதலர் நேமி நெடுந்திண்டே
ரூர்ந்த வழிசிதைய வூர்கின்ற வோதமே
பூந்தண் பொழிலே புணர்ந்தாடு மன்னமே
யீர்ந்தண் டுறையே யிதுதகா தென்னீரே" (சிலப்.கானல்வரி)

"பொங்கிரு முந்நீ ரகமெலா நோக்குபு
திங்களுட் டோன்றி யிருந்த குறுமுயா
லெங்கேள் இதனகத் துள்வழிக் காட்டீமோ" (கலி.144)

1. கூற்றிற்குரியாரை வரையறுத்த சூத்திரத்துக் கூறாமையின்

"காய்ந்தநோ யுழப்பாரைக் கலக்கிய வந்தாயோ-மாலை"
(கலி.120)

"நீ காணவும் பெற்றாயோ காணாயோ மடநெஞ்சே" (கலி.123)

என வரும்.

புள்ளெனவே வண்டு முதலியனவும் அடங்கும்.

"அம்மென் இணர அடம்புகாள் அன்னங்காள்"
(சிலப்.கானல்வரி)

ஒழிந்தன வந்துழிக் காண்க. (200)

## சிவலிங்கனார்

**ஞாயிறு................புலவர்.**

(இ-ள்) ஞாயிறு முதல் நெஞ்சு ஈறாக உள்ளனவும் அவை யல்லாத பிறவும் ஆகிய கேட்டற்குரிய வல்லாத அஃறிணைப் பொருள்கள், கருதியவாறே தாம் சொல்வன போலவும் சொல்வதைக் கேட்பன போலவும் சொல்லப்பெறும் என்பர் புலவர் எ-று.

(உ-ம்)"பழிதபு ஞாயிறே...............ஒழிய விடாதீமோ." (கலி.143)

"மாதர் முகம்போல் ஒளிவிட வல்லையேல்
காதலை வாழி மதி." (குறள்.1118)

"உறுதி தூங்கத் தூங்கிய அறிவே" (நற்.184)

இப்படிப் பிறவும் வருவன காண்க.

### 17. களம்

**502. ஒருநெறிப் பட்டாங் கோரியன் முடியுங்**
**கரும நிகழ்ச்சி இடமென மொழிப. (193)**

## இலக்குவனார்

510. The occurrence of activities of various natures under one head is called *idan̠* (place of action).

## இளம்பூரணர்

**502. ஒருநெறிப் பட்டாங்..............மொழிப.**

*என்-னின், நிறுத்த முறையானே இடமாமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) ஒருவழிப்பட்டு ஓரியல்பாக முடியும் வினைநிகழ்ச்சி இடமென்று சொல்லுவர் என்றவாறு.[1]

நிகழ்ச்சி - நிகழ்ந்தவிடம்.

ஒருநெறிப் படுதலாவது - அகமாயினும் புறமாயினும் ஒரு பொருண்மேல் வருதல்.

ஓரியல் முடிதலாவது - அகத்தின்கட் களவென்றானும் கற்பென்றானும் அவற்றின் விரிவகையில் ஒன்றானும்பற்றி வருதல். புறத்தின்கண் நிரைகோடலானு மீட்டலானு மேற்செலவானும் எயில் வளைத்தலானும் யாதானு மோரியல்புபற்றி வருதல்.

கருமநிகழ்தலாவது - அப் பொருளைப்பற்றி யாதானு மொருவினை நிகழுமிடம். இன்னுங் கரும நிகழ்ச்சி என்றதனால் தன்மை முன்னிலை படர்க்கை யென்பனவுங் கொள்ளப்படும்.

"செல்லாமை உண்டேல் எனக்குரை மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க் குரை" (குறள்.951)

என்றவழிப் பிரிவுப் பொருண்மை நிகழும் இடமாயிற்று. முன்னின் றானைக் கூறுதலின் முன்னிலை யென்னும் இடமாயிற்று.

யாதானுமோர் கருமநிகழ்வுழி அதற்காகும் இடத்தொடுங்கூட நிகழ்தல் வேண்டுமென்று இப் பொருள் கூறப்பட்டது.

ஒருநெறிப்படாதும் ஓரியன் முடியாதும் வருமிடம் வழுவாம். அஃதாவது, தலைமகளொடு புணர்தல் வேண்டித் தோழியை யிரந்து குறையுறுவான் அவ் விடத்திற்குத் தக்கவுரை கூறாது தன்னாற்றலும் பிறவுங் கூறுதல்.

"மெல்லியல் நல்லாருள் மென்மை அதுவிறந்
தொன்னாருள் கூற்றுட்கும் உட்குடைமை யெல்லாஞ்
சலவருட் சாலச் சலமே நலவருள்
நன்மை வரம்பாய் விடல்" (நாலடி.188)

இதனானு மறிக. அன்றியும்,

"நெடும்புனலுள் வெல்லு முதலை அடும்புனலுள்
நீங்கி னதனைப் பிற." (குறள்.195)

இதுவும் இடனறிதல்.

"உண்ணற்க கள்ளை உணிலுண்க சான்றோரால்
எண்ணப் படவேண்டா தார்." (குறள்.922)

1. நிகழ்ச்சி - நிகழ்ந்த இடம் நிகழ்ச்சி எனப்பட்டது. இயற்கைப் புணர்ச்சி, இடந்தலைப்பாடு முதலியன நிகழ்ச்சிகள். அவை நிகழ்ந்த இடங்கள் இடன் ஆகும்.

இது தன்மையானையும் முன்னின்றானையும் ஒழித்துப் படர்க்கையானைத் தொழிற்படுத்துதல். உண்ணற்க வென்னும் படர்க்கைச் சொல் படர்க்கைப் பெயரொடு முடிந்தது. பிறவுமன்ன. (193)

## பேராசிரியர்

510. ஒருநெறிப் பட்டாங்..............மொழிப.

*இது, களனெனப்பட்ட உறுப்புணர்த்துகின்றது.*

(இ-ள்) பலவும் ஒருவழிப்பட்டு ஓரிலக்கணத்தான் முடியுங் கரும நிகழ்ச்சியை இடமென்று கூறுப என்றவாறு.

இடமெனினுங் களமெனினும் ஒக்கும். ஒரு செய்யுட் கேட்டால் இஃது இன்னவிடத்து நிகழ்ந்ததென்று அறிதற்கு ஏதுவாகியதோர் உறுப்பினை இடமென்றானென்பது. ஒருநெறிப்படுத லென்பது, ஒருவழிப் பலவுந் தொகுத்தல். ஓரியலென்பது, அவற்றுக்கெல்லாம் இலக்கண மொன்றாதல்; அஃதாவது காட்சியும் ஐயமும் துணிதலும் புணர்ச்சியும் நயப்பும் பிரிவச்சமும் வன்புறையு மென்றின்னோரன்ன வெல்லாம் ஒருநெறிப்பட்டு இயற்கைப்புணர்ச்சி யென்னும் ஓரிலக்கணத்தான் முடியு மென்பது. கருமநிகழ்ச்சியென்பது, காமப்புணர்ச்சி யென்னுஞ் செயப்படு பொருணிகழ்ச்சி; அஃது, இடமெனப்பட்டது. இது வினை செய்யிடம். நிலமாயின முன்னர்த் திணையெனப்பட்டன. காலம் முன்னர்ச் (514) சொல்லுதும்.

"எலுவ சிறாஅ ரெம்முறு நண்ப" (குறுந்.129)

என்னும் பாட்டும்,

"கேளிர் வாழியோ கேளிர் நாளுமென்
னெஞ்சுபிணிக் கொண்ட வஞ்சில் லோதிப்
பெருந்தோட் குறுமகள் சிறுமெல் லாக
மொருநாள் புணரப் புணரி
னரைநாள் வாழ்க்கையும் வேண்டலென் யானே" (குறுந்.280)

என்னும் பாட்டும் பாங்கற்கூட்டமே இடனாக ஒருவழிப்பட்டன; என்னை? நின் வேறுபாடு எற்றினா னாயிற்றென்று வினைவிய பாங்கற்கு இதனினா னாயிற்றென்று உரைத்ததூஉம், அதற்குப் பாங்கன் கழறி னானை எதிர்மறுத்ததூஉமென இரண்டும் பாங்கற்கூட்டத்துப் பட்டு ஓரியலான் முடிந்தன. அவை மேற்கூறிய வகையானே கண்டுகொள்க. (198)

## நச்சினார்க்கினியர்

201. ஒருநெறிப் பட்டாங்.................மொழிப.

*இது, களமெனப்பட்ட வுறுப்புக் கூறுகின்றது.*

(இ-ள்) பலவும் ஒருவழித் தொக்கவற்றுக் கெல்லாம் ஓரிலக்கணத் தான் முடியும் கரும நிகழ்ச்சியை யிடமென்று கூறுப எ-று.

களமெனினும் இடமெனினு மொக்கும். அது ஒரு செய்யுட் கேட்டால் இது இன்ன இடத்து நிகழ்ந்ததென்றறிதற்கு ஏதுவாயதோர் உறுப்பு. அது காட்சியும் ஐயமுந் துணிவும் புணர்ச்சியும் நயப்பும் பிரிவச்சமும் வன்புறையும் இன்னோரன்னவும் ஒருநெறிப்பட்டு இயற்கைப் புணர்ச்சியென்னும் ஓரிலக்கணத்தான் முடியுமென்பது.

கரும நிகழ்ச்சியென்பது, காமப்புணர்ச்சியென்னுஞ் செயப்படு பொருணிகழ்ச்சி. இது வினைசெயிடம்.

"எலுவ சிறாஅர்" (குறுந்.129)

"கேளிர் வாழியோ" (குறுந்.280)

என்பன பாங்கற்கூட்ட மிடனாக ஒருவழிப்பட்டன. பிறவுமன்ன. (201)

**சிவலிங்கனார்**

**ஒருநெறிப்..................மொழிப.**

(இ-ள்) ஓர் ஒழுங்குபட்டு யாவும் ஓர் ஒழுக்கமாக முடிவு பெறுவதான் கருமம் நிகழிடம் செய்யுளுக்கு இடம் என்னும் உறுப்பாகும், எ-று.

அகத்துக்குக் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்பன இடம்.

புறத்துக்கு புறநிகழ்ச்சிகள் நிகழும் வரையறைப்படாத இடம்.

**18 காலம்**

**503. இறப்பே நிகழ்வே எதிர தென்னுந்
திறத்தியல் மருங்கில் தெரிந்தனர் உணரப்[1]
பொருள்நிகழ் வுரைப்பது கால மாகும். (194)**

**இலக்குவனார்**

514. The description of actions taking place in the past, present and future, understood by the learned as such, is termed *kalam*.

1. உள்ள - பேரா. பாடம்

## இளம்பூரணர்

**503. இறப்பே நிகழ்வே...............மாகும்.**

*என்-னின், நிறுத்தமுறையானே காலமாமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) இறந்தகாலம் நிகழ்காலம் எதிர்காலமெனக் கூறப்பட்டியலும் பக்கத்தின் ஆராய்ந்து நோக்குமாறு பொருள் நிகழ்ச்சியைக் கூறுமது காலமாகும் என்றவாறு.

"முதுக்குறைந் தனளே முதுக்குறைந் தனளே
மலையன் ஒள்வேற் கண்ணி
முலையும் வாரா முதுக்குறைந் தனளே."

இஃது இறந்தகாலத்தின்கட் புணர்ச்சியுண்மை தோன்ற வந்தது. இனி,

"அண்ணாந் தேந்திய வனமுலை தளரினும்
பொன்னேர் மேனி மணியில் தாழ்ந்த
நன்னெடுங் கூந்தல் நரையொடு முடிப்பினும்
நீத்த லோம்புமதி பூக்கேழ் ஊர" (நற்.10)

என்றவழி, நிகழ்காலம் இளமைப் பருவமென்பது தோன்ற வந்தது. இதனுள், நீத்த லோம்புமதி யென்பது எதிர்காலங் குறித்துநின்றது. இவ்வகையினாற் காலமுமிடமும் எல்லாச் செய்யுளின்கண்ணும் வருமென்று கொள்க. (194)

## பேராசிரியர்

**514. இறப்பே நிகழ்வே...............மாகும்.**

*இது, காலமுணர்த்துகின்றது.*

(இ-ள்) மூன்று காலத்தினும் நிகழ்கின்ற நிகழ்ச்சி அச் செய்யுளூட் டோன்றச் செய்யிற் காலமென்னும் உறுப்பாம் என்றவாறு.

பொருணிகழ்ச்சியைக் காலமென்ற தென்னை[1]? காலமென வேறுபொருள் இல்லதுபோலவெனின், அஃது ஈண்டாராய்ச்சியின்று, **நியாய நூலாராய்ச்சி யென்க.**

"வில்லோன் காலன கழலே
..................................................
வேய்பயி லழுவ முன்னி யோரே" (குறுந்.7)

என்னும் பாட்டினுள், வில்லோனுந் தொடியோளும் பொருளெனப்படும்.

---

1. காலம் என்பது ஒன்று இல்லை என்பதுபோலப் பொருள் நிகழ்ச்சியையே அதாவது இயற்கைப் புணர்ச்சி முதலியன நிகழ்ந்த காலத்தையே காலம் என்றது என்னை?

"வேய்பயி லழுவ முன்னி யோரே"

என்பது, அப் பொருணிகழ்ச்சியான் இறந்தகால மெனப்படும். அப் பாட்டிற்குச் சிறந்தார் அவராகலின் அவரே பொருளாயினாரென்பது.

"மருந்தெனின் மருந்தே வைப்பெனின் வைப்பே
யரும்பிய சுணங்கி னம்பகட் டிளமுலைப்
பெருந்தோ ணுணுகிய நுசுப்பிற்
கல்கெழு கானவர் நல்குறு மகளே" (குறுந்.71)

என்பது, நிகழ்காலம்.

"பகலும் பெறுவையிவ டடமென் றோளே" (கலி.49)

என்பது, எதிர்காலம்.

புறத்திற்கும் இவ்வாறே இன்றியமையாதென்பது. பெரும் பொழுது சிறுபொழுதென்பன ஈண்டுத் திணையெனப்பட்டு அடங்கின; என்னை? முதலும் கருவும் உரிப்பொருளுங் கூட்டித் திணையாகலின். (202)

## நச்சினார்க்கினியர்

**202. இறப்பே நிகழ்வே..............மாகும்.**

*இது, காலமென்னும் உறுப்புக் கூறுகின்றது.*

(இ-ள்) இறப்பே நிகழ்வே எதிரது என்னும் திறத்து - இறப்பும் நிகழ்வும் எதிர்வும் என்னும் மூன்று காலத்தே, இயல்மருங்கில் - எல்லாத்திணையும் நிகழ்கின்ற நிகழ்ச்சிக்கண்ணே, பொருள் நிகழ்வு உணரத் தெரிந்தனர் உரைப்பது காலமாகும் - பொருள் நிகழ்ச்சியுணரத் தெரிந்தனராய் உரைப்பது காலம் என்னும் உறுப்பாம் எ-று.

(எ-டு)"வில்லோன் காலன கழலே............முன்னி யோரே." (குறுந்.7)

இதனுள் வில்லோன் தொடியோள் என்பன பொருள். முன்னி யோர் என்பது, தம் பொருள் நிகழ்ச்சியாகலின் இஃதிறந்த கால மெனப் படும். இதற்குச் சிறந்தா ரவர்களாதலின் அவர்களே பொருளாயினார்.

"மருந்தெனின் மருந்தே வைப்பெனின் வைப்பே
யரும்பிய சுணங்கின் அம்பகட் டிளமுலைப்
பெருந்தோ ணுணுகிய நுசுப்பிற்
கல்கெழு கானவர் நல்குறு மகளே" (குறுந்.71)

இது நிகழ்காலம்.

"பகலும் பெறுவையிவள் தடமென் தோளே" (கலி.49)

இஃதெதிர்காலம்.

புறத்திற்கு மிவ்வாறே யின்றியமையாதென்பது; பெரும்பொழுதுஞ் சிறுபொழுதும் முதல், கரு உரிப்பொருளோடு கூடித் திணையாகலின் இக்காலம் அவற்றின் வேறாம். (202)

**சிவலிங்கனார்**

**இறப்பே...............கால மாகும்.**

(இ-ள்) இறந்த காலம், நிகழ்காலம், எதிர்காலம் எனும் வகையில் ஆழ்ந்து நோக்குமாறு பொருள் நிகழ்ச்சியைக் கூறுவது காலம் என்னும் உறுப்பாகும். எ-று.

**19. பயன்**

**504. இதுநனி பயக்கும் இதன்மா[1] றென்னுந்**
**தொகுநிலைக்[2] கிளவி பயனெனப் படுமே. (195)**

**இலக்குவனார்**

515. The *results* is said to be the concluding statement as "This is the beneficial result of this."

**இளம்பூரணர்**

**504. இதுநனி பயக்கும்..................படுமே.**

*என்-னின், நிறுத்தமுறையானே பயனாமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) யாதானும் ஒரு பொருளைக் கூறியவழி இதன் பின்பு மிதனைப் பயக்கும் என விரித்துக் கூறாது முற்கூறிய சொல்லினானே தொகுத்துக் கூறுதல் பயனெனப்படும் என்றவாறு.

"சூரல் பம்பிய சிறுகான் யாறே
சூரர மகளிர் ஆரணங் கினரே
வாரல் வரினே யானஞ் சுவலே
சாரல் நாட நீவர லாறே."

இதனாற் பயன் வரைந்துகோடல் வேண்டும் என்பது.

---

1. இதனான் என்னும் - பேரா .பாடம்
2. தொகைநிலை - பேரா. நச். பாடம்

"ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றதன்
பின்சாரப் பொய்யாமை நன்று." (குறள்.323)

இதனாற் பயன் நன்மை வேண்டுவார் இவ்வாறு செய்தல் வேண்டுமென்றல்.

இவ்வகையினால் யாதானுமொரு செய்யுளாயினும் பயன்படக் கூறல்வேண்டு மென்பது கருதிப் பயனென ஒருபொருள் கூறினார். (195)

## பேராசிரியர்

**515. இதுநனி பயக்கும்.................படுமே.**

*இது, முறையானே பயனென்னும் உறுப்புணர்த்துகின்றது.*

(இ-ள்) இது மிகவும் பயக்கும் இதனானெனத் தொகுத்துச் சொல்லப்படும் பொருள் பயனென்னும் உறுப்பாம் என்றவாறு.

'மாறாக் காதலர் மலைமறந் தனரே
யாறாக் கட்பனி வரலா னாவே
வேறா மென்றோள் வளைநெகி ழும்மே
கூறாய் தோழியான் வாழு மாறே" (ப.1131)

என்னும் பாட்டு, தோழியைத் தூதுவிடுவாளாதற் பயன்படவந்தது. இவ்வாறு எல்லாப் பாட்டும் பயனுறுப்பாகவன்றி வாராவெனக. இவை புறத்திற்கும் ஒக்கும். (203)

## நச்சினார்க்கினியர்

**203. இதுநனி பயக்கும்............படுமே.**

*இது, பயனென்னும் உறுப்புக் கூறுகின்றது.*

(இ-ள்) இது மிகவும் பயக்கும் இதனானெனத் தொகுத்துக் கூறப்படும் பொருளும் பயனென்னும் உறுப்பாம் எ-று.

(எ-டு)"மாறாக் காதலர் மலைமறந் தனரே
யாறாக் கட்பனி வரலா னாவே
வேறா மென்றோள் வளைநெகி ழும்மே
கூறாய் தோழியாம் வாழு மாறே."

இது, தோழியைத் தூதுவிடுதல் பயனாக வந்தது.

இது புறத்திற்கு மொக்கும். இங்ஙனம் பயனுறுப்பாகவே செய்யுள் வருமாறுணர்க. (203)

## சிவலிங்கனார்

**இதுநனி..................படுமே.**

(இ-ள்) இக் கூற்று இதன்பின் இன்ன பயனை மிகவும் தரும் என்னும் பொருளை விளங்கக் கூறாமல் சொல்லிய சொற்றொடரிலேயே பெற வைத்தமைவது பயன் என்னும் உறுப்பாம். எ-று.

"கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியும் ஐம்புலனும்
ஒண்டொடி கண்ணே உள." (குறள்.1101)

இது புணர்ச்சிப்பின் மகிழ்ச்சியைப் பயந்தது.

### 20. மெய்ப்பாடு

**505. உய்த்துணர் வின்றித் தலைவரு பொருண்மையின்[1]
மெய்ப்பட முடிப்பது மெய்ப்பா டாகும். (196)**

## இலக்குவனார்

516. *Meyppādu* is to make the composition so easy and simple as to make the reader exhibit his psychic feelings by physical changes on reading or hearing it.

## இளம்பூரணர்

505. **உய்த்துணர் வின்றித்...............டாகும்.**

*என்-னின், நிறுத்தமுறையானே மெய்ப்பாடு ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) யாதானு மொன்றைக் கூறியவழி யதன்கட் பொருண்மையை விசாரித்துணர்தலன்றி அவ்விடத்து வரும் பொருண்மையானே மெய்ப்பாடு தோன்ற முடிப்பது மெய்ப்பாடென்னும் உறுப்பாம் என்றவாறு.

"ஐயோ எனின்யான் புலியஞ் சுவலே
அணைத்தனன் கொளினே அகன்மார் பெடுக்கவல்லேன்
என்போற் பெருவிதுப் புறுக நின்னை
இன்னா துற்ற அறனில் கூற்றே
நிரைவளை முன்கை பற்றி
வரைநிழற் சேர்க நடத்திசிற் சிறிதே." (புறம்.255)

இதனுள் அழுகையாகிய மெய்ப்பாடு புலப்பட வந்தவாறு. கண்டு கொள்க.

செய்யுட் செய்வார் மெய்ப்பாடு தோன்றச் செய்தல் வேண்டு மென்பது கருத்து. (196)

1. பொருளான் - பேரா. நச். பாடம்

## பேராசிரியர்

**516. உய்த்துணர்...............டாகும்.**

*இது, மெய்ப்பாட்டுறுப் புணர்த்துகின்றது.*

**(இ-ள்)** உய்த்துணர்ச்சியின்றிச் செய்யுளிடத்துப் (சொல்லப்படும்) பொருள் தானே வெளிப்பட்டாங்குக் கண்ணீரரும்பன் மெய்ம்மயிர் சிலிர்த்தன் முதலாகிய சத்துவம் படுமாற்றான் வெளிப்படச் செய்வது மெய்ப்பாடென்னும் உறுப்பாம் என்றவாறு.

கவிப்பொரு ளுணர்ந்தால் அதனானே சொல்லப்படும் பொருள் உய்த்து வேறு கண்டாங்கு அறி தலை மெய்ப்பாடென்றான், அது தேவ ருலகங் கூறினும் அதனைக் க ணடாங்கறியச் செய்தல் செய்யுளுறுப்பாம் என்றவாறு; அவை:

"மையற விளங்கிய மணிமரு ளவ்வாய்தன்
மெய்பெறா மழலையின் விளங்குபூ ணனைத்தர" **(கலி.81)**

என்றாற்போல வருவன. 'தலைவரு பொருளான்' எனவே, நோக்குறுப் பால் உணர்ந்த பொருட்பிழம்பினைக் காட்டுவது மெய்ப்பாடென்பது இதன் கருத்து. இக் கருத்தினாற் 'கவி கண்காட்டும்' எனவுஞ் சொல்லுப. (204)

## நச்சினார்க்கினியர்

**204. உய்த்துணர்.......................டாகும்.**

*இது, மெய்ப்பாடென்னும் உறுப்புக் கூறுகின்றது.*

**(இ-ள்)** அஃதாவது உலகத்தார் உள்ளநிகழ்ச்சி ஆண்டு நிழ்ந்தவாறே புறத்தார்க்குப் புலப்படுவதோராற்றான் வெளிப்படுதல். உய்த்துணர்ச்சி யின்றிச் செய்யுளிடத்து வந்த பொருளானே கண்ணீரரும்பல், மெய்ம் மயிர் சிலிர்த்தன் முதலிய சத்துவம் படுமாறு வெளிப்படச் செய்வது மெய்ப்பாடென்னும் உறுப்பாம். எ-று.

அது தேவருலக முதலியவற்றைக் கூறினுங் கண்டாங்கு அறியச் செய்யுள் செய்தல் செய்யுளுறுப்பென்றார்.

**(எ-டு)**"மையற விளங்கிய மணிமரு ளவ்வாய்தன்
மெய்பெறா மழலையின் விளங்குபூ ணனைத்தரப்
பொலம்பிறை யுள்தாழ்ந்த புனைவினை யுருள்கல
நலம்பெறு கமழ்சென்னி நகையொடு துயல்வர
வுருவெஞ்சா திடைகாட்டு முடைகழ லந்துகி
லரிபொலி கிண்கிணி யார்ப்போவா தடிதட்பப்
பாலோ டலர்ந்த முலைமறந்து முற்றத்துக்
கால்வல்தேர் கையி னியக்கி நடைபயிற்றா

வாலமர் செல்வ னணிசால் பெருவிறல்
போல வருமென் னுயிர்." (கலி.81)

இவை போல்வனவற்றுள் அவ்வாறு காண்க.

'தலைவரு பொருளான்' எனவே நோக்குறுப்பா னுணர்ந்த பொருட்பிழம்பினைக் காட்டுவது மெய்ப்பாடாமென்று கொள்க. (204)

## சிவலிங்கனார்

**உய்த்துணர்.......................டாகும்.**

(இ-ள்) உய்த்துணர்ந்து கொள்ளுமாறில்லாமல் செய்யுளிடத்து வரும் பொருளைக் கேட்ட துணையானே உடம்பின்கண் அப் பொருளால் தோன்றும் உணர்ச்சி வெளிப்படுமாறு அமைப்பது மெய்ப்பாடு என்னும் உறுப்பாம், எ-று.

**506. எண்வகை இயனெறி பிழையா தாகி**
**முன்னுறக் கிளந்த முடிவின தனுவே. (197)**

## இலக்குவனார்

517. It is to have the result already enjoined in eight of ways without fail.

## இளம்பூரணர்

**506. எண்வகை இயனெறி.................ததுவே.**

*என-னின், மெய்ப்பாடாவது உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) அது நகை முதலாகிய எட்டு மெய்ப்பாட்டு நெறியையும் பிழையாதாகி மேற்சொல்லப்பட்ட இலக்கணத்தையுடைத்து என்றவாறு.

அஃதாமாறு மெய்ப்பாட்டியலுட் காண்க. (197)

## பேராசிரியர்

**517. எண்வகை.............ததுவே.**

இஃது, எய்தியது[1] இகந்துபடாமைக் காத்தது.

(இ-ள்) மேற்கூறப்பட்ட மெய்ப்பாடே இது; இதுவும் பிறிதிலக் கணத்தனவென்று கொள்ளற்க என்றவாறு; எனவே,

1. எய்தியது - மெய்ப்பாட்டியலுள் எய்தியது.

"நகையே யழுகை யிளிவரன் மருட்கை
யச்சம் பெருமிதம் வெகுளி யுவகை" (251)

என அவை நந்நான்காமெனவும், மெய்ப்பாட்டியலுட் கூறியவாறெல்லாம் பிறவாற்றான் வேறுபடுவனவுங் கொள்ளப்படு மென்றவாறு. (205)

## நச்சினார்க்கினியர்

**205. எணவகை..................ததுவே.**

உரை இல்லை. (205)

## சிவலிங்கனார்

**எண்வகை................ததுவே.**

(இ-ள்) அம் மெய்ப்பாடு என்பது, எட்டு வகையாக இயலும் முறையில் தவறாதாகி முன்னர் மெய்ப்பாட்டியலிற் கூறப்பட்ட இலக்கண முடிவுகளை யுடையதாம், எ-று.

### 21. எச்சம்

**507. சொல்லொடுங் குறிப்பொடும் முடிவுகொள் இயற்கை
புல்லிய கிளவி எச்சம் ஆகும். (198)**

## இலக்குவனார்

518. *Eccam* is the expression which is wanted to complete the sense of the statement or suggestion which is understood.

## இளம்பூரணர்

**507. சொல்லொடுங்.............ஆகும்.**

*என்-னின், நிறுத்தமுறையானே எச்சவகையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) பிறிதோர் சொல்லொடும் பிறிதோர் குறிப்பொடும் முடிவு கொள்ளும் இயற்கையைப் பொருந்திய செய்யுள் எச்சமாகும் என்றவாறு.

எனவே, சொல்லெச்சம் குறிப்பெச்சமென இருவகையாயின. அது எச்சவியலுட் 'பிரிநிலை வினை' யென்னுஞ் சூத்திரத்துள் (தொல்.சொல். எச்.34) பிரிநிலையென்பது முதலாகச் சொல்லப்பட்ட எண்வகையானும் வருவன சொல்லெச்சமாம். குறிப்பென்றோதப்பட்டது குறிப்பெச்சமாம். (198)

## பேராசிரியர்

**518. சொல்லொடுங்..............மாகும்.**

*இஃது, எச்சங் கூறுகின்றது.*

(இ-ள்) கூற்றினானுங் குறிப்பினானும் முடிக்கப்படும் இலக்கணத்தொடு பொருந்திய கிளவி எச்சமென்னும் உறுப்பாம் என்றவாறு.

'முடிவுகொ ளியற்கை' எனவே, செய்யுளின்கண்ணதன்றிப்[1] பின் கொணர்ந்து முடிக்கப்படுமென்பது பெற்றாம்.

(உ-ம்)''செங்களம் படக்கொன் றவுணர்த் தேய்த்த
செங்கோ லம்பின் செங்கோட் டியானைக்
கழறொடிச் சேஎய் குன்றம்
குருதிப் பூவின் குலைக்காந் தட்டே'' (குறுந்.1)

எனச் செய்யுண் முடிந்தவழியும், 'இவற்றான் பயங் குறையுடையேம் அல்லேமென்று தலைவற்குச் சொன்னாளேல் அது கூற்றெச்சமாம்[2]; என்னை? அவ்வாறு கூறவுஞ் சிதைந்ததின்மையின் தலைமகட்குச் சொன்னாளேல் அது குறிப்பெச்சம்; என்னை? அது காண்பாயாகிற் காணெனத் தலைமகளை இடத்துய்த்து நீக்கிய குறிப்பினளாகி அதுதான் கூறாளாகலின்' என்பது. (206)

## நச்சினார்க்கினியர்

**206. சொல்லொடுங்...............மாகும்.**

*இது, முறையே யெச்சமென்னும் உறுப்புக் கூறுகின்றது.*

(இ-ள்) கூற்றினானுங் குறிப்பினானும் முடிக்கப்படும் இலக்கணத்தொடு பொருந்திய கிளவி யெச்சமென்னும் உறுப்பாம் எ-று.

'முடிவுகொ ளியற்கை' யெனவே செய்யுட்கண்ணதன்றிப் பின் கொணர்ந்து முடித்தல் பெற்றாம்.

(எ-டு)''செங்களம் படக்கொன்...............குலைக்காந் தட்டே.'' (குறுந்.1)

இக் காந்தளால் யாங் குறையுடையமல்ல மெனத் தலைவற்குக் கூறிற் கூற்றெச்சமாம். அக் கூற்றுஞ் செய்யுட்குச் சிதைவின்மையின் அது காண்பாயாகிற் காணெனத் தலைவியை நோக்கி யிடத்துய்த்துக் கூறிற் குறிப்பெச்சமாம்; அவனைக் கூடுகவெனத் தான் கூறாளாகலின். (206)

---

1. செய்யுளில் சொல் இன்றி
2. கூற்றெச்சம் - கூறவந்த கருத்தின் எச்சம். கூறவந்த கருத்தாவது 'இவற்றான் யாங் குறையுடையம் அல்லேம்' என்பது

## சிவலிங்கனார்

**சொல்லொடும்..............மாகும்.**

(இ-ள்) பிறிதோர் சொல்லோடாவது பிறிதோர் குறிப்புப் பொருளினாலாவது முடிக்கப்படும் இலக்கணத்தைப் பொருந்திய சொல்லானது எச்சம் என்னும் உறுப்பாம், எ-று

முடிக்கப்படும் சொல்லோ குறிப்போ செய்யுளில் வாரா என்பது.

உ-ம்: தலைவன் கையுறையாகச் செங்காந்தட் பூவைக் கொண்டு வந்தானாயின் அவனைப் பார்த்து எம் மலையும் செங்காந்தட் பூவை மிகவுடையது எனத் தோழி கூறி அவ்வளவில் நிறுத்தின், 'இப் பூக்களால் யாம் குறையுடையேம் அல்லேம்' எனத் தோழி தலைவனுக்குக் கூறினாளாம். இது கூற்று எச்சம் எனப்படும்.

பகற்குறிக்கண் தலைவியைப் பார்த்து இம் மலையிடத்து இவ்விடம் செங்காந்தட் பூக்களால் சிறந்தது என்று சொல்லி நிறுத்துவாளானால் இவ்விடம் புணர்ச்சிக் குறியிடம்; ஆதலின் இங்கிருக்க எனச் சொல்லி நீங்குவாள் என்பது குறிப்பால் வந்த எச்சம்.

"செங்களம் படக்கொன் றவுணர்த் தேய்த்த
செங்கோ லம்பின் செங்கோட் டியானைக்
கழல்தொடி சேஎய் குன்றம்
குருதிப் பூவின் குலைக்காந் தட்டே" (குறுந்.1)

இப் பாடலில் இவ்விரு கருத்தும் காண்க.

### 22. முன்னம்

**508. இவ்விடத் திம்மொழி இவரிவர்க் குரியவென்**
**றவ்விடத் தவரவர்க் குரைப்பது முன்னம். (199)**

## இலக்குவனார்

519. *Munnam* is to say that this word is proper to this person in this place.

## இளம்பூரணர்

**508. இவ்விடத் திம்மொழி...............முன்னம்.**

*என்-னின், நிறுத்தமுறையானே முன்னமாமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) இவ்விடத்து இம்மொழியை இவர்க்குச் சொல்லத் தகுமெனக் குறித்து அவ்விடத்து அம் மொழியை யுரைப்பது முன்னமாம் என்றவாறு.

எனவே, இடமுங் காலமுமுணர்ந்து கேட்போர்க்குத் தக்கவாறு மொழிதலுஞ் செய்யுளுறுப்பாம் என்றவாறு.[1]

வந்ததுகொண்டு வாராதது முடித்தலென்பதனாற் காலமுங் கொள்க. (199)

## பேராசிரியர்

**519. இவ்விடத் திம்மொழி..................முன்னம்.**

*இது, முன்னமென்று கூறப்பட்ட உறுப்புக் கூறுகின்றது.*

(இ-ள்) யாதோரிடத்தானும் யாதானுமொரு மொழி தோன்றியக்கால் இம் மொழி சொல்லுதற்குரியாரும் கேட்டற்குரியாரும் இன்னாரென்று அறியுமாற்றான் அங்ஙனம் அறிதற்கு ஓரிடம் நாட்டி அவ்விடத்துக் கூறுவார்க்குங் கேட்பார்க்கு மேற்றவுரை செய்யுட்கு ஈடாகச் சொல்லுவது முன்னம் என்றவாறு.

'இவரிவர்க் குரியவென்று' அறிவான் செய்யுட் கேட்டானெனவும், அவ்விடத்து 'அவரவர்க்கு உரைக்க' என்றான் ஆசிரியனெனவுங் கொள்க. என்றென்பது, எனவென்பது போலச் சொல்லினெச்சமாதலும் வினையெச்சமாதலும் உடைமையின் இஃது,

"எனவெ னெச்சம் வினையொடு முடிமே" (தொல்.சொல்.438)

என்பதொரு வினையெஞ்சி நிற்கும். அவ் வினைதான் எச்சமாகலான் உரைப்பதென்னும் வினைகொண்டு முடியுமென்பது.

"யாரிவ னெங்கூந்தற் கொள்வா னிதுவுமோ
ரூராண்மைக் கொத்த படிறுடைத்து" (கலி.89)

என்றக்கால், இம் மாற்றஞ் சொல்லுகின்றாள் தலைவியெனவும், சொல்லப்பட்டான் தலைமகனெனவும், முன்னத்தான் அறியப்படுதலின் இது முன்னவுறுப்பாயிற்று. ஒழிந்தனவற்றிற்கும் இஃதொக்கும். இவையெல்லாம், அகத்திற்கும் புறத்திற்கும் பொதுவாகக் கூறுகின்றானென்பது. (207)

## நச்சினார்க்கினியர்

**207. இவ்விடத் திம்மொழி..................முன்னம்.**

*இது, முன்னமென்கின்ற உறுப்புக் கூறுகின்றது.*

---

1. யார் யாரிடம் கூறியது என்பது செய்யுளில் இல்லையாயினும் கேட்போர் இன்னார் இன்னாரிடம் இவ்விடத்து இக்காலத்துக் கூறியது எனக் குறிப்பான் உணருமாறு செய்யுள் அமைப்பது முன்னமாம்.

**(இ-ள்)** இவ்விடத்துத் தோன்றிய இம் மொழி கூறற்குரியோருங் கேட்டற்குரியோரும் இன்னாரென்று அச் செய்யுட்கண் தோன்றின் அறியாமல் தான் அங்ஙன மறிதற் குரித்தாக நாட்டியதோ ரிடத்தே கூறுவோர்க்குங் கேட்போர்க்கும் ஏற்ற வுரையாகச் செய்யுளுட் கிடத்திக் கூறுவது முன்னம் எ-று.

இவரிவர்க் குரியவென் றறிவான் செய்யுட் கேட்போனெனவும், அவ்விடத் தவரவர்க் குரைக்க வென்றார் ஆசிரியரெனவுங் கொள்க. என்றென்பது ஈண்டு வினையெச்சம்; சொல்லெச்சமன்று. அறியவென வொரு வினை வருவிக்க. அது உரைப்பதை யென்னும் வினைப் பெயரொடு முடியும்.

(எ-டு)"யாரிவ னெங்கூந்தற் கொள்வா னிதுவுமோ
ரூராண்மைக் கொத்த படிறுடைத்து" (கலி. 89)

என்றக்கால் இது கூறுகின்றாள் தலைவி யென்பதூஉங் கூறப்பட்டான் தலைவனென்பதூஉம் முன்னத்தான் உணரப்பட்டவாறு காண்க. இவை அகம் புறமென்னும் இரண்டற்கும் பொது. (207)

## சிவலிங்கனார்

**இவ்விடத்................முன்னம்.**

**(இ-ள்)** இவ்விடத்துக் கூறப்பட்ட இம் மொழி இன்னின்னார்க்கு உரியவாம் என்று அவ்விடத்து அவரவர்க்குச் செய்யுள் கற்போன் குறிப்பான் உணருமாறு அமைப்பது முன்னம் என்னும் உறுப்பாம்.

(உ-ம்)"பூத்த வேங்கை வியன்சினை யேறி
மயிலினம் அகவும் நாடன்
நன்னுதற் கொடிச்சி மனத்தகத் தோனே."

இதில் வேங்கையும் மயிலும் கூறியதால் குறிஞ்சியிடம் என்பதும், கொடிச்சி என்றதால் தலைவி குறிஞ்சி நிலத்தாள் என்பதும், அவள் நாடன் மனத்தகத்தோள் என்பதால் இருவரும் உள்வழி அவன் வரவு உணர்தல் என்னும் தோழியின் மதியுடம்பாடும், தோழி கூற்றுக்குரியது இப் பாடல் என்பதும் ஆகியவை முன்னத்தால் உணரப்படும்.

### 23. பொருள்வகை

**509. இன்பமும் இடும்பையும் புணர்வும் பிரிவும்
ஒழுக்கமும் என்றிவை இழுக்குநெறி யின்றி
இதுவா கித்திணைக் குரிப்பொருள் என்னாது
பொதுவாய் நிற்றல் பொருள்வகை என்ப. (200)**

## இலக்குவனார்

520. *Poruḷ* is that(where in) the pleasure, the pain, the meeting, the separation and the conduct are not violated standing (as they do) common to all without indicating any particular content as enjoined.

## இளம்பூரணர்

**509. இன்பமும் இடும்பையும்.......................என்ப.**

*என்-னின், நிறுத்தமுறையானே பொருள்வகை யாமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) இன்பமும், துன்பமும், புணர்வும், பிரிவும் ஒழுக்கமுமென்று சொல்லப்பட்டவை வழுவுநெறியின்றி இத் திணைக்குரிய பொருள் இப்பொருளென்னாது எல்லாப் பொருட்கும் பொதுவாகி[1] நிற்கும் பொருளே பொருள்வகையாம் என்றவாறு. (200)

## பேராசிரியர்

**520. இன்பமு மிடும்பையும்....................யென்ப.**

*இது, பொருள்வகை கூறுகின்றது.*

(இ-ள்) இன்பமும், துன்பமும், புணர்தலும், பிரிதலும், ஒழுக்கமுமெனப்பட்ட இவை இழுக்காதவாற்றான் இத் திணைக்கு இது பொருளென்று ஆசிரியன் ஓதிய உரிப்பொருளன்றி அவற்றுக்கெல்லாம் பொதுவாகப் புலவனாற் செய்யப்படுவது பொருட்கூறெனப்படும் என்றவாறு.

'வகை' என்றதனாற் புலவன்றான் வகைந்ததே பொருளென்று கொள்க. அஃதன்றிச் செய்யுள் செய்தலாகாதென்பது இதன் கருத்து; அவை,

“கைகவியாச் சென்று கண்புதையாக் குறுகிப்
பிடிக்கை யன்ன பின்னகந் தீண்டித்
தொடிக்கை தைவரத் தோய்ந்தன்று கொல்லோ
நாணொடு மிடைந்த கற்பின் வாணுத
லந்தீங் கிளவிக் குறுமகண்
மென்றோள் பெறனசைஇச் சென்றவென் னெஞ்சே”

(அகம்.9)

---

1 இன்ன திணைக்குரியது இச் செய்யுள் என்பது தெளிவாக இல்லாமல் எல்லாத் திணைக்கும் ஏற்குமாறு நிற்பது பொதுவாகி நிற்றல்.

என்றாற்போலச் செய்யுள் செய்தவன் தானே வகுப்பனவெல்லாங் கோடல்; இது பாலைப்பாட்டினுள் வந்ததாயினும் முல்லை முதலாயவற்றுக்கும் பொதுவாமென்பது. பொதுமையென்பது, எல்லா உரிப்பொருட்கும் ஏற்கப் பல்வேறு வகையாற் செய்தல். (208)

## நச்சினார்க்கினியர்

**208. இன்பமும் இடும்பையும்..................யென்ப.**

*இது, பொருளென்னும் உறுப்புக் கூறுகின்றது.*

(இ-ள்) இன்பமும் இடும்பையும் புணர்வும் பிரிவும் ஒழுக்கமும் என்றிவை யிழுக்குநெறியின்றி - இன்பமும் துன்பமும் புணர்தலும் உலக ஒழுக்கமும் எனப்பட்ட இவை தப்பும் வழியின்றி, இதுவாகித் திணைக்கு உரிப்பொருள் என்னாது - இத் திணைக்குரிய பொருள் இதுவாகவென்று ஆசிரியர் ஓதிய பொருளின்றி, பொதுவாய் நிற்றல் பொருள்வகை என்ப - அவற்றுக்கெல்லாம் பொதுவாகப் புலவனால் செய்யப்படுவது பொருட் கூறெனப்படும் எ-று.

இன்பத் துன்பங் கூறுதலிற் புறத்திற்குங் கொள்க. ஒழுக்கம் இரண்டற்குங் கொள்க.

'வகை'யென்றதனாற் புலவன்றான் வகைந்ததே பொருளென்று கொள்க. அதுவின்றிச்[1] செய்யுள் செய்தலாகாதென்பது கருத்து.

(எ-டு)"கைகவியாச் சென்று கண்புதையாக் குறுகிப்
பிடிக்கை யன்ன பின்னகந் தீண்டித்
தொடிக்கை தைவரத் தோய்ந்தன்று கொல்லோ
நாணொடு மிடைந்த கற்பின் வாணுதல்
அந்தீங் கிளவிக் குறுமகள்
மென்றோள் பெறநசைஇச் சென்றவென் னெஞ்சே"

(அகம். 9)

என்றாற் போலப் புலவன் வகுப்பனவாம். இப் பாட்டுப் பாலையேனும் முல்லை முதலியனவற்றிற்கும் இப் பொருள் பொதுவாம். பொதுமை யென்றது எல்லா வுரிப்பொருட்கு மேற்றுப் பலவேறு வகையவாகச் செய்தல். இவ்வாறு வருவன புறப்பொருள் கூறிய வற்றுள்ளுங் காண்க. (208)

## சிவலிங்கனார்

**இன்பமும்..................எனப.**

(இ-ள்) இன்பமும் துன்பமும் புணர்வும் பிரிவும் ஒழுக்கமும் என்ற இவை தவறுமுறை யில்லாமல் இத் திணைக்கு இதுதான் உரிப்பொருள்

---

1. அதுவின்றி - வகைப்படுத்தலின்றி

என்று கூறப்படாமல் எல்லாத் திணைக்கும் பொதுவாய் நிற்றல் பொருள்வகை என்பர், எ-று.

களவு கற்பு ஒழுக்கங்களுக்குரிய திணைப்பொருள்கள் செய்யுளில் வெளிப்படையாகவோ குறிப்பாகவோ அமைக்கப்படும். அவ்வாறில்லாமல் செய்யுளிற் கூறப்பட்ட பொருள் எல்லாத் திணைக்கும் உரிய என்னுமாறு பொதுவாய் அமைப்பதும் செய்யுட் பொருளாம். அது மற்றைச் சிறப்புப் பொருளாக இல்லாததால் இப் பொதுப்பொருள் பொருள்வகை எனப்பட்டது.

"கைகவியாச் சென்று கண்புதையாக் குறுகிப்
பிடிக்கை யன்ன பின்னகந் தீண்டித்
தொடிக்கை தைவரத் தோய்ந்தன்று கொல்லோ
நாணொடு மிடைந்த கற்பின் வாணுதல்
அந்தீங் கிளவிக் குறுமகள்
மென்றோள் பெறநசைஇச் சென்றவென் னெஞ்சே."

(அகம். 9)

இவ் வரிகள் எத்திணைக்குரியன எனக் கூற இயலாது. இவ் வகைப்பாடல் பாலைத்திணையின்பாற் படினும் முல்லை முதலிய திணைகளிலும் கூறப்படும்.

### 24. துறை

**510. அவ்வவ[1] மாக்களும் விலங்கும் அன்றிப்
பிறவவண் வரினுந் திறவதின் நாடித்
தத்தம் இயலான்[2] மரபொடு முடியின்
அத்திறந் தானே துறையெனப் படுமே. (201)**

## இலக்குவனார்

521. *Thurai* is said to be the particular theme where is found grouping of the people and the animals, which ever may occur, under particular division of a *thinai* in the traditional way.

## இளம்பூரணர்

**510. அவ்வவ மாக்களும்...................படுமே.**

*என்-னின், நிறுத்தமுறையானே துறையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

---

1. **அவ்வம்** மாக்களும் - பேரா. நச். பாடம்
2. **இயலின்** - பேரா. பாடம்

(இ-ள்) அகப்பொருளாகிய ஏழு பெருந்திணைக்கும் புறப் பொருளாகிய ஏழு பெருந்திணைக்குமுரிய மாந்தரும் பரந்துபட்ட மாவும் புள்ளும், உம்மையால் மரமுதலாயினவும், பிறவவண் வரினுமென்றதனால் நிலம், நீர், தீ, வளி முதலாயினவும் செய்யுட்கண் வருமிடத்துத் திறப்பாடுடைத்தாக ஆராய்ந்து தத்தமக்கேற்ற பண்போடும் பொருந்திய மரபோடும் முடியின், அவ்வாறு திறப்பாடுடைத்தாய்[1] வருவது துறை[2] யென்று கூறப்படும் என்றவாறு. (201)

## பேராசிரியர்

**521. அவ்வம் மக்களும்........................படுமே.**

*இது, துறையென்னு முறுப்புணர்த்துகின்றது.*

(இ-ள்) ஐவகை நிலத்திற்கும் உரியவெனப்படும் பல்வேறு வகைப்பட்ட மக்களும் மாவும் புள்ளும் ஓதி வந்தவாறன்றிப் படைத்துச் செயினும் அவ்வத் திணைக்கேற்ற இலக்கணமும் வரலாற்று முறைமையும் பிறழாமைச் செய்யின் அது மார்க்க மெனப்படும் என்றவாறு.

மார்க்க மெனினும் துறையெனினும் ஒக்கும்.

"ஊர்க்கா னிவந்த பொதும்பரு ணீர்க்கால்"

என்னுங் கலியினுள்(56),

"கொழுநிழன் ஞாழன் முதிரிணர் கொண்டு
கழும முடித்துக் கண்கூடு கூழை"

என நெய்தற் றலைமகள் போலக் கூறி, அவளை மருதநிலத்துக் கண்டான்போல,

"ஊர்க்கா னிவந்த பொதும்பருள்"

எனவும் சொல்லிப் பின் குறிஞ்சிப் பொருளாகிய புணர்த லுரிப் பொருளான் முடித்தான்; இவ்வாறு மயங்கச் செயினுங் குறிஞ்சித் துறைப்பாற்படச் செய்தமையின் அத் துறையுறுப்பான் வந்ததென்பது. இதுவும் மேலைப் பொருள்வகைபோலப் புலவராற் செய்துகொள்ளப் படுவதாகலான் அதற்குப் பின் வைத்தா னென்பது. மற்று,

"எந்நில மருங்கிற் பூவும் புள்ளும்" (19)

என்பதனான், இது முடியாதோவெனின், அது கருப்பொருண் மயங்குதற்குக் கூறினான்; இது, மக்களேயன்றித் தலைவனுந் தலைவியும்

1. திறப்பாடு - தனித்தனி கூறு.

2. ஒரு திணைக்குரிய தலைவன் தலைவியரேயன்றித் தலைவி ஒரு நிலத்துக்குரியனாகவும் கூறப்படும் கருப்பொருள் அவள் நிலக் கருப்பொருளன்றி வேற்றுநிலக் கருப்பொரு ளாகவும், உரிப்பொருளும் அவள் நிலத்துக்குரியதன்றி வேற்று நிலத்துக் குரிய தாகவும் ஒரு செய்யுளில் வரின் உரிய பொருளடிப்படையில் அதனை ஒரு துறைப்பாற் படுத்துவதே துறையெனப்படும்

மயங்குமாறு நான்கு திணையும் ஒன்றொன்றனொடு மயங்குமாறுங் கூறி அது புலவராற் செய்துகொள்ளுவதோர் உறுப்பெனவும் ஓதிவந்த இலக்கணத்ததன்றாயினும் அது பெறுமெனவுங் கூறினானென்பது. (209)

## நச்சினார்க்கினியர்

**209. அவ்வ மாக்களும்..................படுமே.**

*இது, துறையென்னும் உறுப்புக் கூறுகின்றது.*

(இ-ள்) அவ்வ மாக்களும் விலங்கும் அன்றி - ஐவகை நிலத்திற்கும் உரிய எனப்படும் பல்வேறு வகைப்பட்ட மக்களும் மாவும் புள்ளும் ஓதிவந்தவாறன்றி, பிற திறவதின் நாடியவண் வரினும் - பிறவற்றைத் திறவிதாக ஆராய்ந்த செய்யுட்கண்ணே புலவன் படைத்துச் செய்யினும் ஒக்கும்...............

(எ-டு)"ஊர்க்கா னிவந்த பொதும்பருள் நீர்க்காற்
கொழுநிழன் ஞாழன் முதிரிணர் கொண்டு
கழும முடித்துக் கண்கூடு கூழை
சுவன்மிசைத் தாதொடு தாழ வகன்மதி
தீங்கதிர் விட்டது போல முகனமர்ந்
தீங்கே வருவாள் இவள்யார்கொ லாங்கேயோர்
வல்லவன் றையஇய பாவைகொல் நல்லா
ருறுப்பெலாங் கொண்டியற்றி யாள்கொல் வெறுப்பினால்
வேண்டுருவங் கொண்டதோர் கூற்றங்கொல் ஆண்டார்
கடிதிவளைக் காவார் விடுதல் கொடியியற்
பல்கலைச் சில்பூங் கலிங்கத்த ளீங்கிதோர்
நல்கூர்ந்தார் செல்வ மகள்." (கலி. 56)

இதனுள் ஞாழல் முடித்தாளென நெய்தற்றலைவி போலக் கூறி, "ஊர்க்கா னிவந்த பொதும்பருள்" என்றதனான் மருதத்தத்துக் கண்டான் போலக் கூறிப் பின் குறிஞ்சிப் பொருளாகிய புணர்தல் நிமித்தம் உரிப்பொருளாக முடித்தான். இவ்வாறு மயங்கலுங் குறிஞ்சித் துறைப்பாற் பட்ட துறையுறுப்பான் வந்ததென்க.

இது ஓதிய இலக்கணமன்றாயினும் முற்கூறிய பொருள்வகை போற் புலவர் செய்ததோர் உறுப்பு; இதுவுங் கொள்ளப்பெறு மென்றார். இது புறத்திற்கும் ஒக்கும். (209)

## சிவலிங்கனார்

**அவ்வ...............படுமே.**

(இ-ள்) குறிஞ்சி முதலிய திணைகளுக்குரிய மக்களும் விலங்கும் புள்ளும் முதலியனவும் முறையாக வந்து முடியும் ஒருவகையன்றி, வெவ்வேறு திணைகளுக்குரிய மக்களும் விலங்கு புள் முதலியனவும் வெவ்வேறு திணைகளிற் கலந்து (மயங்கி) வந்து முடியும் ஒருவகை

வரினும் தத்தம் இலக்கணத்தானும் மரபானும் முடிவு பெறுமானால் அத்திற முடிபு துறை எனப்படும் உறுப்பாம், எ-று.

எனவே, துறை என்பது அவ்வத் திணைக்குரிய மக்களும் பிறவும் அவ்வத் திணைக்கே வந்து உரிப்பொருள் தருவதும் திணைகளில் மயங்கி வந்து உரிப்பொருள் தருவதும் என இருவகைப்படும் என்றாராயிற்று.

"எந்நில மருங்கிற் பூவும் புள்ளும்" என்னும் சூத்திரத்திற் கூறப்பட்டது கருப்பொருள் மயக்கம். இச் சூத்திரத்திற் கூறப்பட்ட மயக்கம் தலைவன் தலைவியரின் இடமயக்கமும் பிற விலங்கு முதலிய வற்றின் மயக்கமும் ஆம். முறையாக வந்த துறைக்கு உதாரணம் அகத் திணையியல் முதலியவற்றிற் காட்டப்பட்டன.

தலைமக்கள் மயங்கும் மயக்கத்துக்கு "ஊர்க்கால் நிவந்த" என்னும் கலிப்பாட்டில்(56) காண்க. அதில், நெய்தல் தலைவி கூறி, அவளை மருதநிலத்துக் கண்டானாகக் கூறிப் பின்னர்க் குறிஞ்சிநில வொழுக்க மாகிய புணர்தல் உரிப்பொருளால் முடித்திருப்பது காணலாம்.

### 25. மாட்டு

**511. அகன்றுபொருள் கிடப்பினும் அணுகிய நிலையினும்**
**இயன்றுபொருள் முடியத் தந்தனர் உணர்த்தல்[1]**
**மாட்டென மொழிப பாட்டியல் வழக்கின். (202)**

## இலக்குவனார்

522. ***Māttu*** is said to **be in** poetical composition the manner of linking the statements in such a way as to give con**nected** meanings which occur either in lines standing apart or in lines close together.

## இளம்பூரணர்

**511. அகன்றுபொருள்..............வழக்கின்.**

*என்-னின், நிறுத்தமுறையானே மாட்டேறு உணர்த்துதல் நுதலிற்று.*
**(202)**

இது சூத்திரத்தாற் பொருள் விளங்கும்.

## பேராசிரியர்

**522. அகன்று பொருள்..................வழக்கின்.**

1. உரைத்தல் - நச். பாடம்

*இது, மாட்டென்னும் உறுப்புணர்த்துகின்றது.*

(இ-ள்) பொருள் கொள்ளுங்கால் அகன்று பொருள் கிடப்பச் செய்யினும் அணுகிக் கிடப்பச் செய்யினும் இருவகையானுஞ் சென்று பொருள் முடியுமாற்றாற் கொணர்ந்துரைப்பச் செய்தலை மாட்டென்னும் உறுப்பென்று சொல்லுவர் செய்யுள் வழக்கினுள் என்றவாறு

இதுவும் நால்வகைப்[1] பொருள்கோளன்றிப் புலவரது வேறு செய்கை; அது,

> "முட்டாச் சிறப்பிற் பட்டினம் பெறினும்
> வாரிருங் கூந்தல் வயங்கிழை யொழிய
> வாரேன் வாழிய நெஞ்சே" (பட்டினப். 218-20)

என நின்றது. பின்னர்,

> "வேலினும் வெய்ய கானமவன்
> கோலினுந் தண்ணிய தடமென் றோளே" (பட்டினப்.300-1)

எனச் சேய்த்தாகச் சென்று பொருள்கோடலின் அஃது அகன்று பொருள் கிடப்பினும் இயன்று பொருண்முடியத் தந்து உரைத்ததாம்.

> "திறந்திடுமின் றீயவை பிற்காண்டு மாத
> ரிறந்துபடிற் பெரிதா மேதம்" (முத்தொள்.42)

என்பது, அணுகிய நிலையெனப்படும். பிறவுமன்ன; மாட்டுதலென்பது கொண்டுவந்து கொளுத்துதல். (210)

## நச்சினார்க்கினியர்

**210. அகன்று பொருள்..............வழக்கின்.**

*இது மாட்டென்னும் உறுப்புக் கூறுகின்றது. மாட்டுதலாவது கொண்டுவந்து கொளுத்துதல்.*

(இ-ள்) அகன்று பொருள் கிடப்பினும் அணுகிய நிலையினும் - பொருள் கொள்ளுங்கால் அகன்று பொருள் கிடப்பச் செய்யினும், அணுகிக் கிடப்பச் செய்யினும், இயன்று பொருள் முடியத் தந்தனர் உரைத்தல் - இவ் விரு வகையானும் சென்று பொருள் முடியுமாற்றாற் கொண்டுவந்து கூட்டியுரைப்பச் செய்தல், மாட்டு என மொழிப பாட்டு இயல் வழக்கின் - மாட்டென்னும் உறுப்பென்று கூறுவர் செய்யுள் வழக்கினுள் எ-று.

இது மொழிமாற்றுப் பொருள்கோளன்றிப் புலவர் வேறு செய்வதோர் செய்கை. இது பல பொருட்டொடராற் பலவடியான் வரும்

---

1. நிரல்நிறை, சுண்ணம், அடிமறி, மொழிமாற்று

ஒரு செய்யுட்கண்ணும், பல செய்யுளைப் பல பொருட்டொடரால் ஒரு கதையாகச் செய்யுமிடத்தும் வரும்.

முருகாற்றுப்படையுள்,

(எ-டு)"மால்வரை நிவந்த சேணுயர் வெற்பிற்
கிண்கிணி கவைஇய வொண்செஞ் சீறடிக்
கணைக்கால் வாங்கிய நுசுப்பிற் பணைத்தோட்
கோபத் தன்ன தோயாப் பூந்துகில்
பல்காசு நிரைத்த சில்கா ழல்குற்
கைபுனைந் தியற்றாக் கவின்பெறு வனப்பி
னாவலொடு பெயரிய பொலம்புனை யவிரிழைச்
சேணிகந்து விளங்குஞ் செயிர்தீர் மேனித்
துணையோ ராய்ந்த இணையீ ரோதிச்
செங்கால் வெட்சிச் சீறித ழிடையிடுபு
பைந்தாட் குவளைத் தூவிதழ் கிள்ளித்
தெய்வ வுத்தியொடு வலம்புரி வயின்வைத்துத்
திலகந் தைஇய தேங்கமழ் திருநுதன்
மகரப் பகுவாய் தாழமண் ணுறுத்துத்
துவர முடித்த துகளறு முச்சிப்
பெருந்தண் சண்பகஞ் செரீஇக் கருந்தகட்டு
உளைப்பூ மருதி னொள்ளிணை ரட்டிக்
கிளைக்கவின் றெழுதரு கீழ்நீர்ச் செவ்வரும்பு
இணைப்புறு பிணையல் வளைஇத் துணைத்தக
வண்காது நிறைந்த பிண்டி யொண்டளிர்
நுண்பூ ணாகந் திளைப்பத் திண்காழ்
நறுங்குற டுரிஞ்சிய பூங்கேழ்த் தேய்வை
தேங்கமழ் மருதிணர் கடுப்பக் கோங்கின்
குவிமுகி ழிளமுலைக் கொட்டி விரிமலர்
வேங்கை நுண்டா தப்பிக் காண்வர
வெள்ளிற் குறுமுறி கிள்ளுபு தெறியாக்
கோழி யோங்கிய வென்றடு விறற்கொடி
வாழிய பெரிதென் றேத்திப் பலருடன்
சீர்திகழ் சிலம்பகஞ் சிலம்பப் பாடிச்
சூரர மகளி ராடுஞ் சோலை
மந்தியு மறியா மரம்பயி லடுக்கத்துச்
சுரும்பு மூசாச் சுடர்ப்பூங் காந்தள்
பெருந்தண் கண்ணி மிலைந்த சென்னியன்
........................ பார்முதிர் பனிக்கடல்." (முருகு.)

இதனுள், அடிமுதல் மேனியீறா யுள்ளவற்றையுடைய சூரர மகளிர் பலருடனே கிள்ளி, இடையிடுபு, வைத்து, பண்ணி, செரீஇ, இட்டு, வளைஇ, திளைப்ப, கொட்டி, அப்பி, தெறியா, ஏத்தி, பாடி, ஆடும் வெற்பில் அடுக்கத்துச் சோலையிற் காந்தட்கண்ணி மலைந்த சென்னியனென அகன்றும் அணுகியும் மாட்டியவாறுணர்க. இப் பாட்டும் பிற பாட்டுகளும் இவ்வாறே மாட்டுறுப்பு வருமாறுணர்க.

"ஆரிய மன்னர் பறையின்"

என்பதுமது.

இனிப் பல செய்யுட்கண் வருமாறு சிந்தாமணியுள் யாங் கூறிய வுரைகள் பலவற்றானு முணர்க.

அருமையும் பெருமையும் உடையவாய்ப் பரந்த சொற்றொடர்ந்து பொருள் தருவதோர் இன்பம் நோக்கிச் சான்றோர் இம் மாட்டிலக் கணமே யாண்டும் பெரும்பான்மை வரச் செய்யுள் செய்தலிற் பின் தொடர்நிலைச் செய்யுள் செய்தவர்களும் இம் மாட்டிலக்கணமே யாண்டும் வரச் செய்யுள் செய்தார். இதுவும் பொருள்வகைபோற் புலவர் செய்துகொண்ட தாயிற்று. (210)

## சிவலிங்கனார்

**அகன்று......................வழக்கின்.**

(இ-ள்) ஒரு பொருள் முடிபு அகன்று கிடப்பினும் அணிமையில் இருப்பினும் அதற்கேற்பச் சொற்களை - சொற்றொடர்களைக் கொண்டு வந்து பொருள் முடியுமாறு **சேர்த்துச்** சொல்வது மாட்டு எனும் செய்யுள் உறுப்பு எனப் பாட்டியல் **வழக்கில்** கூறுவர், எ-று.

இது பொருள்**கோளன்று. எச்சமுடிபு**களைப்பற்றியது. **பத்துப்** பாட்டிற்கு நச்சினார்க்கினியர் எழுதிய **வுரை**யில் அவர் எச்சங்களையும் எழுவாய் பயனிலைகளையும் முன் பின்னான அடிகளிலிருந்து தந்து முடிக்குமாற்றான் உணர்க.

**மாட்டும் எச்சமும் இன்றியும் வரும்**

**512. மாட்டும் எச்சமும் நாட்டல் இன்றி**
**உடனிலை மொழியினுந் தொடைநிலை[1] பெறுமே.**
**(203)**

## இலக்குவனார்

523. Without setting *māttu* and *eccam* the poetical compositions have the manner of being continuous in narration.

## இளம்பூரணர்

**512. மாட்டும் எச்சமும்..................பெறுமே.**

1. தொடர்நிலை - பேரா. நச். பாடம்

இது சூத்திரத்தாற் பொருள் விளங்கும். (203)

## பேராசிரியர்

**523. மாட்டு மெச்சமு............பெறுமே.**

*இது, மேற்கூறியவற்றுள் ஒரு சாரனவற்றுக்குப் புறனடை.*

(இ-ள்) மேற்கூறிய எச்சமும் மாட்டும் இன்றியும் அச் செய்யுளுட் கிடந்தவாறே அமையச் செய்யவும் பெறும் செய்யுள் என்றவாறு.

எச்சமும் மாட்டுமாம் என்னாது, மாட்டு முற்கூறிய தென்னை யெனின், எச்சம் முதலாகிய ஐந்து உறுப்பும் இவ் விதி பெறுமென்று கோடற்கு எதிர்சென்று தழீஇயினா னென்பது.

(உ-ம்) "வாரா ராயினும் வரினு மவர்நமக்
கியாரா கியரோ தோழி நீர
நீலப் பைம்போ துளரிப் புதல
பீலி யொண்பொறிக் கருவிளை யாட்டி
நுண்மு ளீங்கைச் செவ்வரும் பூழ்த்த
வண்ணத் துய்ம்மல ருதிரத் தண்ணென்
றின்னா தெறிதரும் வாடையொ
டென்னா யினள்கொ லென்னா தோரே" (குறுந்.110)

என்பது, எச்சமின்றி வந்தது.

"தாமரை புரையுங் காமர் சேவடி" (குறுந்.கடவுள்)

என்பது, முன்னமின்றி வந்தது.

"மருந்தெனின் மருந்தே வைப்பெனின் வைப்பே" (குறுந்.71)

என்பது, பொருளின்றி வந்தது.[1]

"ஈயற் புற்றத் தீர்ம்புறத் திறுத்த" (அகம்.8)

என்பது, துறைவகையின்றி வந்தது.

"யானே யீண்டை யேனே" (குறுந்.54)

என்பது, மாட்டின்றி வந்தது.

இடைநின்ற மூன்றினை இலேசினாற் கொண்டு இரண்டினை எடுத்தோதினான், இவை இரண்டும் அவற்றது துணை இன்றியமையாச் சிறப்பினவல்ல வென்றற்கென்பது. (211)

## நச்சினார்க்கினியர்

**211. மாட்டும் எச்சமும்..................பெறுமே.**

---

1. பொருள் - பொருள்வகை

*இது, எய்தியது விலக்கிற்று.*

(இ-ள்) தொடர்நிலை - முற்கூறிய இருவகைத் தொடர்நிலைச் செய்யுள், மாட்டும் எச்சமும் நாட்டலின்றி - முற்கூறிய மாட்டும் எச்சங்களும் நிறுத்தலின்றி, உடனிலை மொழியினும் பெறும் - அச் செய்யுட் கிடந்தவாறே அமையச் செய்யினும் செய்யுள் தன்மையைப் பெறும் எ-று.

(எ-டு) "முட்டாச் சிறப்பிற் பட்டினம் பெறினும்
வாரிருங் கூந்தல் வயங்கிழை யொழிய
வாரேன் வாழிய நெஞ்சே."

"வேலினும் வெய்ய கானமவன்
கோலினுந் தண்ணிய தடமென் றோளே." (குறுந்.54)

அகன்று கிடந்து மாட்டின்றி வந்தது.

"யானே யீண்டை யேனே"

என்னும் பாட்டு அணுகி மாட்டின்றி வந்தது.

சிந்தாமணியுள் மாட்டும் எச்சமுமின்றி யுடனிலையாயமைந்தன பலவும் யாம் கூறிய வுரையா னுணர்க.

எச்சமும் மாட்டும் என்னாத முறைப் பிறழ்ச்சியானே எச்ச முதலிய நான்குறுப்புமின்றி அச் செய்யுள் வரப்பெறும் என்று கொள்க.

(எ-டு) "வாரா ராயினும் வரினு மவர்நமக்
கியாரா கியரோ தோழி நீர
பீலி யொண்பொறிக் கருவிளை யாட்டி
நீலப் பைம்போ துளரிப் புதல
நுண்மு ளீங்கைச் செவ்வரும் பூழ்த்த
வண்ணத் துய்ம்மல ருதிரத் தண்ணென்
றின்னா தெறிதரும் வாடையோ
டென்னா யினள்கொ லென்னா தோரே." (குறுந்.110)

இது எச்சமின்றி வந்தது.

"தாமரை புரையுங் காமர் சேவடி" (குறுந்.கடவுள் வாழ்த்து)

இப் பாட்டு முன்னமின்றி வந்தது.

"மருந்தெனின் மருந்தே வைப்பெனின் வைப்பே" (குறுந்.71)

இப் பாட்டுப் பொருளின்றி வந்தது.

"ஈயற் புற்றத்து" (அகம்.8)

என்னும் பாட்டுத் துறைவகையின்றி வந்தது.

மாட்டும் எச்சமுமெடுத்தோதினார், முன்னமும் பொருளுந் துறை வகையும்போல இன்றியமையாச் சிறப்பின வல்ல வென்றற்கு. (211)

**சிவலிங்கனார்**

**மாட்டும் எச்சமும்..............பெறுமே.**

(இ-ள்) மாட்டுறுப்பும் எச்சவுறுப்பும் இல்லாமலும் செய்யுள் கிடந்தவாறே அமையச் செய்யவும் பெறும் செய்யுள், எ-று.

**26. வண்ணம்**

**513. வண்ணந் தாமே[1] நாலைந் தென்ப. (204)**

**இலக்குவனார்**

524. *Varnam* is said to be twenty.

**இளம்பூரணர்**

**513. வண்ணந்..............தென்ப.**

*என்-னின், இனி நிறுத்த முறையானே வண்ணமாமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) வண்ணமாவன இருபதாம் என்றவாறு.

அவற்றின் பெயர் வருகின்ற சூத்திரத்தாற் காட்டுதும். (204)

**பேராசிரியர்**

**524. வண்ணந்.......................தென்ப.**

*இது, முறையானே இறுதி நின்ற வண்ணம் இத்துணைப் பகுதித் தென்கின்றது.*

(இ-ள்) வண்ணம் இருபது வகைப்படும் என்றவாறு.

வண்ணமென்பது, சந்தவேறுபாடு நூறும் பலவுமாகி வேறுபடினும் அவை ஈண்டடங்கு மென்பதூஉம், அவ் வேறுபாடெல்லாஞ் சந்த வேற்றுமை செய்யாவென்பதூஉங் கூறியவாறு. அது நுண்ணுணர் வுடையார்க்குப் புலனாமென்பது. (212)

**நச்சினார்க்கினியர்**

**212. வண்ணந் தானே................தென்ப.**

1. தானே - நச். பாடம்

*இது, முறையே வண்ணம் இத்தனை பகுதித்து என்கின்றது.*

(இ-ள்) வண்ணந்தாம் இருபதென்று கூறுவர் புலவர் எ-று.

'தானே' யென்றார், அவை நூறும் பலவுமாக வேறுபடக் கொள்ளினும் இவ் விருபதின்கண்ணே யடங்கும் வேறு சந்தவேற்றுமை செய்யாவென்றற்கு. அது நுண்ணுணர்வுடையோர்க்குப் புலனா மென்றுணர்க. (212)

**சிவலிங்கனார்**

**வண்ணந்.............................என்ப.**

(இ-ள்) வண்ணம் என்னும் உறுப்பு இருபது என்பர், எ-று.

**514. அவைதாம்,**
**பாஅ வண்ணம் தாஅ வண்ணம்**
**வல்லிசை வண்ணம் மெல்லிசை வண்ணம்**
**இயைபு வண்ணம் அளபெடை வண்ணம்**
**நெடுஞ்சீர் வண்ணம் குறுஞ்சீர் வண்ணம்**
**சித்திர வண்ணம் நலிபு வண்ணம்**
**அகப்பாட்டு வண்ணம் புறப்பாட்டு வண்ணம்**
**ஒழுகு வண்ணம் ஒரூஉ வண்ணம்**
**எண்ணு வண்ணம் அகைப்பு வண்ணம்**
**தூங்கல் வண்ணம் ஏந்தல் வண்ணம்**
**உருட்டு வண்ணம் முடுகு வண்ணமென்று**
**ஆங்கென[1] மொழிப அறிந்திசி னோரே.** **(205)**

**இலக்குவனார்**

525. Those are
*pāa vaṇṇam , thāa vaṇṇam, vallisai vaṇṇam, mellisai vaṇṇam, iyaipu vaṇṇam, aḷapedai vaṇṇam, neduñjīr vaṇṇam, kuṟuñjīr vaṇṇam, siththira vaṇṇam, nalipu vaṇṇam, ahappattu vaṇṇam, puṟappāttu vaṇṇam, oḻuku vaṇṇam, orūu vaṇṇam, eṇṇu vaṇṇam, ahaippu vaṇṇam, thūṅgal vaṇṇam, ēnthal vaṇṇam, uruttu vaṇṇam, muduku vaṇṇam* as said to be by the learned.

1. ஆங்கன மொழிப - பேரா. பாடம், ஆங்ஙன மறிப - நச். பாடம்

## பி.இ.நூ.

**இ.வி. 757**

வண்ணந் தானே நாலைந்து; அவைதாம்
பாஅவண்ணம்............அறிந்திசி கினோரே.

(தொல்காப்பியச் சூத்திரமே)

**வீர. 142**

மெல்லிசை ஏந்தல் ஒழுகுருட் டெண்ணொரு வேமுடுகு
வல்லியல் பாவகப் பாட்டு நலிவகைப் போடியையு
சொல்லிய சித்திரம் தரவு புறப்பாட் டளபெடையும்
வல்லிசை தூங்கல் நெடுஞ்சீர் குறுஞ்சீர் எனஇவையே.

**தொன். 250**

வண்ணம் என்ப வலிமெலி இடைஒழுகு
எண்ணுருட் டெனமுடுகு ஏந்தல் தூங்கல்
அகைப்புப் புறப்பாட்டு அகப்பாட்டு அளபு
பாவு நலிவு தரவு ஒரூஉ
குறில்நெடில் சித்திரம் கூறுபா டிருபதே.

## இளம்பூரணர்

**514. அவைதாம்......................னோரே.**

*என்-னின், வண்ணத்திற்குப் பெயர் கூறுதல் நுதலிற்று.*

இது சூத்திரத்தாற் பொருள் விளங்கும். (205)

## பேராசிரியர்

525. **அவைதாம்..................னோரே.**

*இது, மேற்கூறப்பட்ட வண்ணங்களது பெயர் வேறுபாடு கூறுகின்றது.*

(இ-ள்) மேற்சொல்லிய நாலைந்து வண்ணமும் இவ் விருபது பெயர் வேறுபாட்டினவென்று சொல்லுப அவற்றை உணர்ந்த ஆசிரியர் என்றவாறு.

இது, முறையாயினவா றென்னையெனின், இது வரலாற்று முறைமையென்றற்கு 'ஆங்கன மொழிப வறிந்திசினோர்' என்றா னென்பது. அவை யாமாறு சொல்லுகின்றான். (213)

## நச்சினார்க்கினியர்

**213. அவைதாம்...............னோரே.**

*இது, மேற்கூறப்பட்ட வண்ணங்களினது பெயர் வேறுபாடு கூறு;கின்றது.*

(இ-ள்) முற்கூறிய நாலைந்தும் அவ் விருபது பெயர் வேறு..........
(213)

## சிவலிங்கனார்

**அவைதாம் பாஅ....................னோரே.**

(இ-ள்) அவ் வண்ணங்கள் பாஅவண்ணம் முதலாக முடுகு வண்ணம் ஈறாக இருபதென்று அறிந்தோர் மொழிவர், எ-று.

**பாஅவண்ணம்**

**515. அவற்றுட்**
**பாஅ வண்ணம்**
**சொற்சீர்த் தாகி நூற்பாற் பயிலும். (206)**

## இலக்குவனார்

526. Of them

*Pāa vaṇṇam* is that which has the detached foot (sir) occurring in the verse of the grammar.

## பி.இ.நா.

**மு.வீ.யா.ஒ.35**

நூற்பா வுரைத்து வருவன பாவே.

## இளம்பூரணர்

**515. அவற்றுட்**
**பாஅ................பயிலும்.**

*என்-னின், பாவண்ணமாமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) பாஅ வண்ணமாவது சொற்சீரடியாகி நூலின்கட்[1] பயின்று வரும் என்றவாறு.

"அ இ உஅம் மூன்றுஞ் சுட்டு". (தொல்.எழுத்து.நூன்மரபு,31)

"கொல்லே ஐயம் எல்லே இலக்கம்" (தொல்.சொல்.இடை.20)

என வரும். (206)

---

1. நூல் - இலக்கணநூல் சூத்திரங்கள் யாவும் பாஅவண்ணத்தின் பாற்படும்.

## பேராசிரியர்

**526. அவற்றுட்.......................பயிலும்.**

*இது, நிறுத்த முறையானே பாஅவண்ண முணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) பாஅ வண்ணமென்பது, நூற்பா வண்ணம் என்றவாறு.

எற்றுக்கு? 'நூற்பாற் பயிலும்' என்றமையின், இது சொற் சீரடித்தாகி வருமென்பது. இதனுட் 'பயிலும்' எனவே, அந் நூற்பாவினு ளல்லது அகவலுள்[1] இத்துணைப் பயிலாதென்பது; இது,

"வடவேங்கடந் தென்குமரி" (தொல்.பாயிரம்)

எனவும்,

"எழுத்தெனப் படுப அகரமுத
னகர விறுவாய் முப்பஃ தென்ப" (தொல்.எழுத்து.1)

எனவும்,

"அவற்றுள், அஇஉ
எஒ வென்னு மப்பா லைந்தும்" (தொல்.எழுத்து.3)

எனவும் பயின்று வரும்.

"பெரியகட் பெறினே" (புறம். 235)

என்பது சொற்சீராகி அகவலுட் பயிலாது வந்தது. சொற்சீரடி யென்னாது 'சொற்சீர்' என்றான், அடியொடு தொடராதுஞ் சொற்சீர் வருமாதலி னென்பது, இவை,

"நன்றுபெரி தாகும்" (தொல்.சொல்.உரி.343)

என்றாற்போல வேறாகி நிற்பன. கலியுள்ளும் பரிபாடலுள்ளுஞ் சொற்சீர் வருமென மேற்கூறினானாகலின் அவற்றுள்ளுஞ் சந்தவேற்றுமைப் பட்டன பாஅ வண்ணமே யாமென்பது. (214)

## நச்சினார்க்கினியர்

**214. அவற்றுள் பாஅ.......................பயிலும்.**

உரை இல்லை.

## சிவலிங்கனார்

**அவற்றுட் பாஅ.......................பயிலும்.**

---

1. அகவல் - ஆசிரியப்பா, ஆசிரியப்பாவிலும் சொற்சீரடி வரும் ஆதலின் இவ்வாறு கூறினார்.

(இ-ள்) அவற்றுள் பாஅ வண்ணம் என்பது இலக்கண நூலில் சொற்சீரடி யுடையதாகிச் சூத்திரம் பயின்று வரும், எ-று.

'அவைதாம், அவற்றுள்' முதலியன சொற்சீராகி வரும் சூத்திரங் களைக் காண்க.

**தாஅ வண்ணம்**

**516. தாஅ வண்ணம்**
**இடையிட்டு வந்த எதுகைத் தாகும்.[1] (207)**

## இலக்குவனார்

527. *Thāa vaṇṇam* is the manner of having *ethukai* in the feet alternatively in a line.

## பி.இ.நூ.

மு.வீ.யா.ஒ.37

ஓரடிக் கோரடி மத்தியில் விட்டடி
எதுகை யொன்றின் இயல்வன தாவே.

## இளம்பூரணர்

**516. தாஅ வண்ணம்.....................தாகும்.**

*என்-னின், தாஅவண்ண்மாமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) தாஅ வண்ணமாமது இடையிட்டெதுகையான் வரும் என்றவாறு.

(உ-ம்)"தோடார் எல்வளை நெகிழ நாளும்
நெய்தல் உண்கண் பைதல் கலுழ
வாடா அவ்வரி ததைஇப் பசலையும்
வைக றோறும் பைப்பயப் பெருக
நீடார் இவனென நீமனங் கொண்டோர்
கேளார் கொல்லோ காதலர் தோழீ
வாடாப் பௌவம் அறமுகந் தெழிலி
பருவஞ் செய்யாது வலனேர்பு வளைஇ
ஓடா மலையன் வேலிற்
கடிது மின்னுமிக் கார்மழைக் குரலே" (யா.வி.ப.381)

என்னும் பாட்டு. (207)

1. எதுகைத் தென்ப - பேரா. நச்.. பாடம்

## பேராசிரியர்

**527. தாஅ வண்ண.............தென்ப.**

(இ-ள்) இடையீடுபடத் தொடுப்பது தாஅ வண்ணம் என்றவாறு.

அவை: பொழிப்பும் ஒரூஉவுமாகலின் எதுகையென வரைந்து கூறினானென்பது. அடியிடையிட்டு வருவது தொடைவேற்றுமையாவ தல்லது வண்ணவேற்றுமை யாகாதென்பது. ஒரு செய்யுளுட் பல அடி வந்தால் அவை எல்லாம் இடையிட்டுத் தொடுத்தல் வேண்டுமோ வெனின், வேண்டா; அவை வந்தவழித் தாஅ வண்ணமெனப் படு மென்பது; எனவே, இவ் வண்ணவகைகளெல்லாஞ் செய்யுண் முழுவதுமே பெறுவனவாகக் கொள்ளக்கிடந்தன வல்ல; இவற்றை உறுப்பென்ற தன்மையாற் கந்திருவநூலார் வண்ணங் கூறியவாறு போல ஒரு செய்யுளுட் பலவும் வரப்பெறு மென்பதாம்; அவை,

"உலகப் முவப்ப வலனேர்பு திரிதரு"[1] (முருகு.1)

எனவும்,

"உள்ளார் கொல்லோ தோழி முள்ளுடை."[2] (ஐங்குறு.ப.143)

எனவும் வரும். பிறவும் அன்ன. (215)

## நச்சினார்க்கினியர்

**215. தாஅ வண்ணம்........தாகும்.**

உரை இல்லை.

## சிவலிங்கனார்

**தாஅவண்..................தாகும்.**

(இ-ள்) இது முதல் வரும் வண்ணச்சூத்திரங்கள். சூத்திரங்களா லேயே பொருள் உணர வருதலின் உரை எழுதவில்லை.

சூத்திரங்களால் விளங்காதவற்றுக்கு நச். உரை காண்க.

**வல்லிசை வண்ணம்**

**517. வல்லிசை வண்ணம் வல்லெழுத்து மிகுமே.[3] (208)**

---

1. உலகம்...................வலன்-பொழிப்பு எதுகை
2. உள்ளார்..............முள்ளுடை-ஒரூஉ எதுகை
3. பயிலும்-பேரா. நச். பாடம்

## இலக்குவனார்

528. *Vallisai vaṇṇam* is the manner of bringing in hard consonants abundantly.

## பி.இ.நூ.

மு.வீ.யா.ஒ.22

எதுகை முதலடி யெல்லாம் வல்லினம்
மிகுவன வல்லிசை யாம்விளம் பிடினே.

## இளம்பூரணர்

**517. வல்லிசை வண்ணம்................மிகுமே.**

*என்-னின், வல்லிசை வண்ணமாமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) வல்லெழுத்து மிக்குவருவது வல்லிசை வண்ணமாம் என்றவாறு.

"வட்டொட்டி யன்ன வனமுடப் புன்னைக்கீழ்க்
கட்டிட்டுக் கண்ணி தொடுப்பவர் தாழைப்பூத்
தொட்டிட்டுக் கொள்ளுங் கடற்சேர்ப்பன் நின்னொடு
பட்டொட்டி யுள்ளம் விடாது நினையுமேன்
விட்டொட்டி நீங்காதே ஒட்டு." (யா.வி.ப.382)

(208)

## பேராசிரியர்

**528. வல்லிசை வண்ணம்........................பயிலும்.**

(இ-ள்) வல்லிசை வண்ணம் வல்லெழுத்துப் பயின்றுவரும் என்றவாறு.

வல்லெழுத்துப் பயின்றுவருதலான் அப் பெயர்த்தாயிற்று.

"முட்டாச் சிறப்பிற் பட்டினம் பெறினும்" (பட்டினப்.218)

எனவும்,

"முட்டாட் டாமரைத் துஞ்சி" (முருகு.73)

எனவும் வரும். பிறவும் அன்ன. (216)

## நச்சினார்க்கினியர்

**216. வல்லிசை வண்ணம்................பயிலும்.**

மெல்லிசை வண்ணம்

**518. மெல்லிசை வண்ணம் மெல்லெழுத்து மிகுமே. (209)**

## இலக்குவனார்

529. *Mellisai vaṇṇam* is the manner of bringing in soft consonants abundantly.

## பி.இ.நூ.

மு.வீ.யா.ஒ.24.

மெல்லினம் மிகுவன மெல்லிசை யாகும்.

## இளம்பூரணர்

**518. மெல்லிசை வண்ணம்................மிகுமே.**

*என்-னின், மெல்லிசை வண்ணம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) மெல்லெழுத்து மிக்கது மெல்லிசை வண்ணமாம் என்றவாறு.

"பொன்னின் அன்ன புன்னைநுண் தாது
மணியின் அன்ன நெய்தலங் கழனி
மனவென உதிரு மாநீர்ச் சேர்ப்ப
மாண்வினை நெடுந்தேர் பூண்மணி யொழிய
மம்மர் மாலை வாநீ
நன்மா மேனி நயந்தனை எனினே" **(யா.வி.ப.382)**

என வரும். (209)

## பேராசிரியர்

**529. மெல்லிசை..................மிகுமே.**

(இ-ள்) மெல்லெழுத்து மிகுவது மெல்லெழுத்து வண்ணம் என்று கூறியவாறு.

ஒரு செய்யுண் முழுவதும் ஓரினத்தெழுத்தே பயிலச் செய்தால் இன்னாதாதலின் இவை உறுப்பெனப்பட்டு இடையிட்டு வருமென்றா னென்பது. அவ்வாறு செய்யின் அவை மிறைக்கவி யெனப்படும்.[1] ஒழிந்த எழுத்திற்கும் இஃதொக்கும்.

---

1. உறுப்புப் பல சேர்ந்தது ஒரு பொருள். அதனால் மெல்லிசை பயிலும் என்றது மற்றைய எழுத்துகள் இருப்பினும் மெல்லெழுத்து மிக்குவரின் அது மெல்லிசை வண்ணமாம். செய்யுள் முழுவதும் மெல்லெழுத்தே வரின் அது மிறைக் (சித்திர) கவியாகும், மெல் லெழுத்துப் பயின்ற உறுப்புடைய தாகாது.

"பொன்னி என்ன புன்னைநுண் டாது" (யா.வி.ப.382)

என மெல்லெழுத்துப் பயின்றவாறு. (217)

**நச்சினார்க்கினியர்**

**217. மெல்லிசை......................மிகுமே.**

உரை இல்லை. (217)

**இயைபு வண்ணம்**

**519. இயைபு வண்ணம் இடையெழுத்து மிகுமே. (210)**

**இலக்குவனார்**

530. *Iyaipu vaṇṇam* is the manner of bringing in medial consonants abundantly.

**பி.இ.நூ.**

மு.வீ.யா.ஒ.24

இடையினம் மிகுவன இடையிசை யெனலே.

**இளம்பூரணர்**

**519. இயைபு வண்ணம்...................மிகுமே.**

*என்-னின், இயைபுவண்ணம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) இடையெழுத்து மிக்கு வருவது இயைபுவண்ணமாம் என்றவாறு.

"வால்வெள் ளருவி வரைமிசை இழியவும்
கோள்வல் உழுவை விடரிடை இயம்பவும்
வாளுகிர் உளியம் வரையகம் இசைப்பவும்
வேலொளி விளக்கிநீ வரினே
யாரோ தோழி வாழ்கிற் போரே" (யா.வி.ப.383)

என வரும். (210)

**பேராசிரியர்**

**530. இயைபு வண்ண.............மிகுமே.**

(இ-ள்) இடையெழுத்து மிகுவது இயைபு வண்ணம் என்றவாறு.

"அரவி னதிர வுரீஇய வரகு கதிரின்"

என இடையெழுத்து மிக்கு வந்தமையின் இயைபு வண்ணமாயிற்று. மென்மை வன்மைக்கு இடைநிகரவாகிய எழுத்தான் வருதலின் இயைபு வண்ணமென்றான்.[1] (218)

## நச்சினார்க்கினியர்

**218. இயைபு வண்ண..............மிகுமே.**

உரை இல்லை.

### அளபெடை வண்ணம்

## 520. அளபெடை வண்ணம் அளபெடை பயிலும். (211)

## இலக்குவனார்

531. *Aḷapeḍai vaṇṇam* is the manner of bringing in *aḷapeḍai* abundantly.

## பி.இ.நா.

மு.வீ.யா.ஒ.34

அடிதொறும் அளபெடை எதுகை யாக
வருவன அளபாம் வகுக்குங் காலே.

## இளம்பூரணர்

**520. அளபெடை வண்ணம்.....................பயிலும்.**

*என்-னின், அளபெடை வண்ணம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

**(இ-ள்)** அளபெடை பயின்று வருவது அளபெடை வண்ணமாம் என்றவாறு.

"தாஅட் டாஅ மரைமலர் உழக்கி
பூஉக் குவளைப் போஒ தருந்திக்
காஅய்ச் செந்நெற் கறித்துப் போஒய்
மாஅவத் தாஅன் மோஒட் டெருமை" (யா.வி.ப.158)

என வரும். (211)

---

1. இடைபு வண்ணம் என்பது எழுதுவோர் பிழையால் இயைபு வண்ணம் ஆயிற்றுப் போலும்.- சிவ.

## பேராசிரியர்

**531. அளபெடை வண்ண..............................பயிலும்.**

(இ-ள்) இரண்டளபெடையும் பயிலச்செய்வன அளபெடை வண்ணமாம் என்றவாறு.

"மராஅ மலரொடு விராஅய்ப் பராஅம்" (அகம். 99)

என்பது அளபெடை வண்ணம்.

"கண்ணண் டண்ணண்ணெனக் கண்டுங் கேட்டும்" (மலைபடு.352)

என்பது அது. (219)

## நச்சினார்க்கினியர்

**219. அளபெடை வண்ணம்.....................பயிலும்.**

(இ-ள்) இரண்டளபெடையும் பயிலச் செய்வது எ-று.

(எ-டு)"மராஅ மலரொடு விராஅய்ப் பராஅம்"

"கண்ணண் டண்ணண்ணெனக் கண்டுங் கேட்டும்"

என வரும்.

"தாஅம் படுநர்க்குத் தண்ணீ ருளகொல்லோ
வாஅம் பல்விழி யன்பனை யறிவுறில்
வாஅம் புரவி வழுதியொ டெம்மிடைத்
தோஒ நுவலுமிவ் வூர்."

இஃதளபெடைத் தொடையாம்.[1] (219)

### நெடுஞ்சீர் வண்ணம்

**521. நெடுஞ்சீர் வண்ணம் நெட்டெழுத்துப் பயிலும். (212)**

## இலக்குவனார்

532. *Neduñjir vannam* is the manner of bringing in long letters.

1. இஃது அடிஅளபெடைத் தொடை அடிதோறும் பல அளபெடைகள் இல்லாமையால் அளபெடைவண்ணம் ஆகாது.

## பி.இ.நூ.

மு.வீ.யா.ஒ.40

நெட்டெழுத் தியைந்து வருவன நெடுஞ்சீர்
ஆகும் என்மனார் அறிந்திசி னோரே.

## இளம்பூரணர்

**521. நெடுஞ்சீர் வண்ணம்......................பயிலும்.**

*என்-னின், நெடுஞ்சீர் வண்ணம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) நெட்டெழுத்துப் பயின்று வருவது நெடுஞ்சீர் வண்ணமாம் என்றவாறு.

"நீரூர் பானா யாறே காடே
நீலூர் காயாப் பூவீ யாவே
காரூர் பானா மாவே யானே
யாரோ தாமே வாழா மோரே
ஊரூர் பாகா தேரே
பீரூர் தோளாள் பேரூ ராளே" (யா.வி.ப.383)

என வரும்.* (212)

## பேராசிரியர்

**532. நெடுஞ்சீர்............................பயிலும்.**

(இ-ள்) நெட்டெழுத்துப் பயின்று வருவது நெடுஞ்சீர் வண்ணம் என்றவாறு. அது,

"மாவா ராதே மாவா ராதே" (புறம்.273)

என்பது, நெடிதாய் வருவது நெடுஞ்சீரெனப்பட்டது. (220)

## நச்சினார்க்கினியர்

**220. நெடுஞ்சீர்.......................பயிலும்.**

*இது, நெடுஞ்சீர் வண்ணங் கூறுகின்றது.*

(இ-ள்) நெடுஞ்சீர் வண்ணமாவது நெட்டெழுத்துப் பயின்று வரும் எ-று.

(எ-டு) "மாவா ராதே மாவா ராதே"[1]

என வரும்.

"நீரூர் பானா யாறே காடே
நீலூர் காயாப் பூவீ யாதே

---

* இதனை மிறைக்கவி என்பர் நச்சினார்க்கினியர்

1. பாடல் முழுமையும் உதாரணமாகக் கொள்க.

யூரூர் பாகா தேரே
பீரூர் தோளாள் சீறா ரோளே."

இதுவும் மிறைக்கவியாம்.[1] (220)

## குறுஞ்சீர் வண்ணம்

**522. குறுஞ்சீர் வண்ணங் குற்றெழுத்துப் பயிலும். (213)**

## இலக்குவனார்

533. *Kurunjir vannam* is the manner of bringing in short letters.

## பி.இ.நா.

மு.வீ.யா.ஒ.39

குற்றெழுத் தியைந்து வருவன குறுஞ்சீர்
ஆகும் என்மனார் அறிந்திசி னோரே.

## இளம்பூரணர்

**522. குறுஞ்சீர்..............................பயிலும்.**

*என்-னின், குறுஞ்சீர் வண்ணம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) குற்றெழுத்துப் பயின்றுவருவது குறுஞ்சீர் வண்ணமாம் என்றவாறு.

"உறுபெய லெழிலி தொகுபெயல் பொழியச்
சிறுகொடி அவரை பொதிதளை யவிழக்
குறிவரு பருவம் இதுவென மறுகுபு
செறிதொடி நலமிலை யழியல்
அறியலை அரிவை கருதிய பொருளே" **(யா.வி.ப.384)**

என வரும்.[2] (213)

## பேராசிரியர்

**533. குறுஞ்சீர்...........................பயிலும்.**

(இ-ள்) குற்றெழுத்துப் பயில்வது குறுஞ்சீர் வண்ணம் என்றவாறு.

---

1. குறிலும் கலந்திராமையால் - நெடிலே இருத்தலால் இப் பாடல் மிறைக்கவியாம் மிறைக்கவி - சித்திரக்கவி

2. இது மிறைக்கவியாம் என்பர் நச்சினார்க்கினியர். பொருத்தமே; நெடில் கலவாமையின்.

"குரங்குளைப் பொலிந்த கொய்சுவற் புரவி" (அகம்.4)

என வரும்.

## நச்சினார்க்கினியர்

**221. குறுஞ்சீர்....................பயிலும்.**

*இது, குறுஞ்சீர் வண்ணங் கூறுகின்றது.*

**(இ-ள்)** குறுஞ்சீர் வண்ணமாவது குற்றெழுத்து மிக்குவரும். எ-று.

"குரங்குளைப் பொலிந்த கொய்சுவற் புரவி"[1] (அகம்.4)

என வரும்.

"உறுபெய லெழிலி தொகுபெயல் பொழியச்
சிறுகொடி யவரை பொதிதளை யவிழக்
குறிவரு பருவ மிதுவென மறுகுபு
செறிதொடி நறுநுத லழிய
லறியலை யரிவையர் கருதிய பொருளே."

இதுவும் மிறைக்கவியாம். (221)

**சித்திர வண்ணம்**

**523. சித்திர வண்ணம்**
**நெடியவுங் குறியவும் நேர்ந்துடன் வருமே. (214)**

## இலக்குவனார்

534. *Siththira vannam* is the manner of bringing in long and short letters in equal number.

## பி.இ.நா.

**மு.வீ.யா.ஒ. 44**

நெடிலும் குறிலும் நீங்காது வருவன
சித்திரம் என்மனார் தெளிந்திசி னோரே.

## இளம்பூரணர்

**523. சித்திர வண்ணம்...........................வருமே.**

*என்-னின், சித்திரவண்ணம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

---

1. பாடல் முழுமையும் உதாரணமாகக் கொள்க.

(இ-ள்) சித்திர வண்ணமாவது நெட்டெழுத்துங் குற்றெழுத்தும் சார்ந்துவரும் என்றவாறு.

"ஓரூர் வாழினுஞ் சேரி வாரார்
சேரி வரினும் ஆர முயங்கார்" (குறுந்.231)

என வரும். (214)

## பேராசிரியர்

**534. சித்திர வண்ண......................வருமே.**

(இ-ள்) சித்திரவண்ணம் நெட்டெழுத்தும் குற்றெழுத்தும் ஒப்ப விராஅய்ச் செய்யப்படுவது என்றவாறு. அது,

"சார னாட நீவர லாறே"

என வரும்.

சித்திரவண்ணமென்பது பல வண்ணம்படச் செய்வதாகலின் அப் பெயர்த்தாயிற்று. (222)

## நச்சினார்க்கினியர்

**222. சித்திர வண்ணம்.........................வரூஉம்.**

*இது, சித்திரவண்ணங் கூறுகின்றது.*

(இ-ள்) சித்திர வண்ணமாவது நெட்டெழுத்துங் குற்றெழுத்தும் ஒப்ப விராய்ச் செய்வது எ-று.

(எ-டு)"சூரல் பம்பிய சிறுகான் யாறே
சூரர மகளி ராரணங் கினரே
வாரல் வரினே யானஞ் சுவலே
சாரல் நாட நீவர லாறே"

என வரும்.

"ஊர்வழி யூர்ந்தார் வாசி பேரச்
சேரி சார்வரி தொல்லாதிப்
பீர்தீர் தோழி தோளே."

இதுவும் மிறைக்கவியாம்.

பல்வண்ணம் படுதலின் இதனைச் சித்திரவண்ண மென்றார். (222)

### நலிபு வண்ணம்

**524. நலிபு வண்ணம் ஆய்தம் பயிலும். (215)**

## இலக்குவனார்

535. *Nalipu vannam* is the manner of bringing in *āytham.*

## பி.இ.நூ.

மு.வீ.யா.ஒ.36

அடிதொறும் எதுகை யாக ஆய்தம்
கொடுவரல் நலிபாம் குறிக்குங் காலே.

## இளம்பூரணர்

**524. நலிபு வண்ணம்.......................பயிலும்.**

*என்-னின், நலிபுவண்ணம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) ஆய்தம் பயின்றுவருவது நலிபுவண்ணமாம் என்றவாறு.

"அஃகாமை செல்வத்துக் கியாதெனின் வெஃகாமை
வேண்டும் பிறன்கைப் பொருள்' (குறள்.178)

என வரும். (215)

## பேராசிரியர்

**535. நலிபு வண்ண......................பயிலும்.**

(இ-ள்) ஆய்தம் பயின்று வருவது நலிபுவண்ணமாம் என்றவாறு. அஃது,

"அஃகாமை செல்வத்திற் கியாதெனின் வெஃகாமை"
(குறள்.178)

"னஃகான் றஃகா னான்க னுருபிற்கு" (தொல்.எழுத்து.123)

என வரும். நலிபெனப்பது, ஆய்தம். (223)

## நச்சினார்க்கினியர்

**223. நலிபு வண்ண......................பயிலும்.**

*இது, நலிபுவண்ணங் கூறுகின்றது.*

(இ-ள்) நலிபுவண்ணம் ஆய்தம் பயின்றுவரும் எ-று.

(எ-டு)"அஃகாமை செல்வத்திற் கியாதெனின் வெஃகாமை
வேண்டும் பிறன்கைப் பொருள்." (குறள்.178)

"னஃகாற் றஃகான் நான்க னுருபிற்கு" (தொல்.எழுத்து.21)

என வரும்.

நலிபென்பது ஆய்தம்.

"எஃகோ டவன்கேட்ப வேமறந்தாள் போதென்றா
யஃகுநீர்க் கான்யாற் றவிர்மண லெக்கர்மேல்"

என்றால் தொடைப்பாற்படும்.[1] (223)

**அகப்பாட்டு வண்ணம்**

**525. அகப்பாட்டு வண்ணம்**
**முடியாத் தன்மையின் முடிந்ததன் மேற்றே. (216)**

## இலக்குவனார்

536. *Ahappattu vannam* is the manner of ending in the form of incompleteness.

## பி.இ.நா.

மு.வீ.யா.ஒ.33

முடியா தது போல் முடிந்து வருவன
அகப்பாட் டென்மனார் அறிந்திசி னோரே

## இளம்பூரணர்

**525. அகப்பாட்டு வண்ணம்......................மேற்றே.**

*என்-னின், அகப்பாட்டு வண்ணம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) அகப்பாட்டு வண்ணமாவது முடியாத் தன்மையான் முடிந்ததன் மேலதென்றவாறு.[2]

"பன்மீன் உணங்கற் படுபுள் ளோப்பியும்
புன்னைநுண் தாது நம்மொடு தொடுத்தும்
பன்னாள் வந்து பணிமொழி பயிற்றி

---

1. எதுகைத்தொடைப்பாற்படும். அஃகாமை, வெஃகாமை என்பன ஒரூஉத் தொடை; னஃகான், றஃகான் என்பன இணைமோனைத் தொடை இவ் விரண்டையும் நலிபு வண்ணத்துக்குக் கொண்ட நச்சினார்க்கினியர் 'எஃகோடவன்' என்பதைக் கொள்ளாமைக்குக் காரணம் புலப்படவில்லை.

2. செய்யுள் என்பது இறுதியில் ஏகார வீற்றான் முடிவது. ஏகாரம் அல்லா மற்றை எழுத்தீற்றான் முடியின் செய்யுள் முடியாததுபோல் தோற்றம் அளிக்கும். அதனால் அச் செய்யுள் முடியாத் தன்மையான் முடிந்ததாகும். பேராசிரியரும் இக் கருத்தையே எழுதுதல் காண்க. நச்சினார்க்கினியரும் இக் கருத்தினரே.

தோழி நீங்காமை சூளில் தேற்றியும்
மணந்ததற் கொவ்வான் தணந்துபுற மாறி
இனைய னாகி ஈங்குனைத் துறந்தோன்
பொய்த லாயத்துப் பொலந்தொடி மகளிர்
கோடுயர் வெண்மணல் ஏறி
ஓடுகலம் எண்ணும் துறைவன் தோழி" (யா.வி.ப.385)

என வரும். (216)

## பேராசிரியர்

**536. அகப்பாட்டு வண்ண......................மேற்றே.**

(இ-ள்) அகப்பாட்டு வண்ணமென்பது, இறுதியடி இடையடி போன்று நிற்பது என்றவாறு.

அவையாவன: முடித்துக் காட்டும் ஈற்றசை ஏகாரத்தானன்றி, ஒழிந்த உயிரீற்றானும் ஒற்றீற்றானும் வருவன; அவை:

"தவழ்பவை தாமு மவற்றோ ரன்ன" (560)

"உண்கண் சிவப்ப தெவன்கொ லன்னாய்" (ஐங்குறு.21)

"கோடுயர் வெண்மண லேறி
யோடுகல னெண்ணுந் துறைவன் றோழி" (கலி.கடவுள்)

"ஆணமில் பொருளெமக் கமர்ந்தனை யாடி" (கலி.கடவுள்)

"சென்றீ பெரும்நிற் றகைக்குநர் யாரே" (அகம்.46)

என இவை ஆசிரிய வீற்றன.

"குளிறு குரலருவிக் குன்றத் திதண்மேற்
களிறு வருவது கண்டு - வெளிலென்ன
லாயினான் பின்னை யணங்கிற் குயிரளித்துப்
போயினான் யாண்டையான் போன்ம்"

என இதனுள் இறுதியடி முடியாத் தன்மையின் முடிந்ததாகலின் அகப்பாட்டு வண்ணமாயிற்று.

"கொடியுவணத் தவணரோ"

எனக் கலிப்பாவுள் அரோவந்து பின் முடியாத் தன்மையின் முடிந்தது.

ஆ ஈ ஊ ஏ ஐ ஓ என்பனவற்றான் ஆசிரியம் இறுமென வரையறுப்பா ருண்மையின் அவ்வச் சொல்லானே அவை முடிந்தன வென்று கொள்வலெனின், அங்ஙனம் வரையறையில வென்பது மேற் காட்டிய உதாரணங்களால் அறிந்தாமாகலின் அக் கடா வண்ணமென வரையறுப்பார் மேற்றென விடுக்க. (224)

## நச்சினார்க்கினியர்

**224. அகப்பாட்டு வண்ணம்......................மேற்றே.**

இஃது, அகப்பாட்டு வண்ணங் கூறுகின்றது.

(இ-ள்) அகப்பாட்டு வண்ணமாவது முடித்துக்காட்டாத் தன்மையாலே முடிந்ததன்மேலே நிற்பதாம் எ-று.

அது தன்னை முடித்தற்குரிய ஈற்றசை ஏகாரத்தால் வாராது இறுதி இடையடிபோன்று நிற்பது.

(எ-டு) "பன்மீன் உணங்கற் படுபுள் ளோப்பியும்
புன்னை நுண்தாது நம்மொடு தொடுத்தும்
பன்னாள் வந்து பணிமொழி பயிற்றி
தோழி நீங்காமை சூளில் தேற்றியும்
மணந்ததற் கொவ்வான் தணந்து புறமாறி
இனைய னாகி ஈங்குனைத் துறந்தோன்
பொய்த லாயத்துப் பொலந்தொடி மகளிர்
கோடுயர் வெண்மணல் ஏறி
ஓடுகலம் எண்ணும் துறைவன் தோழி"

'ஆணமில் பொருளெமக் கமர்ந்தனை யாடி"

என வரும். (224)

**புறப்பாட்டு வண்ணம்**

**526. புறப்பாட்டு வண்ணம்
முடிந்தது போன்று முடியா தாகும். (217)**

## இலக்குவனார்

537 *Puṟapāttu vaṇṇam* is the manner of being incomplete in the form of completeness.

## பி.இ.நா.

**மு.வீ.யா.ஒ.32**

முடிந்தது போல முடியாது வருவன
புறப்பாட் டென்மனார் புலமை யோரே.

## இளம்பூரணர்

**526. புறப்பாட்டு வண்ணம்......................தாகும்.**

*என்-னின், புறப்பாட்டு வண்ணம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) புறப்பாட்டு வண்ணமாவது முடிந்தது போன்று முடியாதாகிவரும் என்றவாறு.

(உ-ம்)"நிலவுமண லகன்துறை வலவ னேவலின்
எரிமணிப் புள்ளின மொய்ப்ப நெருநலும்
வந்தன்று கொண்கன் தேரே இன்றும்
வருகுவ தாயின் சென்று சென்று
தோன்றுபு துதைந்த புன்னைத் தாதுகு
தண்பொழில் மெல்லக வனமுலை நெருங்கப்
புல்லின் எவனோ மெல்லியல் நீயும்
நல்காது விடுகுவை யாயின் அகலும்
படர்மலி உள்ளமொடு மடல்மா வேறி
உறுதுயர் உலகுட னறியநம்
சிறுகுடிப் பாக்கத்துப் பெரும்பழி தருமே" (யா.வி.ப.385)

என வரும்.[1] (217)

## பேராசிரியர்

**537. புறப்பாட்டு......................தாகும்.**

(இ-ள்) புறப்பாட்டு வண்ணமென்பது, இறுதியடிப் புறத்ததாகவும் தான் முடிந்தது போன்று நிற்றல் என்றவாறு.

"இன்னா வைகல் வாரா முன்னே
செய்ந்நீ முன்னிய வினையே
முந்நீர் வரைப்பக முழுதுடன் றுறந்தே" (புறம். 363)

என்புழி, ஈற்றயலடி 'முன்னிய வினையே' என முடிந்தது போன்று முடியாதாயிற்று.[2] (225)

## நச்சினார்க்கினியர்

**225. புறப்பாட்டு வண்ணம்............................தாகும்.**

இது, புறப்பாட்டு வண்ணங் கூறுகின்றது.

(இ-ள்) புறப்பாட்டு வண்ணமாவது இறுதியடிப் புறத்ததாகவுந் தான் முடிந்தது போன்று நிற்றல் எ-று.

(எ-டு)"இன்னா வைகல் வாரா முன்னே
செய்ந்நீ முன்னிய வினையே
முந்நீர் வரைப்பக முழுதுடன் துறந்தே." (புறம்.363)

'முன்னிய வினையே' முடிந்ததுபோன்று முடியாதாயிற்று. (225)

---

1. விளக்கம் இல்லை. பேராசிரியர், நச்சினார்க்கினியர் கூறுவன பொருந்தும்.

2. வினையே என ஏகார வீற்றான் முடிந்தமையின் செய்யுள் முடிந்ததுபோல் தோன்றுகிறது, ஆனால் முடியாமல் அடுத்த அடியைத் தொடர்கிறது.

### ஒழுகுவண்ணம்

**527. ஒழுகு வண்ணம் ஓசையி னொழுகும். (218)**

## இலக்குவனார்

538. *Oluku vaṇṇam* is the manner of having the sounds of the same sort continuously.

## பி.இ.நூ.

மு.வீ.யா.ஒ.25

விரவிழு வினமும் மிகுவன ஒழுகிசை.

## இளம்பூரணர்

**527. ஒழுகு வண்ணம்.........................னொழுகும்.**

*என்-னின், ஒழுகுவண்ணம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) ஓசையான் ஒழுகிக்கிடப்பது ஒழுகுவண்ணமாம் என்றவாறு.

(உ-ம்)"அம்ம வாழி தோழி காதலர்
இன்முன் பனிக்கும் இன்னா வாடையொடு
புன்கண் மாலை அன்பின்று நலிய
உய்யலள் இவளென உணரச் சொல்லிச்
சொல்லுநர்ப் பெறினே செய்ய வல்ல
இன்னளி யிறந்த மன்னவர்
பொன்னணி நெடுந்தேர் பூண்ட மாவே" (யா.வி.ப.386)

என வரும். (218)

## பேராசிரியர்

**538. ஒழுகு வண்ண.....................னொழுகும்.**

(இ-ள்) முற்கூறிய வகையானன்றி ஒழுகிய வோசையாற் செல்வது ஒழுகுவண்ணம் என்றவாறு.

ஒழிந்தனவும் ஒழுகுமாயினும் அவை வேறுவேறு இலக்கண முடையனவென்பது.[1]

"அம்ம வாழி தோழி காதலர்க்
கின்னே பனிக்கு மின்னா வாடையொடு

---

1. வேறுவேறு இலக்கணம் - வல்லிசை மெல்லிசை முதலியன பயிலுதல் என்னும் இலக்கணங்கள்.

புன்கண் மாலை யன்பின்று நலிய
வுய்யல ளிவள்" (யா.வி.ப.386)

என வரும். (226)

## நச்சினார்க்கினியர்

**226. ஒழுகு வண்ண..........................னொழுகும்.**

*இஃது, ஒழுகுவண்ணங் கூறுகின்றது.*

(இ-ள்) முற்கூறியவாறன்றி யொழுகிய வோசையாற் செய்வது ஒழுகுவண்ணம் எ-று.

ஒழிந்தனவும் ஒழுகுமேனும் அவற்றின் வேறிலக்கணமுடைய.

"அம்ம வாழி தோழி காதல
ரின்னே பனிக்கு மின்னா வாடையொடு
புன்கண் மாலை யன்பின்று நலிய
வுய்யல ளிவளென் றுணரச் சொல்லிச்
செல்லுநர்ப் பெறினே சேய வல்ல
வின்னினி யிறந்த மன்னவர்
பொன்னணி நெடுந்தேர் பூண்ட மாவே"

என வரும். (226)

### ஒரூஉ வண்ணம்

**528. ஒரூஉ வண்ணம் ஒரூஉத்தொடை[1] தொடுக்கும். (219)**

## இலக்குவனார்

539. *Orūu vannam* is the manner of having the sounds being interrupted.

## பி.இ.நூ.

மு.வீ.யா.ஒ.38

அடிதொறும் ஒன்றாத் தொடையொடு வருவன
ஒரூஉ எனப்பெயர் உரைக்கப் படுமே.

## இளம்பூரணர்

**528. ஒரூஉ வண்ணம்..........................தொடுக்கும்.**

*என்-னின், ஒரூஉ வண்ணம் உணர்த்துதல் நுதலிற்று.*

---

1. ஒரீஇத் தொடுக்கும் - பேரா. நச். பாடம்

(இ-ள்) ஒரூஉ வண்ணமாவது நீங்கின தொடையாகித் தொடுப்பது என்றவாறு.

அது செந்தொடையாம்.[1]

(உ-ம்)"தொடிநெகிழ்ந் தனவே கண்பசந் தனவே
யான்சென் றுரைப்பின் மாண்பின் றெவனோ
சொல்லாய் வாழி தோழி வரைய
முள்ளிற் பொதுளிய அலங்குகுலை நெடுவெதிர்
பொங்குவா லிளமழை துவைப்ப
மணிநிலா விரியுங் குன்றுகிழ வோற்கே" (யா.வி.ப.386)

என வரும். (219)

## பேராசிரியர்

**539. ஒரூஉ வண்ண.....................தொடுக்கும்**

(இ-ள்) யாற்றொழுக்குப் போலச் சொல்லிய பொருள் பிறிதொன் றனை அவாவாமை அறுத்துச் செய்வது ஒரூஉவண்ணம் என்றவாறு.

ஓரீஇத் தொடுத்த லென்பது, எல்லாத் தொடையும் ஓரீஇச் செந்தொடையால் தொடுத்தலென்பாரும் உளர்.[2] செந்தொடையுந் தொடையாகலான் அற்றன்றென்பது; அது,

"யானே யீண்டை யேனே யென்னலனே
யானா நோயொடு கான லஃதே
துறைவன் றம்மூ ரானே
மறையல ராகி மன்றத் தஃதே" (குறுந்.7)

என வரும்.

"சிறியகட் பெறினே யெமக்கீயு மன்னே" (புறம். 235)
என்பதும் அது.

யாப்புப் பொருணோக்கியவாறுபோல இது பொருணோக்காது ஓசையே கோடலானும் அடியிறந்து கோடலானும் யாப்பெனப்படாது.[3] (227)

---

1. செந்தொடை - யாதோர் தொடையும் இல்லாதது.

ஒரூஉ வண்ணம் - நீக்கிய வண்ணம். தொடையை நீக்கிய வண்ணம் இதனை மறுப்பர் மற்றையார்.

2. இளம்பூரணர்

3. யாப்பு எனும் செய்யுள் உறுப்பு, தொடர்பான பொருள் நோக்குடையது. உதாரணப் பாடல்களில் பொருள் அற்றுஅற்றுத் தனித்தனி பொருளாக இருத்தலின் யாப்பு எனும் உறுப்பு அன்று. வண்ணம் என்பதற் குரியதாகும்.

## நச்சினார்க்கினியர்

**227. ஒரூஉ....................தொடுக்கும்.**

இஃது, ஒரூஉ வண்ணங் கூறுகின்றது.

(இ-ள்) ஒரூஉ வண்ண மாவது யாற்றொழுக்குப் போலச் சொல்லிய பொருள் பிறிதொன்றனை யவாவாமை அறுத்துச் செய்வது எ-று.

(எ-டு)"யானே, யீண்டை யேனே யென்னலனே
ஆனா நோயொடு கான லஃதே
மறையல ராகி மன்றத் தஃதே" (குறுந்.97)

என வரும்.

"சிறியகட் பெறினே யெமக்கீயு மன்னே
பெரியகட் பெறினே" (புறம்.235)

என்பதுமது.

இஃது யாப்புப்போலப் பொருணோக்கோசையே கோடலானும் அடியிறந்து கோடலானும் யாப்பெனப் படாது.

இனி யெல்லாத் தொடையும் ஓரீஇச் செந்தொடையாற் றொடுப்பது ஒரூஉ வண்ணமெனக் கூறிப் "பூத்த வேங்கை" என்பது உதாரணங் காட்டுவது தொடைப்பகுதியாம். (227)

### எண்ணுவண்ணம்

**529. எண்ணு வண்ணம் எண்ணுப் பயிலும். (220)**

## இலக்குவனார்

540. *Ennu vannam* is the manner of having the form of counting.

## பி.இ.நூ.

முு.வீ.யா.ஒ.26

எண்ணி வருவன எண்ணெனப் படுமே.

## இளம்பூரணர்

**529. எண்ணு.........................பயிலும்.**

*என்-னின், எண்ணு வண்ணம் உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) எண்ணுப் பயின்றுவருவது எண்ணுவண்ணமாம் என்றவாறு.

(உ-ம்)"நிலம்நீர் வளிவிசும் பென்ற நான்கின்
அளப்பரியையே
நாள்கோள் திங்கள் ஞாயிறு கனையழல்
ஐந்தொருங்கு புணர்ந்த விளக்கத் தனையே" (பதிற்.14)

என வரும்.[1] (220)

## பேராசிரியர்

**540. எண்ணு..........................பயிலும்.**

(இ-ள்) எண்ணுப் பயில்வது எண்ணுவண்ணம் என்றவாறு.

இஃது, அடி எண்ணுப் பயிறலான் எண்ணுவண்ண மெனக் காரணப் பெயராயிற்று; அவை,

"நன்ன னேற்றை நறும்பூ ணத்தி
துன்னருங் கடுந்திறற் கங்கன் கட்டி" (அகம்.44)

என்றாற் போல்வன.

"நுதலுந் தோளுந் திதலை யல்குலும்" (அகம்.119)

என்பதும் அது. (228)

## நச்சினார்க்கினியர்

**228. எண்ணு வண்ண........................பயிலும்.**

*இது, எண்ணுவண்ணங் கூறுகின்றது.*

(இ-ள்) எண்ணு வண்ணமாவது அடிக்கண்ணே பயின்று வருவது எ-று.

இது காரணப்பெயர்.

"நன்ன னேற்றை நறும்பூ ணத்தி
துன்னருங் கடுந்திறற் கங்கன் கட்டி
பொன்னணி வல்விற் பொன்றுறை யென்றாங்கு" (அகம்.44)

என வரும்.

"நாள்கோ டிங்கண் ஞாயிறு கனையழல்" (பதிற்.2:14)

"நுதலுந் தோளுந் திதலை யல்குலும்" (அகம்.119)

என்பதும் அது. (228)

---

1. எண் என்பதற்கு எண்ணித் தொகையுடன் வருவது எனக் கொண்டார் இளம்பூரணர். மற்றையோர் உம்மை கொடாதும் கொடுத்தும் எண்ணுவது எனக் கொண்டனர்.

## அகைப்பு வண்ணம்

**530. அகைப்பு வண்ணம் அறுத்தறுத் தொழுகும். (221)**

## இலக்குவனார்

541. *Ahaippu vaṇṇam* is the form of having sounds being changed into long and short.

## பி.இ.நூ.

**மு.வீ.யா.ஒ. 31**

அறுத்தறுத் தியல்வன அகைப்பா கும்மே.

## இளம்பூரணர்

**530. அகைப்பு..............................தொழுகும்.**

*என்-னின், அகைப்பு வண்ணம் உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) அறுத்தறுத்தியலுவது அகைப்பு வண்ணமாம் என்றவாறு.

(உ-ம்)"தொடுத்த வேம்பின்மிசைத் துதைந்த போந்தையிடை
அசைத்த வாரமலைப் பட்டூ ரண்ணலென்பான்
இயன்ற சேனைமுர சிரங்குந் தானையெதிர்
முயன்ற வேந்தருயிர் முருக்கும் வேலினவன்" (யா.வி.ப.387)

என வரும். (221)

## பேராசிரியர்

**541. அகைப்பு..............................தொழுகும்**

(இ-ள்) அறுத்தறுத்துப் பயில்வது அகைப்பு வண்ணம் என்றவாறு.

இது, விட்டுவிட்டுச் சேறலின் அகைப்புவண்ண மென்னும் பெயர் பெற்றது.

"வாரா ராயினும் வரினு மவர்நமக்
கியாரா கியரோ தோழி" (குறுந். 110)

என்புழி, ஒருவழி நெடில் பயின்றும் ஒருவழிக் குறில் பயின்றும் அறுத்தொழுகிய அகைப்பு வண்ணமாம். (229)

## நச்சினார்க்கினியர்

**229. அகைப்பு வண்ணம்..............................தொழுகும்.**

*இஃது, அகைப்பு வண்ணம் கூறுகின்றது.*

(இ-ள்) அகைப்பு வண்ணமாவது விட்டுவிட்டுச் சொல்லும் ஓசையை யுடையது எ-று.

அகைத்தல் அறுத்தலாதலிற் காரணப்பெயர். ஒருவழி நெடில் பயின்றும் ஒருவழிக் குறில் பயின்றும் அற்றும் வருவது.

"வாரா ராயினும் வரினு மவர்நமக்
கியாரா கியரோ தோழி" (குறுந்.110)

என வரும்.

"தொடுத்தவேம் பின்மிசைத் துதைபோந் தையிடை
யடுத்தவ ரருமலை யட்டுண் டுண்ண
லென்பா னியன்ற வேனை முயற்சி
அம்பசும்பு தானை யெதிர்முயன்ற வேந்த
ருயிர்முடிக்கும் வேலின் னவன்"

என்பதுமது.[2] (229)

**தூங்கல் வண்ணம்**

## 531. தூங்கல் வண்ணம் வஞ்சி பயிலும். (222)

## இலக்குவனார்

542. *Thūngal vaṇṇam* is the mode of having *vañji* note.

## பி.இ.நூ.

மு.வீ.யா.ஒ.30

நிரையிறு உரிச்சீர் மிக்குத் தூங்கிய
ஓசையின் வருவன தூங்கிசை ஆகும்.

## இளம்பூரணர்

**531. தூங்கல்........................பயிலும்.**

*என்-னின், தூங்கல் வண்ணம் உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) தூங்கல் வண்ணமாவது வஞ்சியுரிச்சீர் பயின்றுவரும் என்றவாறு.[3]

---

1. அறுத்தறுத்தியலுவது - முதற்சீரின் ஓசையினும் அடுத்த சீரின் ஓசை எடுப்பாய் இருந்து அறுத்து (விட்டு) இசைப்பதுபோல் செல்வது..

2. இளம்பூரணர் பாட்டின் வேறுபாடு காண்க. எப்படியிருப்பினும் இரண்டிலும் ஓசை அறுத்தியல்வது ஆம்.

3. வஞ்சியுரிச்சீர் பயின்றுவரின் அது வஞ்சிப்பாவாகிவிடும் மற்றையோர் உரையே பொருந்தும்.

(உ-ம்)"வசையில்புகழ் வயங்குவெண்மீன்
திசைதிரிந்து தெற்கேகினும்" (பட்டினப்.1)

என வரும். (222)

## பேராசிரியர்

**542. தூங்கல்............................பயிலும்.**

(இ-ள்) தூங்கல் வண்ணந் தூங்கலோசைத்தாகி வருவது என்றவாறு.

வஞ்சியென்பது, வஞ்சித் தூக்குப்போல இதுவும் அற்றுச் சேறலுடைத் தென்பது. அது,

"யானூடத் தானுணர்த்த யானுணரா விட்டபின்
றானூட யானுணர்த்தத் தானுணரான்" (முத்தொள்.104)

என நின்ற தொடர்நிலைக்கண்ணே[1] அத் தூங்கல்[2] கண்டு கொள்க. இக் கருத்தறியாதார் கலிப்பாவினுள் வஞ்சிப்பாப் பிறக்குமெனவும் வஞ்சியுட் கலிப்பாப் பிறக்குமெனவும் மயங்குப. (230)

## நச்சினார்க்கினியர்

**230. தூங்கல்......................பயிலும்.**

*இது, தூங்கல் வண்ணங் கூறுகின்றது.*

(இ-ள்) தூங்கல் வண்ணமாவது தூங்கலோசைத்தாகி வரும். எ-று.

அது வஞ்சிப்பா லற்றுச் சேறல்.

"யானூடத் தானுணர்த்த யானுணரா விட்டபின்
றானூட யானுணர்த்தத் தானுணரான் றேனூடும்"
(முத்தொள்.)

எனத் தூங்கல் வண்ணம் வந்தது. (230)

### ஏந்தல் வண்ணம்

**532. ஏந்தல் வண்ணம்
சொல்லிய சொல்லிற் சொல்லியது சிறக்கும். (223)**

---

1. தொடர்நிலை - தொடர்ந்து செல்லும் சீர்நிலை

2. வெண்பா எனினும் ஓசை தூங்கலாவது கண்டுகொள்க.

## இலக்குவனார்

543. *Enthal vannam* is the manner of having the words repeated.

## பி.இ.நூ.

மு.வீ.யா.ஒ.

நேரிறு உரிச்சீர் மிகவந் தேந்திய
ஓசையின் வருவன ஏந்திசை யாகும்.

## இளம்பூரணர்

**532. ஏந்தல் வண்ணம்.............................சிறக்கும்.**

*என்-னின், ஏந்தல் வண்ணம் உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) ஏந்தல் வண்ணமாவது சொல்லிய சொல்லினானே சொல்லப்பட்டது[1] சிறக்க வரும் என்றவாறு.

(உ-ம்)"கூடுவார் கூடல்கள் கூட லெனப்படா
கூடலுட் கூடலே கூடலுங் - கூடல்
அரும்பிய முல்லை யரும்பவிழ் மாலைப்
பிரிவிற் பிரிவே பிரிவு" **(யா.வி.ப.388)**

என வரும். (223)

## பேராசிரியர்

**543. ஏந்தல் வண்ணஞ்........................சிறக்கும்.**

(இ-ள்) சொல்லிய சொல்லானே சொல்லப்படும் பொருள் சிறப்பச் செய்வது ஏந்தல்வண்ண மென்றவாறு.

ஏந்தலென்பது மிகுதல்; ஒரு சொல்லே மிக்குவருதலின் ஏந்தல் வண்ணமென்றானாயிற்று. அது,

"வைகலும் வைகல் வரக்கண்டு மஃதுணரார்" **(நாலடி-39)**

என வரும். (231)

## நச்சினார்க்கினியர்

**231. ஏந்தல் வண்ணம்.........................சிறக்கும்.**

*இது, ஏந்தல் வண்ணம் கூறுகின்றது.*

---

**1. சொல்லிய சொல்லினானே சொல்லப்பட்டது என்றது, முதலிற் சொல்லிய சொல்லினானே மீளமீளச் சொல்லப்பட்ட செய்யுளை.**

(இ-ள்) ஏந்தல் வண்ணமாவது ஒருகாற் சொல்லிய சொல்லானே சொல்லப்படும் பொருள் சிறப்பச் செய்தல் எ-று.

ஏந்தல் ஒருசொன் மிகுதல்.

(எ-டு)"வைகலும் வைகல்......................துணராதார்" (நாலடி.39)

"கூடுவார் கூடல்கள் கூட லெனப்படா
கூடலுட் கூடலே கூடலுங் - கூட
லரும்பிய முல்லை யரும்பவிழ் மாலைப்
பிரிவிற் பிரிவே பிரிவு"

என வரும். (231)

**உருட்டுவண்ணம்**

## 533. உருட்டு வண்ணம் அராகந் தொடுக்கும். (224)

## இலக்குவனார்

544. *Uruttu vaṇṇam* is the manner of having *arākam.*

## பி.இ.நூ.

மு.வீ.யா.ஓ.27

உருட்டாம் அராகத் தொடுவரு வனவே.

## இளம்பூரணர்

**533. உருட்டு........................தொடுக்கும்.**

*என்-னின், உருட்டு வண்ணம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) உருட்டு வண்ணமாவது[1] அராகந் தொடுக்கும் என்றவாறு.

(உ-ம்)"தாதுறு முறிசெறி தடமல ரிடையிடை
தழலெனா விரிவன பொழில்" (யா.வி.ப.299)

என வரும். (224)

## பேராசிரியர்

**544. உருட்டு........................தொடுக்கும்.**

(இ-ள்) உருட்டிச் சொல்லப்படுவது அராகமாகலின் அராகந் தொடுப்பது உருட்டு வண்ணமாம் என்றவாறு.

---

1. உருட்டிச் சொல்லப்படும் இசை உருட்டு வண்ணம்.

"உருமுரறு கருவிய பெருமழை தலைஇய" (அகம்.158)

"எரியுரு வுறழ விலவ மலர" (கலி.33)

என வரும். இது நெகிழாது உருண்டவோசையாகலிற் குறுஞ்சீர் வண்ணமெனப்படாது உருட்டுவண்ணமெனப்பட்டது. (232)

## நச்சினார்க்கினியர்

**232. உருட்டு.....................தொடுக்கும்.**

*இஃது, உருட்டு வண்ணம் கூறுகின்றது.*

(இ-ள்) உருட்டு வண்ணமாவது அராகந் தொடுக்குமது எ-று.

உருட்டிச் சொல்லப்படுவது அராகமாதலின் ஞெகிழாதுருண்ட வோசைத்தாகலின், இது குறுஞ்சீர் வண்ணத்தின் வேறாம்.

(எ-டு)"உருகெழு முருகிய முருமென வதிர்தொறு
மருகெழு சிறகொடு மணவரு மணிமயில்"

என வரும். (232)

### முடுகு வண்ணம்

**534. முடுகு வண்ண முடிவறி யாமல்[1]
அடியிறந் தொழுகி[2] அதனோர் அற்றே. (225)**

## இலக்குவனார்

545. *Muduku vaṇṇam* is the manner of having the lines being lengthened and of being similar to that.

## பி.இ.நூ.

மு.வீ.யா.ஒ.28

அராகமாய் வருவ தன்றியும் அடிமுதல்
ஈறுதோன் றாமல் தொடர்ந்தெ மும்பிய
அடியான் வருவன முடுகா கும்மே.

## இளம்பூரணர்

**534. முடுகு வண்ண.......................அற்றே.**

*என்-னின், முடுகு வண்ணம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

---

1. முடிவறியாமல் என்பது மற்றையோர் பாடத்தில் இல்லை.
2. அடியிறந் தோடி - பேரா. நச். பாடம்

**(இ-ள்)** முடுகு வண்ணமாவது நாற்சீரடியின் மிக்கோடி அராகத்தோடு ஒக்கும் என்றவாறு.

**(உ-ம்)**"நெறியறி செறிகுறி புரிதிரி பறியா வறிவனை முந்துறீஇ"
**(கலி.39)**
(225)

## பேராசிரியர்

**545. முடுகு வண்ண.................ரற்றே.**

(இ-ள்) முடுகு வண்ணமென்பது, நாற்சீரடியின் மிக்கு ஓரடி அராகத்தோ டொக்கும்[1] என்றவாறு. அது,

"நெறியறி செறிகுறி புரிதிரி பறியா வறிவனை முந்துறீஇத்
தகைமிகு தொகைவகை யறியுஞ் சான்றவ ரினமாக
வேய்புரை மென்றோட் பசலையு மம்பலும்" **(கலி.39)**

என வரும்.

இவற்றைக் கொச்சகம் அராகமெனவுஞ் சொற்சீரடியும் முடுகிய லடியுமெனவும் பரிபாடற்கு வேறுபடுத்தோதினான் இவ் வேறுபாடு[2] நோக்கியென்பது. (233)

## நச்சினார்க்கினியர்

**233. முடுகு வண்ணம்..............................ரற்றே.**

இது, முடுகு வண்ணம் கூறுகின்றது.

(இ-ள்) முடுகு வண்ணமாவது முடுகியல் தொடுத்த அடியோடு பிறவடி வேறுபடத் தொடர்ந்தோடுவது எ-று.

(எ-டு)"நெறியறி செறிகுறி புரிதிரிபு" **(கலி.39)**

என்னுஞ் சுரிதகமும்,

"இரிபெழு பதிர்பதிர் பிகந்து" **(கலி.104)**

என்பது முதலியனவுமாம்.

இவை வேறுபாடு நோக்கி யிதனைச் சொற்சீரடியும் முடுகிய லடியுமெனப் பரிபாடற்கு விதந்தோதினார். (233)

**535. வண்ணந் தாமே அவையென[3] மொழிப. (226)**

---

1. ஓரடி அராகம் - ஓரடியாக வரும் அராகவுறுப்பு
2. வேறுபாடு - உருட்டு வண்ணம் முடுகியல் வண்ணம் வேறுபாடு
3. இவையென - பேரா. நச். பாடம்

## இலக்குவனார்

546. These are said to be *vaṇṇams.*

## இளம்பூரணர்

**535. வண்ணந்......................மொழிப.**

*என்-னின், மேற்கூறப்பட்ட வண்ணமெல்லாந் தொகுத்து உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) வண்ணங்களாவன மேற்சொல்லப்பட்டன என்றவாறு.

இதனாற் பெற்றது என்னை? இப் பொருண்மை மேலே பெறப்பட்டதால் எனின்,[1] ஒரு பயன் கருதிக் கூறினார் என்க. வண்ணம் பாகுபடுகின்றது தொடையினான் அன்றே; இன்னும் வேறொருவாற்றாற் பாகுபடுப்பப் பலவாம் என்பது அறிவித்தல். அது குறில், நெடில், வல்லினம், மெல்லினம், இடையினம் என நிறுத்து அகவல், ஒழுகிசை, வல்லிசை, மெல்லிசை என்ற நான்கனொடும் உறழ இருபதாம். அவற்றைத் தூங்கிசை, ஏந்திசை, அடுக்கிசை, பிரிந்திசை, மயங்கிசை என்பன வற்றோடுறழ நூறாம். அவற்றைக் குறிலகவற் றூங்கிசை வண்ணம், நெடிலகவற் றூங்கிசை வண்ணம் என ஒருசாராசிரியர் பெயரிட்டு வழங்குப. (226)

## பேராசிரியர்

**546. வண்ணந்......................மொழிப.**

*இது புறனடை.*

(இ-ள்) வண்ணமென்பன சந்தமாதலான் அச் சந்த வேற்றுமை செய்வன இவையல்லதில்லை என்றவாறு.

எனவே, என் சொல்லப்பட்டதாம்; நான்கு பாவினொடும் இவற்றை வைத்துறழவும், அவை மயங்கிய பொதுப்பா இரண்டினோடும் உறழவும் நூற்றிருபதாகலாலும், உயிர்மெய் வருக்கமெல்லாவற்றோடும் உறழ்ந்து பெருக்கின் எத்துணையும் பலவாகலும், இனிப் பிறவாற்றாற் சிலபெயர் நிறீஇ அவற்றால் உறழ்ந்து பெருக்க வரையறையிலவாகலும் உடைய வாயினும் இவ் விருபது வகையானல்லது சந்தவேற்றுமை விளங்கா தென்பது கருத்து. (234)

## நச்சினார்க்கினியர்

**234. வண்ணந்......................மொழிப.**

---

1. இதற்குப் பேராசிரியர் விளக்கம் நன்று.

*இது புறனடை.*

(இ-ள்) சந்தவேற்றுமை செய்வன இவையல்லது வேறில்லை எ-று.

'வண்ண' மாவது சந்தம். 'தாமே' யென அவற்றின் சிறப்புக் கூறிற்று.

இதன் கருத்துப் பாக்களோடும் பிறவற்றோடும் உறழ அது பல வகைப்படுத்தினால் வரையறையின்றாமாயினும் அவையெல்லாம் இருபதின் கூறாகிய சந்தவேற்றுமை யாவதல்லது சந்த வேற்றுமை விளங்காவாறாயிற்று. (234)

**27. அம்மை**

**536. *சின்மென் மொழியால் சீர்புனைந் தியாப்பின்[1]
அம்மை தானே[2] அடிநிமிர் வின்றே. (227)**

## இலக்குவனார்

547. While describing the nature of *vanappu ammai* is the verse which is composed of short and sweet in limited lines.

## பி.இ.நூ.

இ.வி.754

அம்மை தானே அடிநிமிர் பின்றிச்
சின்மென் மொழியால் சீர்புனைந் தியாத்தலும்

## இளம்பூரணர்

**536. சின்மென்........................வின்றே.**

*என்-னின், நிறுத்தமுறையானே அம்மையாகிய செய்யுள் உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) சிலவாய் மெல்லியவாகிய மொழியினானே தொடுக்கப்பட்ட அடிநிமிர்வில்லாத செய்யுள் அம்மையாம் என்றவாறு.

---

* 'வனப்பியல் தானே வகுக்குங் காலை' - இவ் வரி முதலில் கொண்டு தொடங்குவது பேராசிரியர் பாடம்

1. தாய பனுவலோடு - பேரா. நச். பாடம், தாய பனுவலின் - நச். பாடம்

2. தாமே - நச். பாடம்

(உ-ம்)"அறிவினான் ஆகுவ துண்டோ பிறிதினோய்
தன்னோய்போற் போற்றாக் கடை" (குறள்.315)

என வரும். (227)

## பேராசிரியர்

**547. வனப்பிய றானே......................பின்றே.**

இது தொகைச்சூத்திரத்துள்,

"ஆறுதலை யிட்ட வந்நா லைந்தும்" (313)

எனக் கூறுசெய்து நிறீஇப் பின்னர் எட்டுறுப்புக் கூறினானன்றே? இவை அவற்றோ டொத்த இலக்கணத்த வன்மையான்; என்னை? அவை ஓரோ செய்யுட்கே ஓதிய உறுப்பாகலானும் இவை பல செய்யுளுந் திரண்ட வழி இவ் வெண்வகையும்பற்றித் தொடுக்கப்படுமெனக் கூறப்பட்ட தாகலானு மென்பது. இவற்றை வனப்பென்று கூறப்படுமாறென்னை? அச் சூத்திரத்துப் பெற்றிலமாலெனின், வனப்பென்பது, பெரும்பான்மை யும் பல உறுப்புந் திரண்டவழிப் பெறுவதோர் அழகாகலின் அவ்வாறு கோடும், அதனாற் பல செய்யுளும் உறுப்பாய்த் திரண்டு பெருகிய தொடர்நிலையுதே வனப்பென்னும் பெயர்ப்பகுதிவகையான் ஏற்பதென்பது. அஃதேல், இவ் வெட்டுந் தனிவருஞ் செய்யுட்கண் வந்தால் அழகு செய்யாவோ வெனின், அவைபோல இவை தனிவரும் செய்யுட்கு மாகுமென்றற்கன்றே அவ் விருபத்தா றுறுப்போடும் இவற்றை ஓரினப்படுத்து ஓதியதென்பது. அஃது இயைபிற் கொப்ப வாராதென்பது முன்னர்ச் (522) சொல்லுதும். இதனானே முன்னை யுறுப்புகள் தொடர் நிலைச் செய்யுட்கு வருமென்பதூஉங் கொள்க. அல்லாக்கால், மாத்திரை முதலாகிய ஓரோ வுறுப்பான் அழகு பிறவாதாகிய செல்லும் இவற்றையே வனப்பென்று ஓரோ செய்யுட்கே கொள்ளினென்பது. இங்ஙனங் இருபத் தாறும் எட்டுமென வகுப்பவே அவை அகமென்பன தனிநிலைச் செய் யுட்கு முற்கூறப்படா, இத் தொடர்நிலைச் செய்யுட்கு முற்கூறுமென்பது; இனி, இவற்றைச் சூத்திரத்தான் வனப்பென்னுங் குறி யெய்துவிக்க வேண்டுவானாகச் சூத்திரத்தை,

"வனப்பிய றானே வகுக்குங் காலைச்
சின்மென் மொழியாற் றாய பனுவலின்" (547)

என்பது பாடமாக உரைத்தானென்க; அதுவும் அறிந்தவாறே கொள்க.[1]

(இ-ள்) சிலவாய மெல்லியவாய சொல்லோடும் இடையிட்டு வந்த பனுவலிலக்கணத்தோடும் அடிநிமிர்வில்லது அம்மையாம் என்றவாறு.

'அடிநிமிராது' எனவே அம்மையென்பது முழுவதும் ஒருசெய்யுளாகல் வேண்டும்; வேண்டவே, அஃது உறுப்பன்றாகிய

1. இதுவரை யுள்ளனவற்றை நச்சினார்க்கினியரின் சூத்திர முகவுரையினைப் பார்த்துத் தெளிக.

செல்லும். அதனை உறுப்பெனல் வேண்டுமாதலான் அடிநிமிரா தெனப்பட்ட செய்யுள் உறுப்பாக அவை பல தொடர்ந்து முடிந்து ஈண்டுச் செய்யுளாமென்பது. சிலவாக வென்பது, எண்ணுச் சுருங்குதல். மெல்லியவாதல், சிலவாகிய சொற்கள் ஏழுத்தினான் அகன்று காட்டாது சிலவெழுத்தினான் வருவது. அடிநிமிராதென்றது, ஐந்தடியின் ஏறாதென்றவாறு.

'தாய பனுவலோ'டென்றது, அறம், பொருள், இன்ப மென்னும் மூன்றற்கும் இலக்கணஞ் சொல்லுப (போன்று) வேறிடையிடை அவை யன்றியுந் தாய்ச்செல்வதென்றவாறு; அஃதாவது, பதினெண்கீழ்க் கணக்கென வுணர்க. அதனுள், இரண்டடியானும், ஐந்தடியானும் ஓரோ செய்யுள் வந்தவாறும், அவை சிலவாய மெல்லிய சொற்களான் வந்தவாறும், அறம், பொருள், இன்பமென அவற்றுக்கு இலக்கணங் கூறிய பாட்டுப் பயின்று வருமாறும் கார்நாற்பது, களவழி நாற்பது முதலாயின வந்தவாறுங் கண்டுகொள்க.

"பொருள்கருவி காலம் வினையிட னோ டைந்து
மிருடீர வெண்ணிச் செயல்" (குறள். 675)

என்பது, இலக்கணங் கூறியதாகலிற் பனுவலோ[1] டென்றான்.

"மலர்காணின் மையாத்தி நெஞ்சே யிவள்கண்
பலர்காணும் பூவொக்கும் மென்று" (குறள். 1112)

என இஃது இலக்கியமாகலாற் றாய பனுவ லெனப்பட்டது.

இவை தனித்துவரினும் அவ் வனப்பெனப்படும்; தாவுதலென்பது, இடையிடுதல். இவ் விருவகையுஞ் செய்யுளெனப்படும். அம்மையென்பது, குணப்பெயர்; அமைதிப்பட்டு நிற்றலின் அம்மையென்றாயிற்று. அதனுள் உறுப்பாகிய பாட்டுகடோறும் மாத்திரையுறுப்பு முதலாகிய உறுப்பினுள் ஏற்பன பலவும் வருமாறும், இவ் வனப்பினுள் ஏற்பன பலவும் வருமாறும் அறிந்துகொள்க. (235)

## நச்சினார்க்கினியர்

**235. சின்மென்.....................வின்றே.**

இதன் தொகைச்சூத்திரத்துள் 'ஆறுதலை யிட்ட வந்நா லைந்தும்' எனக் கூறுபடுத்தி வேறு நிறீஇப் பின்னர் எட்டுறுப்பெனக் கூறிய தென்னை யெனின், அவை ஓரோ செய்யுட் கோதிய வுறுப்பென்பதூஉம், இவை பல செய்யுளுந் திரண்டவழி இவ் வெட்டுறுப்பும்பற்றித் தொகுக்கப்படு மென்பதூஉம் அறிவித்தற்கெனக் கொள்க. இவற்றை வனப்பென்று பெயர் கூறிற்றுப் பலவுறுப்புந் திரண்டவழிப் பெறுவதோரழகாதலின்.

1. பனுவல் - இலக்கணம் கூறும் பாடல்

இப் பெயர் சூத்திரத்தாற் பெறவேண்டுவார் "வனப்பிய றானே வகுக்குங் காலைச், சின்மென் மொழியால்" எனப் பாடமோதுப. இது பெரும்பான்மை பல செய்யுளுறுப்பாய்த் திரண்டு பெருகிய தொடர்நிலைக்குப் பெறுவதோ ரழகென்பதூஉம், சிறுபான்மை தனிச் செய்யுட்கும் இவ் வழகு கொள்ள வேண்டுமென்பதூஉம், இருபத்தாறு உறுப்பும் அங்ஙனந் திரண்ட செய்யுட்கு முரித்தென்பதூஉம் உணர்த்துதற்குத் தொகைச் சூத்திரத்தைப் பிரித்தோதிப் பின்னும் ஓரினப் படுத்தி யொரு சூத்திரமாகவே யோதினாரென்றுணர்க. இவ் வனப்பை ஒரோ செய்யுளுட் கொள்ளின் மாத்திரை முதலியவற்றின் அழகு பிறவாதாம். இங்ஙனம் வகுப்பவே தனிநிலைச் செய்யுளுந் தொடர்நிலைச் செய்யுளும் எனச் செய்யு ளிரண்டாயிற்று. இனிக் கூறுகின்றன தொடர்நிலைச் செய்யுளென் றுணர்க.

இது, முறையே அம்மை கூறுகின்றது. அம்மை குணப்பெயர். அமைதிப்பட்டு நிற்றலின் அம்மையாயிற்று.

(இ-ள்) சின்மென் மொழியால் - சின்மையாய் மெல்லியவாய சொல்லானும், தாய பனுவலின் - இடையிட்டு வந்த பனுவல் இலக்கணத்தானும், அடிநிமிர்வின்றுதான் அம்மை - அடிநிமிர்வின்றாய் வருவதுதான் அம்மை எனப்படும் எ-று.

அடிநிமிராதென்றது ஆறடியின் ஏறாமையை. சிலவாதல் சொல்லெண்ணுச் சுருங்குதல்.

மெல்லியவாதல் சிலவாகிய சொற்களும் எழுத்தினான் அகன்று காட்டாது சிலவெழுத்தான் வருதல்.

'தாய பனுவலின்' என்பது அறம் பொரு ளின்ப மென்னு மூன்றற்கு மிலக்கணங் கூறுவன போன்றும் இடையிடையே அன்றாயுந் தாவிச் செல்வதென்றவாறு. அங்ஙனம் வந்தது பதினெண்கீழ்க்கணக்கு. அதனுள் இரண்டடியானும் ஐந்தடியானுஞ் சிறுபான்மை ஆறடியானும் ஒரோ செய்யுள் வந்தவாறும் அவை சின்மென் மொழியாய் வந்தவாறும் அறம்பொரு ளின்பத் திலக்கணங் கூறிய பாட்டுகளும் பயின்று வந்த வாறும் இடையிடையே கார்நாற்பதுங் களவழிநாற்பது முதலியன வந்த வாறுங் காண்க. உள்ளுறுப்பாய்ப் பதினெட்டையும் வனப்பெனப்படு மென்றுங் கொள்க.

"பொருள்கருவி காலம் வினையிடனோ டைந்து
இருடீர வெண்ணிச் செயல்." (குறள்.675)

இஃது இலக்கணங் கூறலிற் 'பனுவலி' னென்றார்.

"மலர்காணின் மையாத்தி நெஞ்சே யிவள்கண்
பலர்காணும் பூவொக்கு மென்று." (குறள்.1112)

இஃது இலக்கிய மாதலின் 'தாய' வென்றார். தாவுதல் இடையிடுதல். அதனுள்ளுறுப்பாகிய பாட்டுகள்தோறும் மாத்திரை முதலிய வுறுப்புகளேற்பன பலவும் வருமாறும் இவ் வனப்பெட்டனுள் ஏற்பன பலவும் வருமாறு முணர்க.

ஆசாரக்கோவையுள் "ஆரெயின் மூன்றும்" (தற்சிறப்புப் பாயிரம்) ஆறடியாற் சிறுபான்மை வந்தது. (235)

## சிவலிங்கனார்

**வனப்பியல்...................................வின்றே.**

(இ-ள்) வனப்பியலை வகுத்துச் சொல்லும்போது அவற்றுள் ஒன்றான அம்மை என்பது சிலவாய மென்மையாய சொற்களால் சீரமைத்துச் செய்யின் அது அம்மை யெனப்படும்; அம்மை அடிமிகுந்து வருவது இல்லை, எ-று.

பெரும்பாலும் இரண்டடி முதல் நான்கடியளவே வருவதாம். அவை திருக்குறள் நாலடியார் போல்வனவற்றுப் பாக்கள்.

(உ-ம்) "இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்
நல்லாற்றின் நின்ற துணை." (குறள்.41)

அம்மை முதலிய வனப்புகள் தனிநிலைச் செய்யுட்கும் தொடர்நிலைச் செய்யுட்கும் கொள்ளலாம். திருக்குறள், சீவகசிந்தாமணி முதலியன தொடர்நிலைச் செய்யுள். எனினும் இவற்றின் இடையிடையே வனப்புகள் பல தனித்தனி செய்யுள்களில் வந்ததுள்ளன காணலாம்.

'சீர்புனைந்து யாப்பின்' என்ற பாடம் கொள்ளாது 'தாய பனுவலின்' எனப் பாடம் கொண்டு, தாய பனுவல் என்பது அறம், பொருள், இன்பம் கூறிவரும்போதே இடையிடையே அவையின்றி அதாவது இலக்கண வகையின்றி வேறு இலக்கியம் தாவிவருவது என்பர் பேராசிரியரும் நச்சினார்க்கினியரும். உ-ம்: திருக்குறள் அறம், பொருள், இன்ப இலக்கணம் கூறிவரும் அம்மை வனப்பு நூல். எனினும் இலக்கணக் கூற்றிற் படாத வான்சிறப்பு இடை வந்தது காண்க.

### 28. அழகு

**537. செய்யுள் மொழியால் சீர்புனைந் தியாப்பின்
அவ்வகை தானே அழகெனப் படுமே. (228)**

## இலக்குவனார்

548. *Aḻaku* is said to be the verse which is composed of feet made of literary words.

## பி.இ.நூ.

இ.வி. 754

செய்யுள் மொழியால் சீர்புனைந்து யாப்பின்
அவ்வகை தானே அழகெனப் படுதலும்

## இளம்பூரணர்

**537. செய்யுள்.........................படுமே.**

*என்-னின், நிறுத்தமுறையானே அழகென்னும் செய்யுள் உணர்த்துதல் நுதலிற்று.*

**(இ-ள்)** செய்யுட்குரிய சொல்லினாற் சீரைப் புணர்த்துத் தொடுப்பின் அவ்வகைப்பட்ட செய்யுள் அழகு எனப்படும் என்றவாறு.

**(உ-ம்)**"துணியிரும் பரப்பகங் குறைய வாங்கி
மணிகிளர் அடுக்கல் முற்றிய எழிலி
காலொடு மயங்கிய கனையிருள் நடுநாள்
யாங்குவந் தனையோ ஓங்கல் வெற்ப
நெடுவரை மருங்கிற் பாம்பென இழிதருங்
கடுவரற் கலுழி நீந்தி
வல்லியம் வழங்குங் கல்லதர் நெறியே" **(யா.வி.ப.377)**

என வரும்.* (228)

## பேராசிரியர்

**548. செய்யுண்.....................படுமே.**

*இஃது, இரண்டா மெண்ணு முறைமைக்க ணின்ற அழ குணர்த்துதல் நுதலிற்று.*

**(இ-ள்)** திரிசொற் பயிலாது செய்யுளுட் பயின்றுவரும் மொழிகளாற் சீரறுத்துப் பொலிவுபட்ட யாப்பின் பொருள அழகு என்றவாறு.

'அவ்வகை' என்றதனால் அவை வேறுவேறு வந்து ஈண்டிய தொகைநிலைச் செய்யுளென்றவாறு. அவையாவன: நெடுந்தொகை முதலாகிய தொகை யெட்டு மென்றவாறு. அழகு செய்யுண்மொழி யென்ற தென்னை யெனின், அது பெரும்பான்மையாற் கூறினான். அம் மொழி யானே இடைச்சங்கத்தாரும் கடைச்சங்கத்தாரும் இவ் விலக்கணத்தாற் செய்யுள் செய்தார்; இக்காலத்துச் செய்யினும் விலக்கின் றென்பது.

---

* இஃது ஆசிரியச் செய்யுள். இதில் ஆசிரியச் சீர்களும் தளைகளுமே வந்தமை காண்க. இவ்வாறே வெண்பா முதலியனவும் வரின் அழகு எனப்படும். இது இவர் கருத்து. பேராசிரியர் கருத்து வேறு; பார்க்க.

மற்று மூவடிமுப்பது முதலாயின அம்மையெனப்படுமோ அழகெனப்படுமோ வெனின், தாய பனுவலின்மையின் அம்மை யெனப்படா வென்பது. இவற்றுள்ளும் ஒரோ செய்யுட்கண்ணே மாத்திரை முதலாகிய உறுப்பும் ஏற்ற வகையான் வருவன அறிந்து கொள்க. ஒழிந்தனவற்றிற்கும் இஃதொக்கும். (236)

## நச்சினார்க்கினியர்

**236. செய்யுள்........ .................படுமே.**

*இது, முறையே அழகு கூறுகின்றது.*

(இ-ள்) வழக்குச்சொற் பயிலாமற் செய்யுளுட் பயின்றுவருஞ் சொல்லானே சீர்த்துப் பொலிவுபெறப் பாடின் அப் பகுதி அழகெனப் படும் எ-று.

'அவ்வகை' யென்றதனான் அவை வேறாக வந்து ஈண்டிய தொகைநிலைச் செய்யுளென்றுணர்க. அவை நெடுந்தொகை முதலிய தொகையெட்டுமாம். அது தலைச்சங்கத்தாரை யொழிந்தோர் சிறுபான்மை வழக்கும் பெரும்பான்மை செய்யுட் சொல்லுமாக இவ் விலக்கணத்தாற் செய்தவாறே இக்காலத்துச் செய்யினுமாம் எ-று. தாய பனுவ லின்மையின் மூவடிமுப்பது முதலியனவும் அழகின்பாற்படும். இவற்றுள்ளும் ஒரோ செய்யுட்கண் மாத்திரை முதலிய வுறுப்பும் இவையும் ஏற்ற வகையான் வருமாறு காண்க. (236)

## சிவலிங்கனார்

**செய்யுள் மொழி.......................படுமே.**

(இ-ள்) செய்யுளுக்கே யுரிய திரிசொற்களால் சீரமைத்துப் பாடப் படுவது அழகு எனும் வனப்பாம்.

உ-ம்: அகநானூறு, புறநானூறு, பத்துப்பாட்டு முதலியவற்றிற் காண்க.

### 29. தொன்மை

**538. தொன்மை தானே சொல்லுங் காலை[1]**
**உரையொடு புணர்ந்த பழமை மேற்றே. (229)**

## இலக்குவனார்

549. *Thonmai* is the verse which being interpersed with prose, speaks of old.

1. சொல்லுங் காலை என்பது மற்றையோர் பாடத்தில் இல்லை.

## பி.இ.நூ.

**இ.வி.754**

தொன்மை தானே சொல்லுங் காலை
உரையொடு புணர்ந்த பழமைமேற் றாகலும்

## இளம்பூரணர்

**538. தொன்மை தானே............................மேற்றே.**

*என்-னின், நிறுத்தமுறையானே தொன்மைச் செய்யுள் உணர்த்துதல் நுதலிற்று.*

**(இ-ள்)** தொன்மையாவது உரையொடு பொருந்திப் போந்த பழமைத்தாகிய பொருண்மேல் வருவன. அவை இராமசரிதமும், பாண்டவசரிதமும் முதலாகியவற்றின்மேல் வருஞ் செய்யுள். (229)

## பேராசிரியர்

**549. தொன்மை தானே..................மேற்றே.**

*இது, தொன்மை யுணர்த்துதல் நுதலிற்று.*

**(இ-ள்)** தொன்மையென்பது, உரை விராஅய்ப்[1] பழமையவாகிய கதைப்பொருளாகச் செய்யப்படுவது என்றவாறு.

அவை, பெருந்தேவனாராற் பாடப்பட்ட பாரதமும், தகடூர் யாத்திரையும் போல்வன. (237)

## நச்சினார்க்கினியர்

**237. தொன்மை தானே..................மேற்றே.**

*இது, தொன்மை கூறுகின்றது.*

**(இ-ள்)** தொன்மையாவது உரை விராஅய்ப் பழமையாகிய கதைப் பொருளாகச் செய்யப்படுவன எ-று.

அவை பெருந்தேவனார் செய்த பாரதமும், தகடூர் யாத்திரையும் போல்வன. சிலப்பதிகாரமும் அதன்பாற்படும். (237)

## சிவலிங்கனார்

**தொன்மை........................மேற்றே.**

---

1. உரை விராஅய் - உரைச்செய்யுள் இடையிடையே கலந்து

(இ-ள்) தொன்மை என்னும் வனப்பைச் சொல்லுங்காலை, அது பழங்கதைமேல் செய்யப்பட்டு வருவதாகும், எ-று.

(உ-ம்) கந்தபுராணம் முதலியன.

### 30. தோல்

**539. இழுமென் மொழியால் விழுமியது நுவலினும்**
**பரந்த மொழியால் அடிநிமிர்ந் தொழுகினுந்**
**தோலென மொழிப தொன்னெறிப் புலவர்.[1] (230)**

## இலக்குவனார்

550. The poets of ancient language say that *thōl* is that which speaks of noble ideas in sweet words and that which is composed of many lines at wide range.

## பி.இ.நூ.

இ.வி.754

இழுமென் மொழியால் விழுமியது நுவலினும்
பரந்த மொழியால் அடிநிமிர்ந் தொழுகினும்
அன்னவை இரண்டும் தோல்என அறைதலும்

## இளம்பூரணர்

**539. இழுமென்...................புலவர்.**

*என்-னின், நிறுத்தமுறையானே தோலாகிய செய்யுள் உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) இழுமென் மொழியால் விழுமிய பொருளைக் கூறினும் பரந்த மொழியினால் அடிநிமிர்ந்து ஒழுகினும் தோல் என்னுஞ் செய்யுளாம் என்றவாறு.

(உ-ம்)"பாயிரும் பரப்பகம் புதையப் பாம்பின்
ஆயிர மணிவிளக் கழலுஞ் சேக்கைத்
தளிதரு வெள்ளந் துயில்புடை பெயர்க்கும்
ஒளியோன் காஞ்சி எளிதெனக் கூறின்
இம்மை யில்லை மறுமை யில்லை
நன்மை யில்லைத் தீமை யில்லைச்

1. தொன்மொழிப் புலவர் - பேரா. பாடம்

செய்வோ ரில்லைச் செய்பொரு ளில்லை
அறிவோர் யாரஃ திறுவழி இறுகென"
(மார்க்கண்டேயனார் காஞ்சி)

என்றது இழுமென் மொழியால் விழுமியது நுவல வந்தது.

"திருமழை தலைஇய இருள்நிற விசும்பு" (மலைபடு.1)

என்னுங் கூத்தராற்றுப்படை பரந்த மொழியான் அடிநிமிர்ந்து வந்தது. (230)

## பேராசிரியர்

**550. இழுமென்....................புலவர்.**

*இது, முறையானே தோலென்னும் வனப்புணர்த்துதல் நுதலிற்று; அஃதிருவகைப்படும்; கொச்சகக்கலியானும் ஆசிரியத்தானுஞ் செய்யப்படுவன.*

" யாப்பினும் பொருளினும் வேற்றுமை யுடையது" (461)

என்றவழி, தேவபாணியும் காமமும் பொருளாகவன்றியும் கொச்சகக்கலி வருமென்றானாகலான் அவ்வமேல் வருதல் ஈண்டுக் கொள்ளப்பட்டது.

(இ-ள்) இழுமென் மொழியான் விழுமியது நுவலினும் - மெல்லென்ற சொல்லான் அறம், பொருள், இன்பம், வீடென்னும் விழுப் பொருள் பயப்பச் செய்வன; அவை செய்த காலத்துள்ளன கண்டிலம்; பிற்காலத்து வந்தன கண்டுகொள்க.

பரந்த மொழியான் அடிநிமிர்ந்து ஒழுகினும் - ஆசிரியப்பாட்டான் ஒருகதைமேல் தொடுக்கப்பட்டன; அவை பொருட்டொடர்நிலை.

தோல் என மொழிப தொன்மொழிப் புலவர் - தோலென்று சொல்லுப புலவர் என்றவாறு.

'தொன்மொழி' என்றார், பழைய கதையைச் செய்தல்பற்றி; இது, முன்வருஞ் சூத்திரத்தானும் பெறுதும்.[1] (238)

## நச்சினார்க்கினியர்

**238. இழுமென்.................புலவர்.**

*இது, தோல் கூறுகின்றது. அஃது இருவகைய கொச்சகத்தானும் அகவலானுஞ் செய்யப்படுவனவாம்.*

(இ-ள்) இழுமென்னு மோசையையுடைய மெல்லென்ற சொல்லானே அறம், பொருள், இன்பம், வீடென்னும் விழுமிய பொருள்

1. இவர்க்கு உதாரணம் கிடைக்கவில்லை போலும்.

பயப்பச் செய்யினும் ஆசிரியப்பாட்டான் ஒரு கதைமேற் றொடுப்பினுந் தோலென்று கூறுவர் பழநெறியை யறிந்த புலவர் எ-று.

"யாப்பினும் பொருளினும் வேற்றுமை யுடையது" (செய்.149)

என்றவழிப் பொருள் வேறுபட்டுக் கொச்சகத்தாற் செய்யப்படுவன தோலாம் எ-று. இவை பொருட்டொடர். அவை சிந்தாமணி முதலியன.

அவை பாவிற்கினமாகிய துறையும் விருத்தமும்பற்றிச் செய்தன வென்பார்க்கு அப் புலவர் செய்யுட் செய்கின்ற காலத்திற்கு நூல் தொல்காப்பிய மாயவாறும் அவர் இனங்கொள்ளாதவாறும் அவ் வினங்கள்தாம் இலக்கணக் குறைபாடுடையவாறுங் கொச்சகம்போற் சிறப்பின்மையும் முன்னர் விளங்கக் கூறியவற்றைக் கொண்டும் பின்பு செய்த நூல்கள் முன்பு செய்த செய்யுட்கு விதியாகாதவாறுங்கொண்டு மறுக்க. பின்னோர் தாஞ் செய்த நூல்கட்கு அவை உதாரணமாகக் காட்டலின் அச் செய்யுள் அந் நூல்கட்கு முன்னாயவாறும் உணர்க.

இனித் தொல்காப்பியனாரை யொழிந்த ஆசிரியர் பதினொருவருட் சிலர் இனமுங் கொண்டார். அதுபற்றி யாப்பருங்கல முதலியவற்றினும் இனங்கொண்டா ரென்பார்க்கு அவர்கள் அகத்தியனார்க்கு மாறாக நூல் செய்தவராவர். அவை வழிநூ லெனப்படாவென்று மறுக்க.

இனி, ஆசிரியப்பாவான் அடிநிமிர்ந்து வந்தன தேசிகப்பா[1] முதலியன. (238)

## சிவலிங்கனார்

**இழுமென்.........................புலவர்.**

(இ-ள்) மென்மையான ஓசையுடைய சொற்களால் விழுமிய பொருளான அறம், பொருள், இன்பங்களை வைத்துச் செய்யப்படுவதும், பலவாறு பரந்த சொற்களைக் கொண்டு மிக்க அடிகளால் செய்யப் படுவனவும் என இருவகையில் வரும் தோல் எனும் வனப்பு என்பர், எ-று.

(உ-ம்) "பாயிரும் பரப்பகம்"

எனும் மார்க்கண்டேயனார் பாட்டு.

இது முன்னதன் உதாரணம்.

பத்துப்பாட்டுப் பாக்கள் பின்னதன் உதாரணம்.

### 31. விருந்து

**540. விருந்தே தானும்**
**புதுவது புனைந்த[2] யாப்பின் மேற்றே. (231)**

1. மறைந்துபட்டது இந் நூல்.
2. கிளந்த - பேரா. நச். பாடம்

## இலக்குவனார்

551. *Virunthu* is the verse which speaks of new ideas in the new way.

## பி.இ.நூ.

இ.வி. 754

விருந்தே தானே பொருந்தக் கூறின்
புதுவது புனைந்த யாப்பின்மேற் றாதலும்

## இளம்பூரணர்

**540. விருந்தே....................மேற்றே.**

*என்-னின், நிறுத்தமுறையானே விருந்தென்னுஞ் செய்யுள் உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) விருந்தாவது முன்புள்ளார் சொன்ன நெறிபோய்ப் புதிதாகச் சொன்ன யாப்பின் மேலது என்றவாறு.

புதிதாகப் புனைதலாவது ஒருவன் சொன்ன நிழல்வழியன்றித் தானே தோற்றுவித்தல். அது வந்தவழிக் காண்க.[1]

இது பெரும்பான்மையும் ஆசிரியப்பாவைக் குறித்தது. (231)

## பேராசிரியர்

**551. விருந்தே தானும்........................மேற்றே.**

(இ-ள்) விருந்துதானும் புதிதாகப் பாடுந் தொடர்நிலை மேற்று என்றவாறு.

'தானும்' என்ற உம்மையான் முன்னைத் தோலெனப்பட்ட தூஉம் பழைய கதையைப் புதிதாகச் சொல்லியதாயிற்று. இது பழங்கதை மேற்றன்றிப் புதிதாகச் சொல்லப்படுதல் ஒப்புமையின் உம்மையான் இறந்ததுதழீஇயினா னென்பது. 'புதுவது கிளந்த யாப்பின் மேற்று' என்ற தென்னையெனின், புதிதாகத் தாம் வேண்டியவாற்றாற் பல செய்யுளுந் தொடர்ந்துவரச் செய்வது. அது, முத்தொள்ளாயிரமும், பொய்கையார் முதலாயினோர் செய்த அந்தாதிச் செய்யுளுமென வுணர்க. கலம்பகம் முதலாயினவுஞ் சொல்லுப. (239)

## நச்சினார்க்கினியர்

**239. விருந்தே தானும்.................மேற்றே.**

---

1. மற்றையோர் உரையிற் காண்க.

*இது, விருந்து கூறுகின்றது.*

(இ-ள்) விருந்தென்று கூறப்படுவதுதானும் புதிதாகத் தொடுக்கப் படுந் தொடர்நிலைச் செய்யுளின்மேற்று எ-று.

'தானு' மென்ற வும்மை யிறந்ததுதழீஇயிற்று. முற்கூறிய தோல் பழைய கதையைப் புதிதாகக் கூறலென்றும், இது பழையதும் புதியது மாகிய கதைமேற்றன்றித் தான் புதிதாகப் படைத்துத் தொடர் நிலைச் செய்யுள் செய்வதென்றும் பொருள் தருதலின். அவை முத்தொள் ளாயிரமும் பின்னுள்ளார் பாட்டியன் மரபிற் கூறிய கலம்பகச் செய்யுள் முதலியவற்றைப் பாடுதலுமாயிற்று. (239)

**சிவலிங்கனார்**

**விருந்தே....................மேற்றே.**

(இ-ள்) விருந்து எனும் வனப்பாவது, அவ்வக் காலத்துப் புலவரால் தாம் வேண்டியவாறு புனையும் யாப்பின் மேலது, எ-று.

(உ-ம்) இக்காலத்துப் புதுக்கவியைக் கொள்க.

## 32. இயைபு

**541. ஞகார முதலா னகார ஈற்றுப்[1]**
**புள்ளி இறுதி இயைபெனப் படுமே. (232)**

**இலக்குவனார்**

552. *Iyaipu* is that which has from *ñ* to *ḷ* as ending-consonants.

**பி.இ.நா.**

இ.வி. 754

ஞணநம னயரல வழள என்னும்
புள்ளி யிறுதி யியைபுஎனப் புகறலும்

**இளம்பூரணர்**

**541. ஞகார முதலா........................படுமே.**

*என்-னின், நிறுத்தமுறையானே இயைபாமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) ஞணநமன யரலவழள என்னும் பதினொரு புள்ளியும் ஈறாகவருஞ் செய்யுள் இயைபென்னுஞ் செய்யுளாம் என்றவாறு.

1. ஞகார முதலா ளகார வீற்று - பேரா. நச். பாடம்

உதாரணம் வந்தவழிக் காண்க.[1] (232)

## பேராசிரியர்

552. ஞகாரை..........................படுமே.

*இஃது இயைபுணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) ஞணநமன யரலவழள வென்னும் பதினொரு புள்ளி யீற்றினுள் ஒன்றனை இறுதியாகச் செய்யுஞ் செய்யுள் பொருட்டொடராகவுஞ் சொற்றொடராகவுஞ் செய்வது இயைபெனப்படும் என்றவாறு.

இயைபென்றதனானே பொருளும் இயைந்து சொல்லும் இயைந்து வருமென்பது கருத்து; சீத்தலைச்சாத்தனாராற் செய்யப்பட்ட மணிமேகலையும் கொங்குவேளிராற் செய்யப்பட்ட தொடர்நிலைச் செய்யுளும் போல்வன. அவை னகார ஈற்றான் இற்றன. மற்றையீற்றான் வருவனவற்றுக்கும் ஈண்டு இலக்கணம் உண்மையின் இலக்கியம் பெற்ற வழிக் கொள்க. இப்பொழுது அவை வீழ்ந்தன போலும்.

பரந்த மொழியான் அடிநிமிர்ந்தொழுகிய தோலொடு இதனிடை வேற்றுமை யென்னையெனின், அவை உயிரீற்றவாதல் பெரும்பான்மை யாகலான் வேறுபாடுடைய சொற்றொடரான் வருதலு முடையவென்பது. சொற்றொடரென்பது, அந்தாதி யெனப்படுவது; என்றதனான், உயிரீற்றுச் சொற்றொடர் சிறுபான்மை யென்பது கொள்க. (240)

## நச்சினார்க்கினியர்

240. ஞகாரை..........................படுமே.

*இஃது இயைபு கூறுகின்றது.*

(இ-ள்) ஞணநமன யரலவழள என்னும் பதினொரு புள்ளியுள் ஒன்றனை யீறாகக்கொண்டு செய்யுளைப் பொருட்டொடராகச் செய்வது இயைபெனப்படும் எ-று.

'இயை'பென்றதனானே பொருளியைதல் பெற்றாம். பரந்த மொழியால் அடிநிமிர்ந்த தோல் உயிரீற்றவாயே வரும். னகர வீற்றா னிற்றுப் பொருடொடர்ந்தன மணிமேகலையும், உதயணன் கதையும். ஒழிந்த வொற்றுகளுக்கும் இலக்கணமுண்மையின் இலக்கியம் இக்காலத்து வீழ்ந்தன போலும்.

'எனப்படுவ' தென்றதனான் இக்காலத்தார் கூறும் அந்தாதிச் சொற்றொடருங் கொள்க. (240)

1. பெருங்கதை னகர ஒற்றான் முடிவது.

## சிவலிங்கனார்

ஞகாரை..............படுமே.

(இ-ள்) இயைபு என்னும் வனப்பாவது ஞணநமன யரலவழள என்னும் மெய்களுள் ஒன்றை இறுதியாக முடித்துச் சொல்லும் பொருளும் இயைந்து வருவது, எ-று.

(உ-ம்) மணிமேகலை, பெருங்கதை. இது ஆசிரியப்பாவால் வருவது.

### 33. புலன்

542. தெரிந்த[1] மொழியாற் செவ்விதிற் கிளந்து
தேர்தல்[2] வேண்டாது குறித்தது தோன்றிற்
புலனென மொழிப புலனுணர்ந் தோரே. (233)

## இலக்குவனார்

553. *Pulaŋ* is called, by those who are well versed, as having the language of the street, the content being easily understood without (the need of, pondering over it).

## பி.இ.நா.

இ.வி. 754

தெரிந்த மொழியாற் செவ்விதிற் கிளந்து
தேர்தல் வேண்டாது குறித்தது தோன்றின்
புலன் எனப்படுதலும்

## இளம்பூரணர்

542. தெரிந்த..........................தோரே.

*என்-னின், நிறுத்தமுறையானே புலன் என்னுஞ் செய்யுள் உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) வழக்கச் சொல்லினானே தொடுக்கப்பட்டு ஆராய வேண்டாமற் பொருள் தோன்றுவது புலனென்னுஞ் செய்யுளாம் என்றவாறு.

(உ-ம்)"பாற்கடல் முகந்த பருவக் கொண்மூ
வார்செறி முரசின் முழங்கி ஒன்னார்

1. சேரிமொழியால் - பேரா. நச். பாடம்
2. ஓதல் - நச். பாடம்

மலைமுற் றின்றே வயங்குதுளி சிதறிச்
சென்றவள் திருமுகங் காணக் கடுந்தேர்
இன்றுபுகக் கடவுமதி பாக உதுக்காண்
மாவொடு புணர்ந்த மாஅல் போல
இரும்பிடி யுடைய தாகப்
பெருங்காடு மடுத்த காமர் களிறே” (யா.வி.ப.379)

என வரும். (233)

## பேராசிரியர்

553. சேரி மொழியாற்..................தோரே.

*இது, புலனாமா றுணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) சேரிமொழியென்பது பாடிமாற்றங்கள்.[1] அவற்றானே செவ்விதாகக் கூறி ஆராய்ந்து காணாமைப் பொருட்டொரானே தொடுத்துச் செய்வது புலனென்று சொல்லுவர் புலன் உணர்ந்தோர் என்றவாறு.

அவை விளக்கத்தார் கூத்து முதலாகிய நாடகச் செய்யுளாகிய வெண்டுறைச் செய்யுள் போல்வன வென்பது கண்டுகொள்க. (241)

## நச்சினார்க்கினியர்

241. சேரி மொழியால்..................தோரே.

*இது, புலன் கூறுகின்றது.*

(இ-ள்) பாடி மாற்றங்களானே செவ்விதாகக் கூறப்பட்டு ஆராய்ந்து காணாமை பொருள் தானே தோன்றச் செய்வது புலனென்று கூறுவார் அறிவறிந்தோர் எ-று.

அவை விளக்கத்தார் கூத்து முதலிய வெண்டுறைச் செய்யுளென்று கொள்க. (241)

## சிவலிங்கனார்

தெரிந்த மொழி..................தோரே.

(இ-ள்) உலகவழக்குச் சொற்களால் நன்றாக வெளிப்படுத்தி அறிவினால் ஆராய்ந்து உணரவேண்டாமல் புலவன் தான் கருதிய பொருள் தோன்றுமாறு செய்யும் செய்யுள் புலன் என்னும் வனப்பாம் என்பர் அறிவுடையோர், எ-று.

'தெரிந்த மொழி' என்பதை விடுத்துச் 'சேரிமொழி' எனப் பாடங்கொண்டு, சேரிமொழியாவது பாடி (சிற்றூர்) மாற்றங்கள் என்பர்

1. பாடி மாற்றம் - ஊர்வழக்குச் சொற்கள். பாடி - சிற்றூர்

பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் தெரிந்தமொழி சேரிமொழி இரண்டும் ஒன்றே.

புலன் - வெளிப்படையாற் புலப்படுவது.

(உ-ம்)"அம்மையே அப்பா ஒப்பிலா மணியே
அன்பினில் விளைந்தவா ரமுதே
பொய்ம்மையே பெருக்கிப் பொழுதினைச் சுருக்கும்
புழுத்தலைப் புலையனேன் தனக்குச்
செம்மையே யாய சிவபதம் அளித்த
செல்வமே சிவபெரு மானே
இம்மையே யுன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே." (திருவருட்பா)

### 34. இழைபு

**543. ஒற்றொடு புணர்ந்த வல்லெழுத் தடங்காது[1]
குறளடி முதலா ஐந்தடி ஒப்பித்து
ஓங்கிய மொழியான் ஆங்கவண்[2] மொழியின்
இழைபின் இலக்கணம் இயைந்த தாகும். (234)**

## இலக்குவனார்

554. The beauty of *ilaipu* is to have no hard letters in the company of hard consonants being composed of any of five lines from short line (kural) in lofty language.

## பி.இ.நா.

இ.வி. 754

ஒற்றொடு புணர்ந்த வல்லெழுத் தடக்காது
குறளடி முதலா ஐந்தடி காறும்
ஓங்கிய சொல்லான் ஆங்கனம் மொழியின்
இழைபுஎனப் படுதலும் எய்தும் என்ப.

## இளம்பூரணர்

**543. ஒற்றொடு புணர்ந்த..............தாகும்.**

*என்-னின், நிறுத்தமுறையானே இழைபாமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

---

1. அடக்காது - பேரா. நச். பாடம்
2. ஆங்கனம் ஒழுகின் - பேரா. நச். பாடம்.

(இ-ள்) ஒற்றொடு புணர்ந்த வல்லெழுத்தடங்காது ஆசிரியப்பாவிற் கோதப்பட்ட நாலெழுத்தாதியாக இருபதெழுத்தின் காறும் உயர்ந்த பதினேழு நிலத்தும் ஐந்தடியும் முறையானே வரத்தொடுப்பது இழைபு என்னும் செய்யுளாம் என்றவாறு.

(உ-ம்.) "பேர்ந்து சென்று சார்ந்து சார்ந்து
தேர்ந்து தேர்ந்து மூசி நேர்ந்து
வண்டு சூழ விண்டு வீங்கி
நீர்வாய் கொண்டு நீண்ட நீலம்
ஊர்வாய் ஊதை வீச ஊர்வாய்
மணியேர் நுண்டோ டொல்கி மாலை
நன்மணம் கமழும் பன்னெல் ஊர!
அமையேர் மென்றோள் ஆயரி நெடுங்கண்
இணையீ ரோதி ஏந்திள வனமுலை
இறும்பமென் மலரிடை யெழுந்த மாவின்
நறுந்தழை துயல்வரூஉம் செறிந்தே ரல்குல்
அணிநடை அசைஇய அரியமை சிலம்பின்
மணிமருள் வணர்குழல் வளரிளம் பிறைநுதல்
ஒளிநிலவு வயங்கிழை உருவுடை மகளொடு
நளிமுழவு முழங்கிய அணிநிலவு நெடுநகர்
இருந்தளவு மலரளவு சுரும்புலவு நறுந்தொடை
கலனளவு கலனளவு நலனளவு நலனளவு
பெருமணம் புணர்ந்தனை என்பவஃ
தொருநீ மறைப்பின் ஒழிகுவ தன்றே" (யா.வி.ப. 381)

என வரும்.* (234)

## பேராசிரியர்

554. ஒற்றொடு..........................தாகும்.

*இஃது, இறுதிநின்ற இழைபிலக்கண முணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) ஒற்றொடு புணர்ந்த வல்லெழுத்து அடக்காது - வல்லொற்றடுத்த வல்லெழுத்துப் பயிலாது; குறளடி முதலா ஐந்து அடி ஒப்பித்து - இருசீரடி முதலாக எழுசீரடியளவும் வந்த அடி ஐந்தனையும் ஒப்பித்து, ஒப்பித்தலென்பது, பெரும்பான்மையான் நாற்சீரடி படுக்கப்பட் டென்றவாறு; ஓங்கிய மொழியான் - நெட்டெழுத்தும் அந் நெட்டெழுத்துப்போல் ஓசை எழும் மெல்லெழுத்தும் லகார ளகாரங்களும் உடைய சொல்லான்; ஆங்கனம் ஒழுகின் - இவையும்,

"சேரி மொழியாற் செவ்விதிற் கிளந்து
தேர்தல் வேண்டாது" (553)

பொருள் புலப்படச் சென்று நடப்பின்;

---

* ஒற்றும் குற்றியலுகரமும் நீக்கி எண்ணின் முதலடியில் நான்கெழுத்து வந்தது காணலாம். இப்படியே பிறவடிகளையும் எண்ணிக் காண்க.

இழைபின் இலக்கணம் இயைந்ததாகும் - இழைபென்று சொல்லப்படும் இலக்கணத்தது என்றவாறு.

அவையாவன: கலியும் பரிபாடலும் போலும் இசைப்பாட்டாகிய செந்துறைமார்க்கத்தனவென்பது. இவற்றுக்குக் காரணந் 'தேர்தல் வேண்டாது பொருள் இனிது விளங்கல் வேண்டும்' என்றது, அவிநயத்திற்கு உரியவாதல் நோக்கியென்பது. மற்றிதனை வேண்டுறைச் செய்யுட்குமுன் வைப்பினென்னெனின், இஃது இசைப்பாட்டாகலின். இனி வருகின்றது இசைத்தமிழாகலின்[1] அதற்குபகாரப்பட இதனை இறுதிக்கண் வைத்தானென்பது. (242)

## நச்சினார்க்கினியர்

**242. ஒற்றொடு......................தாகும்.**

*இஃது, இறுதி நின்ற இழைபு கூறுகின்றது.*

(இ-ள்) ஒற்றொடு புணர்ந்த வல்லெழுத்து அடக்காது - வல்லொற்றடுத்த வல்லெழுத்துப் பயிலாமல், குறளடி முதலா ஐந்தடி ஒப்பித்து - இருசீர் முதல் எழுசீரடியளவும் அவ் வைந்து அடியினையும் ஒப்பித்து, ஓங்கிய மொழியான் ஆங்வனம் ஒழுகின் - நெட்டெழுத்துப்போல் ஓசை தரும் மெல்லெழுத்தும் லகார ளகாரங்களும் உடைய சொல்லானே முற்கூறியவாறே தெரிந்த மொழியால் கிளந்து ஓதல் வேண்டாமல் பொருள் புலப்படச் செய்யும், இழைபின் இலக்கணம் இயைந்ததாகும் - இழையினது இலக்கணம் பொருந்திற்றாம் எ-று.

கழிநெடிலடியானும் வருமென்றாரேனும் எழுசீரின் மிகாதென்று கொள்க.

ஒப்பித்தென்றதனாற் பெரும்பான்மை நாற்சீரடியான் வருஞ் செய்யுட்கண்ணே யொழிந்த நான்கடியும் வருமென்று கொள்க. அவ்வாறு வருவன கலியும் பரிபாடலும் போலு மிசைப்பாட்டாகிய செந்துறை மார்க்கத்தன என்றுணர்க. இவ் வைப்பு இனத்திற்குரியவாதலின் தேர்தல் வேண்டாது பொருள் தோன்றச் செய்க வென்றார்.

இத் தொல்காப்பியனார் மேற்கூறியது இசைத்தமிழாகலின் அதற்கு அதிகாரம்பட இதனை ஈற்றுக்கண் வைத்தார்.

இனி, யாப்பருங்கல முதலியவற்றிற் கூறிய சித்திரகவியினையும் ஈண்டுச் சேரக் கூறுகவெனின், யந்திரமு மந்திரமுமாய்த் தெய்வத்திற்கே யுரியவாகக் கூறும் மிறைக்கவி இம் முப்பத்து நான்குறுப்பும்போல அகனைந்திற்குரிய சான்றோர் செய்யுட் குறுப்பாய் வாரா வென்றும், அத் திணைக்குரிய மரபு வழுவிற்றென்றுங் கருதித் தொல்காப்பியனார்

1. தொல்காப்பியர் இசைத்தமிழ் இலக்கணமும் செய்தாராவர் என்னும் கருத்தினர் பேராசிரியர் என்பது புலப்படும். நச்சினார்க்கினியரும் இக் கருத்தினரே.

கூறாமையானும்; அவற்றதிலக்கணங் கூறிய ஆசிரியரும் அவற்றிற்கு இலக்கியஞ் சான்றோர் செய்யுள்களுட் காணாமையின் "வடவெழுத் தொரீஇய எழுத்தொடு புணர்ந்த சொல்"லானன்றி வடவெழுத்தாற் பெரும்பான்மை வரச் செய்யுள் தாமே செய்து இலக்கியமாகக் காட்டினாராதலானும், யாமும் இம் மிறைக்கவி யிலக்கணம் ஈண்டுக் கூறாமாயினாம். (242)

## சிவலிங்கனார்

**ஒற்றொடு......................தாகும்.**

**(இ-ள்)** இழைபு என்னும் வனப்பின் இலக்கணமானது, ஒற்றொடு சேர்ந்த வல்லெழுத்துகள் அடங்கி வாராமல் குறளடி, சிந்தடி, அளவடி, நெடிலடி, கழிநெடிலடி என்னும் ஐந்தடிகளையும் நாற்சீர்களான் ஒப்பாக வைத்து நெட்டோசைபடும் நெடில், மெல்லின இடையெழுத்துகளைப் புனையின் அதுவாம், எ-று

ஒற்றெழுத்துச் சேர்ந்த வல்லெழுத்து வருதலாவது "முத்தைத்தரு பத்தித் திருநகை" என்பது போல வருதல். இழைபுக்கு இது வருதல் கூடாது.

ஐந்தடிகளையும் ஒப்பித்தல் என்பது எழுத்தெண்ணி அடிவகுக்குங்கால் நாற்சீரடியிலேயே எண்ணி வகுத்தலை. இதற்கு உதாரணம் "போந்து போந்து சார்ந்து சார்ந்து"என்னும் பாடல். ஐந்தடியும் ஒப்பித்தல் என்பது ஒரு செய்யுளில் இருசீரடி முதல் அறுசீரடி வரையுள்ள ஐந்தடிகளும் நாற்சீரடி போலவே இடையிடை வரத் தொடுப்பது என்பர் பேராசிரியரும் நச்சினார்க்கினியரும். அது கலித்தொகை பரிபாடல்களிற் காணலாம்.

ஓங்கிய ஓசையுடைய இழைபை நூலின் இறுதியில் ஆசிரியர் கூறியதனால் அடுத்துத் தாம் செய்யும் இசைத்தமிழ் இலக்கணத்துக்குத் தோற்றுவாய் செய்தாராகக் கூறுவர் பேராசிரியரும் நச்சினார்க்கினியரும். தொல்காப்பியர் இசைநாடகங்களுக்கும் இலக்கணம் செய்தாராவர் என்பது அவர்தம் கருத்துப் போலும்.

**புறனடை**

**544. செய்யுள் மருங்கின் மெய்பெற நாடி**
**இழைத்த இலக்கணம் பிழைத்தன போல**
**வருவன[1] உளவெனும் வந்தவற் றியலால்**
**திரிபின்றி[2] முடித்தல் தெள்ளியோர் கடனே. (235)**

---

1. வருவவுள வெனினும் - பேரா. பாடம், வருப வுளவேனும்-நச். பாடம்

2. திரிவின்றி - பேரா. நச். பாடம்

## இலக்குவனார்

555. It is the duty of the learned to have among the compositions those which seem to have deviated from the rules enjoined fitting them suitably in the said rules.

## இளம்பூரணர்

**544. செய்யுள்........................கடனே.**

*என்-னின், யாப்பிற்கோர் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.*

இது சூத்திரத்தாற் பொருள் விளங்கும். (235)

**செய்யுளியல் இளம்பூரணர் உரை**
**முற்றிற்று.**

## பேராசிரியர்

**555. செய்யுண்..................கடனே.**

*இஃது, இவ் வோத்திற்கெல்லாம் புறனடை கூறுகின்றது.*

(இ-ள்) செய்யுளிடத்துப் பொருள்பெற ஆராய்ந்து தந்திரம் செய்யப்பட்ட இலக்கணத்தின் வழீஇயினபோன்று பின் தோன்றுவன வுளவேல் முற்கூறப்பட்ட இலக்கணத்தோடு திரியாமல் முடித்துக் கோடல் அறிவுடையோரது கடன் என்றவாறு.

அவை எண்சீர் முதலாயின வரிற் கழிநெடிலடிப்பாற் சார்த்திக் கோடலும், ஏது நுதலிய முதுமொழியோடு பாட்டிற்கு இயைபின்றியுந் தொடர்புபடுப்ட'னவும், யாப்பென்னும் உறுப்பின்பாற் கோடலும், பிறவும் ஈண்டோதாதன உளவெனின் அவையுமெல்லாஞ் செய்யுளிலக்கண முடிபாகுமென்றவாறு. (243)

**செய்யுளியல் பேராசிரியர் உரை**
**முற்றிற்று.**

## நச்சினார்க்கினியர்

**243. செய்யுள்...................கடனே.**

*இது, இவ் வோத்திற் கூறிய யாப்பிலக்கணத்திற் கெல்லாம் புறனடை கூறுகின்றது.*

(இ-ள்) செய்யுண் மருங்கின் மெய்பெற நாடி யிழைத்த இலக்கணம் செய்யுளிடத்துப் பொருள்பெற ஆராய்ந்து தந்திரஞ் செய்யப்பட்ட இலக்கணத்தில், பிழைத்தனபோல வருப வுளவேனும் - வழீஇயின போன்று பின்னொன்று வருவனவுளவேனும், வந்தவற்றியலாற் றிரிபின்றி முடித்தல் தெள்ளியோர் கடன் - முற்கூறிய இலக்கணத்தோடு திரியாமல் முடித்துக்கோடல் அறிவுடையோர் கடன் எ-று.

அவை யெண்சீரின் மிக்கனவற்றைக் கழிநெடிலடிப்பாற் சார்த்துவனவும் வெண்பாவாயே வந்து கொச்சகமா யடங்குவனவும் ஆசிரியம் அவ்வாறு வருவனவுங் கொச்சகங்களின் வேறுபாடுந் தொடை வேறுபாடுகளும் பிறவுமாம். (243)

**செய்யுளியல் நச்சினார்க்கினியர் உரை**
**முற்றிற்று.**

**சிவலிங்கனார்**

**செய்யுள்......................கடனே.**

(இ-ள்) செய்யுளுக்குப் பொருள்பெற ஆராய்ந்து என்னால் கூறப் பட்ட இலக்கணம் பிற்காலத்தார்க்குப் பிழைத்தனவாக அமைவன உளவேல் மேற்கூறி வந்த இலக்கணங்களால் அவற்றிற்கும் மாறுபாடில் லாமல் முடித்தல் தெளிந்த அறிவுடையார் கடன், எ-று.

**செய்யுளியல் சிவலிங்கனார் எளியவுரை**
**முற்றும்.**

# தொல்காப்பியம் உரைவளம்

**பொருளதிகாரம் செய்யுளியல்**
**முற்றிற்று.**

* * * * * * * * * * * *

# சூத்திர முதற்குறிப்பகராதி

(எண்-பக்க எண்)

## சொல்லகராதி

**(எண் - சூத்திர எண்)**

வ

# பயன்படுத்தப்பெற்ற நூல்கள்

1. தொல்காப்பியம் - பொருளதிகாரம் - இளம்பூரணர் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1953

2. தொல்காப்பியம் - பொருளதிகாரம் - பேராசிரியர் இரண்டாம் பாகம், சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1935

3. தொல் - பொருள் - செய்யுளியல், நச்சினார்க்கினியர் உரை - மேற்படி கழக வெளியீடு, 1965

4. தொல்காப்பியம் பொருளதிகாரம் (இரண்டாம் பாகம்) பின்னான் கியல்களும் பேராசிரியரும், பிரமஶ்ரீ சி. கணேசையர் பதிப்பு, திருமகள் அழுத்தகம், சுன்னாகம், 1943

5. இறையனாரகப்பொருள் - மேற்படி கழக வெளியீடு, 1953

6. நம்பி அகப்பொருள் - மேற்படி கழக வெளியீடு, 1966

7. இலக்கண விளக்கம் - மேற்படி கழக வெளியீடு, 1973

8. முத்துவீரியம் - மேற்படி கழக வெளியீடு, 1972

9. தொன்னூல் விளக்கம் தமிழ்ப் பதிப்பகம், அடையாறு, சென்னை, 1978

10. Tolkappiyam With Critical Studies - Prof. Ilakkuvanar, Kural Neri Publishing House, Madurai - 6, 1963

# உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
## சென்னை – 600 113

### அண்மை வெளியீடுகள்

| | ரூ.காசு |
|---|---|
| யாப்பருங்கல விருத்தி | 170.00 |
| இராசேந்திரன் (நாடகம்) | 55.00 |
| முல்லை | 25.00 |
| திராவிட மொழியின் மூவிடப்பெயர் | 40.00 |
| தமிழ்நாட்டு வரலாற்றின் இலக்கிய ஆதாரங்கள் கி.மு. 200 – கி.பி. 1300 | 100.00 |
| வெள்ளுடை வேந்தர் தியாகராயரின் வாழ்வும் பணியும் | 65.00 |
| தமிழ் நாடகமேடை முன்னோடிகள் | 40.00 |
| தமிழ்வள்ளல் பாண்டித்துரையார் | 25.00 |
| தேவநேயப் பாவாணரின் மொழியியல் – வரலாற்றுக் கொள்கை | 35.00 |
| தமிழ்விடு தூது | 20.00 |
| கபிலர் | 70.00 |
| கன்னடத்தில் காரைக்காலம்மையார் வரலாறு | 20.00 |
| நாட்டிய நன்னூல் | 25.00 |
| சங்க இலக்கியத்தில் கலையும் கலைக்கோட்பாடும் | 65.00 |
| கதிர்வேற் பிள்ளை – தமிழ்ச் சொல்லகராதி, மூன்று பாகங்கள் | 600.00 |
| எண்பத்து மூன்றில் தமிழ், பகுதி –3 | 30.00 |
| காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோவில் – ஓர் ஆய்வு | 60.00 |
| திருக்குற்றாலநாத சுவாமி கோவில் வரலாறும் பண்பாடும் | 60.00 |
| உத்தர ராம சரிதம் | 30.00 |
| பம்மல் சம்பந்த முதலியாரின் உரைநடை நூல்கள் தொகுதி –1 | 50.00 |
| பம்மல் சம்பந்த முதலியாரின் உரைநடை நூல்கள் தொகுதி –2 | 40.00 |
| சதாசிவப் பண்டாரத்தார் ஆய்வுக் கட்டுரைகள் | 40.00 |
| சங்கத் தமிழர் வாழ்வியல் | 75.00 |
| வேதகிரியார் சூடாமணி நிகண்டு | 65.00 |
| தமிழக மேடைநாடகப் பெண்கலைஞர்கள் குறிப்பேடு | 25.00 |
| A Grammar of Contemporary Literary Tamil | 80.00 |
| Cilappatikaram | 100.00 |
| காதம்பரி மூலமும் வசனமும் | 125.00 |
| Tamil Culture and Civilization | 60.00 |
| Tolkappiyam and Astadhyayi | 110.00 |
| தமிழக மகளிர் தொடக்ககாலம் முதல் ஆறாம் நூற்றாண்டு வரை | 50.00 |
| தொல்காப்பியம் உரைவளம் – பொருள் – செய்யுளியல் பகுதி –1 | 50.00 |
| தடிவீர சுவாமி கதை, வன்னியராயன் கதை | 55.00 |
| சடத்தலம் | 40.00 |
| காத்தவராய நாடகம் | 30.00 |
| மதங்க சூளாமணி | 40.00 |
| பண்டைத் தமிழ் எழுத்துக்கள் | 32.00 |
| தமிழில் நவீன நாடகம் | 70.00 |
| இலக்கியத்தில் சோதிடம் | 65.00 |
| சங்கத் தமிழரின் வழிபாடும் சடங்குகளும் | 80.00 |